### IV.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1958–59—*cont.*

**Mr. SPEAKER :** இப்பொழுது பொது விவாதம் நடக்கும். இன்று கட்சித் தலைவர்கள் எஸ். பக்கிரிசாமி பிள்ளை, பி. எஸ். சின்னதுரை, எம். கல்யாணசுந்தரம் முதலியவர்கள் பேசுவார்கள். அவர்களுக்கு அரை மணி நேரம் ஒதுக்கி இருக்கிறேன். உள் விவகார அமைச்சர் அரை மணி நேரம் பேசப் போவதாக இருப்பதால் 2 மணி நேரம் தான் பாக்கி இருக்கிறது. ஒவ்வொரு அங்கத்தினரும் 10, 10 நிமிஷம் பேசினாலும் 12 அங்கத்தினர்கள் தான் பேச முடியும். அதாவது 8 காங்கிரஸ் அங்கத்தினர்கள், இரண்டு இன்டிபென்டென்ட் அங்கத்தினர்கள், ஒரு தி.மு.க. அங்கத்தினர், ஒரு நேஷனல் டெமொக்ராடிக் பார்ட்டி அங்கத்தினர் பேசலாம். நேரம் ஜாஸ்தி கிடைத்தால் அதிகம் பேரை பேசச் சொல்லலாம். நேற்றே ஒரு காங்கிரஸ் அங்கத்தினர் பேசிவிட்டார். ஆகையால் இன்று விவாதத்தை ஸ்ரீ எம். எஸ். செல்வராஜன் ஆரம்பிப்பார்.

**Sri M. S. SELVARAJAN :** கனம் சபா நாயகர் அவர்களே, சபையின் முன்பு சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் பட்ஜட்டை எல்லோரும் வரவேற்பார்கள் என்று நினைக்கிறேன். கடந்த வருஷத்தில் விழுந்த பள்ளங்களை எல்லாம் சரி செய்து இந்த வருஷத்திய பட்ஜட் கவர்ச்சி குன்றாமல் தயார் செய்யப்பட்டிருக்கிறது என்பதே என்னுடைய அபிப்பிராயம். செலவுகளை ஈடுபடுத்துவதற்காக, அவசியமான செலவுகளை ஈடுபடுத்துவதற்காக 3 விதமான வரிகள் போடப்பட்டு இருக்கின்றன. அவைகள் எந்த அளவுக்கு நியாய உணர்ச்சியோடு, சரியான முறையில் போடப்பட்டிருக்கின்றனவா என்பதை பரிசீலிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இன்றைய நிலையில் எல்லா ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் இருக்கக் கூடிய பொறுப்பை எல்லோரும் கவனிக்க வேண்டும். தேசீய வளர்ச்சி திட்டத்தின் கீழ் பஞ்சாயத்துக்களிலும், ஜில்லா போர்டுகளிலும், முனிஸிபாலிடிகளிலும் நல்ல ரோடு வசதி செய்யப்பட்டிருக்கிறது. அப்படி அமைக்கப்பட்ட ரோடுகளை சரிவர பாதுகாக்க இந்த ஸ்தல ஸ்தாபனங்களுக்கு பெரிய தொகை தேவையாக இருக்கிறது என்பதை நாம் உணர வேண்டும். இதில், பொருளை நல்லவிதமாக, வசதிகள் செய்து கொடுப்பதற்கு உபயோகப் படுத்தப்படுகிறது என்பதை எல்லோரும் கவனிக்க வேண்டும். இப்பொழுது விதிக்கப்போகும் 3 வரிகளும் கூட, ஏழை, எளியவர்கள், அதிகம் சுருக்கமுடியாதபடி, குறைந்த பட்ச விகிதத்தில் போட்டிருப்பது மிகவும் பொருத்தமானது என்று நான் சொன்னேன்.

டீசல் ஆயில் மீது வரியைப் போட்டிருக்கிறார்கள். குறிப்பாக இந்த டீசல் ஆயில் பஸ்ஸும், லாரியும் ஓட்டுவதற்கு உபயோகப்படுத்தப்படுகிறது. பஸ் கம்பனிக்காரர்களும், லாரி கம்பனிக்காரர்களும் இதனால் பாதிக்கப் படுவார்கள் என்று சொன்னால் அதில் உண்மை இல்லை. ஒரு காலன் டீசல் ஆயிலைக் கொண்டு 20 அல்லது 25 மைல் ஓட்டலாம். சக்தி உள்ள ஒரு எஞ்சினையோ அல்லது மோட்டாரையோ ஓட்டும்பொழுது $\frac{1}{2}$ நயா பைசாவுக்கு பதிலாக ஒரு நயா பைசாவாக வரி விதித்திருக்கிறார்கள். இதன் மூலம் வரும் தொகை 70 லட்சம். இந்தத் தொகையை, விவசாய வருமான வரி விதிக்காமலே, டீசல் எண்ணெயில் இன்னும் $\frac{1}{2}$ நயா பைசாவாகக் கூட்டி வரி விதிக்கலாம் என்றும், அதிக பட்சம் 25 நயா பைசா என்பதை 50 நயா பைசாவாக ஆக்கி விடலாம் என்றும் சிலர் சொல்லலாம். அதிகப்படியாக வரி விதித்தாலும் கூட அதை நல்லபடி நடத்துவார்கள் என்று நம்புகிறேன்.

இங்கு அமைக்கக்கூடிய ரோடுகள் அகில இந்தியாவில் புகழ் பெற்றவை. இங்கு நல்ல ரோடு வசதிகள் இருப்பதால் இந்த வரிக்கு யாரும் முணு முணுக்கப் போவது இல்லை. தகுந்த வசதியோடு போக்குவரத்திக்கு லாயக்கான நல்ல ரோடு வசதி வேண்டும் என்பதுதான் அவர்களுடைய தேவை. நல்ல ரோடு வசதி இல்லாததால் ஏற்படக்கூடிய செலவை ஒப்பிட்டுப் பார்க்கும்போது நல்ல ரோடு வசதி செய்வதற்காக கொஞ்சம் பணம் வசூலிப்பதில் ஒன்றும் கஷ்டம் இருக்காது. (பிளாக் டாப்) தார் வசதி செய்து கொடுத்தால் அதுவே அவர்களுக்குப் போதுமானது. இதில் எந்த விதமான குறையும் இருக்காது என்பதே என்னுடைய அபிப்பிராயம்.

பஸ் கட்டண விகிதாசாரம் எல்லாம் பெட்ரோல் விலையை அனுசரித்தே விதிக்கப்பட்டிருக்கிறது. எந்த காரணத்தைக் கொண்டும் பஸ் கட்டணத்தை உயர்த்த வேண்டிய அவசியமே ஏற்படாது.

விவசாய வருமான வரி கூட 3,000 ரூபாய்க்கு மேல் வருமானம் வருகிறவர்களுக்குத்தான் விதித்திருக்கிறார்கள். இது ஏழை விவசாயிகளுக்கு சுமையாக இருக்காது. நடுத்தர விவசாயிகளுக்கு இது ஒரு சுமையாக அமையுமோ என்று நினைப்பதற்கு நியாயம் உண்டு. படிப்படியாக வரி விதிப்பதில் தான் ஜனநாயக ஆட்சியின் சிறப்பு பொருந்தி இருக்கிறது. ஜனங்களுக்குத் தேவையான நல்ல காரியங்களைச் செய்வதற்குத்தான் ஜனநாயக அரசாங்கம் இருக்கிறது. நில உச்ச வரம்பு நிர்ணயிக்கக்கூடிய சட்டம் வர இருக்கிறது. ஆபரேஷனுக்கு முன்பாக ரத்த பரிசோதனை செய்வதைப்போல, இந்த வரியை சமாளிக்கத் தயாராக இருக்கவேண்டும். ரத்த பரிசோதனையின்போது ஏற்பட்ட அதிர்ச்சியை சில நாட்களுக்குள் சமாளித்துக்கொள்ள முடியும். ஏழை விவசாயிகளும், நடுத்தர விவசாயிகளும் இதனால் பாதிக்கப்படமாட்டார்கள் என்பது தான் என்னுடைய அபிப்பிராயம். இதில் உண்மையாக ஏழை விவசாயிகள் பயப்படுவதற்கு இடமே இல்லை. ஏழை விவசாயிகள் பாதிக்கக் கூடாத அளவிற்கு, தக்க விதிகளை ஏற்படுத்தி நியாயமான முறையில் வகுத்துக் கொடுக்க இந்த அரசாங்கத்தால் நிச்சயமாக முடியும். ஆகையால் இந்த வரியைப் பற்றி யாதொரு முணுமுணுப்பும் அவசியமில்லை. மக்கள் நல்ல காரியங்களைத்தான் எதிர்பார்க்கிறார்கள் என்று நான் நினைக்கிறேன்.

ஏழை, எளிய ஹரிஜனங்களுக்கும், பிற்பட்ட மக்களுக்கும் கூட 40 லட்சம் அதிகம் செலவு செய்ய முன்வந்திருப்பது, நல்ல காரியங்களை செய்வதற்கு எடுத்துக் காட்டு என்று நினைக்கிறேன். மத்திய அரசாங்கம் கொடுத்த சமிக்ஞையை வைத்துக்கொண்டு, என்.ஜி.ஓ.-வினருக்கு கொடுக்கும் கல்வி சலுகை மிகவும் வரவேற்கத் தகுந்தது. அவர்களுக்கு தக்க ஊதியம் கொடுப்பதற்கு துணிந்து முன் வர வேண்டும் என்பதே எனது வேண்டுகோள். மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கும், மாகாண சர்க்கார் ஊழியர்களுக்கும் வித்தியாசம் இருக்கக்கூடாது. மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கும், மாகாண சர்க்கார் ஊழியர்களுக்கும் ஒரே அளவு பயிற்சி, ஒரே அளவு கல்வி என்று இருக்கும்போது நமது அரசாங்கம் துணிந்து அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும்.

திருநெல்வேலி ஜில்லாவில் நல்ல காரியத்திற்காக முதல் அமைச்சர் அவர்கள் வந்து $13\frac{1}{4}$ லட்சம் ரூபாய் செலவில் கட்டவிருக்கும் ஆஸ்பத்திரிக்கு அஸ்திவாரம் போட்டார்கள். இந்த வருஷத்தில் அதற்காக காலணா கூட ஒதுக்காதது கண்டு வருந்துகிறேன். இதில் ஏதாவது தவறு இருந்தால் அதைத் திருத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறேன். நாஷனல் ஹைவேஸ் திட்டத்தின் கீழ் கன்னியாகுமரியிலிருந்து கல்கத்தா வரை போகும் 1,200 மைல் ரோடு மத்திய சர்க்காரிடம் ஒப்படைக்க வேண்டும். அப்பொழுது இந்த அரசாங்கத்திற்கு அதற்கு என்று செலவிடப்படும் தொகை மிச்சம் ஆகும்.

2 00 p.m. அடுத்தபடியாக தூத்துக்குடி துறைமுகத்தைப்பற்றி சொல்ல வேண்டியதாக இருக்கிறது. அத்துடன் சேதுசமுத்திரம் திட்டத்தை எடுத்துக்கொண்டு நடத்தினால் அதன் மூலமாக நமக்கு நல்ல வருமானம் கிடைக்கும். ஒரிஸ்ஸாவிற்கு மத்திய அர்சாங்கம் 23 கோடி ரூபாய் உதவியாகக் கொடுத்து மசூலிப்பட்டணம், காக்கினாடா துறைமுகங்களை அபிவிருத்தி செய்திருக்கிறார்கள். அதனால் அந்த அரசாங்கத்திற்கு எவ்வளவோ ரூபாய் வருமானம் வருகிறது. அந்தத் துறைமுகங்கள் அந்த அரசாங்கத்திற்கு ஒரு தனித்துறைமுகமாக இருக்கிறது, அதைப் போலவே நம் ராஜ்யத்திற்கு நாகப்பட்டணம், கடலூர் துறைமுகங்கள் இருக்கின்றன. அத்துடன் தூத்துக்குடி துறைமுகம் இருக்கிறது. மத்திய அரசாங்கத்தினிடமிருந்து கொஞ்சம் தொகையை வாங்கி இந்தத் துறைமுகங்களை அபிவிருத்தி செய்தால் நமது ராஜ்யத்திற்கு அதிகப்படியான வருமானம் எதிர் பார்க்கலாம். செலாவணியில் நாலில் ஒரு பங்கு உப்பு தூத்துக்குடியில்தான்

7th March 1958] [Sri M. S. Selvarajan]

உற்பத்தியாகிறது. அங்குதான் இரண்டு கோடி மணங்கு உப்பு உற்பத்தியாகிறது. அதனால் அந்தத் துறைமுகத்தை எடுத்துக்கொண்டு இருபது அல்லது நாற்பது அடி ஆழம் வெட்டினால் அது ஒரு பெரிய துறைமுகமாக ஆகிவிடும். அதன் மூலம் நமது ராஜ்யத்திற்கு என்று தனியான ஒரு துறைமுகத்தை அமைத்துக்கொண்டு அதன் மூலம் நமது ராஜ்யத்தின் வருமானத்தை பெருக்கிக்கொள்ளலாம். அதன் மூலம் நமக்கு வேண்டிய வருமானம் வரக்கூடிய வசதி இருக்கிறது.

* Sri M. MUNI REDDI : Mr. Speaker, Sir, before coming to the Budget speech of the Hon. Finance Minister, I like to say a few words with regard to the constituency I represented and the constituency I represent, namely, Hosur taluk and Veepanapally firka in Krishnagiri taluk. Sir, they were the disputed areas in the Madras State and after the settlement of the border issue between Andhra and Madras, we are bound to adjust ourselves and I respectfully submit that the Government are also bound to improve that neglected area. In this connection, I like to state that we have made great contribution from Hosur taluk recently in the drive for the Small Savings Scheme and the Hon. Minister for Agriculture, the Hon. Mr. Bhaktavatsalam, who happened to visit that place last month had words of appreciation for that. So, we have and are trying to adjust ourselves in this new set up after the Pataskar's Award.

Sir, I like to take this opportunity to bring to the notice of this House and the Government the assurances that have been given to us by our Hon. Chief Minister at the residence of the Andhra Chief Minister at Hyderabad when the Award was to be announced in the Zonal Council meeting. Sir, I take this opportunity to thank the Government, on behalf of the people of my constituency as well as the people of Hosur taluk, for having sanctioned one Land Mortgage Bank, another for provincialising Local Fund Hospital and the third for starting a Silk Weaving Station in Hosur taluk. Further, for the last seven years, we have been representing on the floor of this House the grievances of the taluk and have submitted more than once that that taluk has been neglected. We are thankful for the schemes that have been sanctioned so far this year.

Now, with regard to the Civil Court. I have been representing this matter often. The Hon. Minister for Home, Mr. Bhaktavatsalam was also pleased to inform me that the matter had been referred to the concerned authorities for examination. Apart from this, once an hon. Member was mentioning on the floor of this House, the question of a Civil Court for his taluk and the Government seem to have stated that unless the question was based on merits, and because the hon. Member wanted, it would not be granted. Our request is that Civil Court for Hosur is not only based on merits, but on justice. Because the Hon. Minister says that he has sent the concerned papers to the concerned authorities for examination, I like to place certain facts before the House and draw the attention of the Government with regard to relevancy of that demand.

[Sri M. Muni Reddi] [7th March 1958

Sir, there are 67 District Munsiff Courts in the Madras State. This is according to the statement showing the original suits filed in each District Munsiff Court, in the State of Madras, page 18. Out of the suits filed, in two District Munsiff Courts, the filings are nearly 100 original suits per year in each court. In 12 courts, the filings are below 300 and in 31 courts the filings are below 400. In Krishnagiri District Munsiff Court and Krishnagiri as territorial jurisdiction District Munsif Cout and Krishna-was 550 orignal suits whereas this year it has gone up to 568. Apart from this data, the real grievance is that the distance from many places to the Court is very great. The Hosur taluk is 1,200 square miles, and Krishnagiri taluk is 600 square miles in extent. Now in this Hosur taluk, 460 villages are recognised for the work purposes of court; and the distances given in the list are as follows : there are 34 villages with a distance between 50 and 90 miles; there are 108 villages with a distance of 40 and 50 miles; 117 villages are at a distance between 30 and 40 miles and 124 villages between 20 and 25 miles. Whereas in Krishnagiri taluk, 260 villages are recognised for the purpose of court work and the distances according to the list that has been maintained in the court are very less. There are no villages between 50 and 90 miles; there are no villages situated at a distance of 40 and 50 miles and there are no villages at a distance of 30 and 40 miles. There are only 9 villages between 25 and 30 miles and below a distance of 20 and 25 miles, there are over 124 villages. In these circumstances, I plead that in view of the distances that people have got to travel and consequently the lot of money that they have to spend, our request for a separate court should be considered. Sir. in this connection, I like to bring to the notice of the Government that in one case, the District Munsiff in his D.O. in 1955 has observed that there is a necessity for a Civil Court for Hosur and he had made that recommendation in view of the distance and he had recommended at last for a Circuit Court. Sir, I also like to submit the number of cases that have been tried every month. I have taken this data from the suit extract for seven months from July 1957 to January 1958. In the month of July, there were 29 listed suits from Hosur and 14 from Krishnagiri; In August, 27 from Hosur and 13 from Krishnagiri; in September, 28 from Hosur and 15 from Krishnagiri; in October, 20 from Hosur and 15 from Krishnagiri; in November, 26 from Hosur and 22 from Krishnagiri and so on. Thus, out of the 307 marked suits (marked as one year and above old) for seven months 184 listed suits were from Hosur and 123 from Krishnagiri. I am mentioning these statistics because I received a communication from the Government stating that the facts I submitted to the Government are being examined. Hence I am submitting to the Government that we are not unjustifiably asking for a court. The majority of cases come from Hosur and people are spending not less than Rs. 1,000 by way of travelling expenditure, a day, apart from the heavy sums spent for taking out summons to far off distance.

7th March 1958] [Sri M. Muni Reddi]

In regard to the taxation proposals, I like to say that in 1952 when the Surcharge on Land Revenue was imposed, we pleaded on the floor of the House for the imposition of agricultural income-tax. But we think that this is an inopportune time for the Government to come forward with this proposal. So many other things must also be taken into consideration. We do not object to the principle of this taxation, but we say that this is an inopportune time, especially in view of the passing of the Hindu Succession Act and in view of the proposed ceiling on land. According to Government data, now the average yield per acre is 11 bags, out of which the income will be Rs. 98. But how many ninety-eight would make Rs. 3,000. There will not be many to pay this tax and the expenditure to collect the tax will not justify the imposition of this tax. Thus it is the most inopportune time for the Government to think of this taxation. According to the very Government's statistical data now available, the yield per acre is given as 11 bags out of which the net income will be Rs. 98. How many Rs. 98' could make Rs. 3,000? So it is the most inopportune time to impose this tax. Even at present, the agriculturists are overburdened with taxes. A major part of the revenue is paid by rich landlords. Furthermore, they have to pay the road cess, education cess, railway cess and so on. All these go to show that he is burdened heavily. Even if we take the National Extension Service works and Local Development works, it is the rich men who contribute lion's share for the development works in the various areas. The Government of Madras should approach the Central Government for permission to levy a tax on buildings. As a result of the proposed Agricultural Income-tax, the Government can get only a sum of Rs. 75 laks. But, just imagine the amount that they have to spend. Even on previous occasions, I have suggested the levy of a surcharge on buildings. I once again request the Government of Madras to press upon the Central Government and obtain permission to levy a surcharge on buildings which will surely fetch a larger amount that could be utilised for betterment purposes.

2–10 p.m.

SRI B. K. LINGA GOWDER : Sir, in welcoming this year's budget, I congratulate the Hon. Finance Minister on his presenting another sober budget. The budget contains many laudable features and I am thankful to the Government for having made some allotments for the improvement of the District Headquarters Hospital, Ootacamund. The hospital is a small one. Nevertheless, it attracts patients from the whole State and at times even from outside. Especially during the summer season, on account of its salubrious climate conductive to the ailing and canvalescing, Ootacamund attracts a large number of people from various parts. It is therefore necessary that the hospital should be expanded and developed. There is very little scope for public contribution. Therefore, I request the Government to come forward with proposals for further expansion, improvement and provision of better equipment.

[Sri B. K. Linga Gowder] [7th March 1958

The roads used by the tourists, trade and general public in the district are in a very bad condition. The District Board with its meagre and limited resources is not able to cope up with the requirements in this regard. The sum allotted in the budget is inadequate and I am to request the Government to make more allotments.

May I take this opportunity to bring to the notice of the Government that Ootacamund, the Queen of Hill Stations, is fast losing its importance ever since the Government decided to discontinue the summer exodus to that place. The Central Government, who are stressing the importance and need for developing hill stations to attract more tourist traffic are not doing much to that place. The economic condition of the masses of the Nilgiris district is deteriorating very fast and alarmingly. The development of the hill station is not only good for the people of the hill station, but also for the people in the State. A well-developed hill station, an attractive hill station is a national asset and will attract foreign tourists thus earning substantial foreign exchange which we need most. Nature has made Nilgiris a vast reservoir of power and a constant giver of light and water to the people of the place. Progressively developed and persistently planned Nilgiris can be made the Switzerland of the East. As a first step in that direction, I would request the Government to hold a sitting of the Legislature—at least once in a year—in Ootacamund for a short period of a month or so. This will also offer an opportunity for the people in the interior Southern districts to know and watch the functioning of a democratic Government. It has often been argued that exodus to Ootacamund is a luxury and should be avoided. It is my humble submission that this argument is not quite correct. The extra amount involved in this will indirectly go to the benefit of the people of the Nilgiris district. Perhaps, the House is aware that the Kerala Government have come forward with proposals to develop Munar as a hill station. If it is only for the luxury of a few legislators, I do not think they would have come forward with such proposals. I leave it to the better sense of the hon. Members, especially my Dravida Munnetra Kazhagam brothers to consider this proposal and to support my move. Sir, Ootacamund has lost much of its beauty and natural resources due to the indiscriminate cutting of trees and soil erosion. These two things have to be checked promptly if one is not to kill the goose that lays the golden eggs. The Government must bestow more attention to see that these two evils are eradicated before it is too late.

Regarding the taxation proposals, the proposed tax on agriculture will hit hard the agriculturists of the Nilgiris district. Nilgiris has no irrigation facilities. Therefore, we are entirely dependent on the mercy of rains and seasons. It is blessed with no industry. Therefore, I request the Government to drop this proposal of taxation totally, or at least exempt the persons holding 50 acres and below, from this new measure of taxation. I will be

7th March 1958] [Sri B. K. Linga Gowder]

failing in my duty if I do not thank the Government for their increased allotments under certain development programmes. They have supplied electricity to about 90 per cent of the villages, provided medical facilities in the rural parts, started a college and also have opened some schools. I am thankful to the Government for all these. Thank you, Sir.

* **Sri G. NARAYANASWAMI NAIDU** : அன்புமிக்க தலைவர் அவர்களே, இந்த வருஷத்திலே நாம் கொஞ்சம் அதிகமான பணத்தை எதிர்பார்த்து, புதிய வரியை விதித்திருக்கிறோம். சென்ற ஆண்டில் நாம் பற்றுக்குறை பட்ஜெட்டைத்தான் அங்கீகரிக்க வேண்டிய நிலைமை இருந்தது. 1952-ம் ஆண்டிலே தஞ்சை பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் வந்தபோது, எவ்வளவு எதிர்ப்புக்கள் இருந்தனவோ, அவ்வளவு எதிர்ப்புக்கள் இப்பொழுது மூவாயிரம் ரூபாய்க்கு மேல் விவசாய வருமானம் பெறுபவர்களுக்கு வரி என்று சொல்லும்போது, அத்தகையவர்களிடமிருந்து கூக்குரல் கொஞ்சம் கடுமையாக இருக்கிறது. வழக்கமாக நம்முடைய பகுதியிலே இருக்கும் நிலச்சுவாந்தார்கள் ஆரம்பத்திலே தடபுடலாக எதிர்ப்பார்கள். அப்புறம் விட்டுக்கொடுத்து விடுவார்கள். காரணம், அதித்தீவிரமாக எதிர்ப்பதற்கான பலம் அவர்களுக்குச் கொஞ்சம் கொஞ்சமாகச் சிதறிக்கொண்டு வந்துவிட்டதுதான். அது ஒரு பெரிய காரணம்.

நேற்று முன் தினம் பேசிய ஒரு கனம் அங்கத்தினர், விவசாயியைப் பசுமாட்டுக்கு ஒப்பிட்டு, மோத மோத அது பாலைக் கறந்து கொண்டிருக்கிறது என்றும் மேலும், மேலும் அதனிடம் எதாவது தொந்தரவு பண்ணினால், கொம்பால் முட்டிவிடும் என்றும் அந்த நிலையிலேதான் இன்று விவசாயிகள் இருக்கிறார்கள் என்றும் தெரிவித்தார்கள். திரேதா யுகத்தில் தானாகக் கறந்துகொண்டிருந்த மாடுகள் இப்பொழுது கலி யுகத்தில் காலை அணைத்தால் தான் கறக்கின்றன. காரணம், அதன் குணம் நாளாவட்டத்தில் மாறிப்போச்சு. ஆனால், அந்த மாடு ஏதோ தானாகவே பாலைக் கொடுப்பதாக இன்னும் நினைத்துக்கொண்டிருக்கிறது. அதற்கு வைக்கக்கூடிய தீனியினாலும், புல்லினுடைய சக்தியாலும் தான் கறந்துகொண்டிருக்கிறது என்பதை பசுமாடு உணராது. நிலத்தில் வேலை செய்கின்ற தொழிலாளிகளின் உதவியாலும், மற்றவர்களின் உதவியாலும்தான் விவசாயம் நடைபெறுகிறது என்பதை அந்தத் தொழிலாளர்கள் உணர ஆரம்பித்து, அப்படி உழைக்கும் தங்களுக்கும் போதிய பலன் கிடைக்கவேண்டுமென்று கேட்கும்போது, கொடுக்கமாட்டேன் என்று பிடிவாதம் செய்கின்றவர்களுடைய காலை அணைத்துத் தான் கறக்கவேண்டிய நிர்ப்பந்தம் வந்துவிடுகிறது. அந்தக் கட்டத்திற்கு அவர்கள் போகாமல் ஓரளவு ஒத்து வருவார்கள் என்று நான் நம்புகிறேன். அடுத்தபடியாக விவசாயிகளுக்கு வரி போடுகிறது என்றால் நம் தரப்பில் இருக்கிற சர்க்கார் கட்சிக் கொரடா மிகவும் கடுமையாக எதிர்ப்பார்கள். அவர்களே இவ்வாண்டு பரிபூரணமாக ஆதரித்திருக்கிறார்கள் என்றால் மக்களுடைய மனோபாவம் எப்படி மாறிக் கொண்டு வருகிறது என்பதை நாம் உணர்ந்து கொள்வதற்கு ஒரு எடுத்துக் காட்டாகும். சென்ற மூன்று வருஷங்களுக்கு முந்தி இந்தச் சபை வேறு ஒரு இடத்தில் நடந்தபோது நமது மதிப்பிற்குரிய ராஜா சர் முத்தையா செட்டியார் மிராசுதார்களுக்கு சர்க்கார் கொடுத்து வருகிற மருந்துகளை எல்லாம் பார்த்து இனி எனக்கு மிராசுதார் என்ற பட்டமே வேண்டாம் என்று தெரிவித்தார்கள். அந்தப் பட்டம் ஒருகாலத்தில் ஏற்றமும், உயர்வும், மதிப்பும் உடையதாக இருந்திருக்கலாம். இப்போது அதற்கு மதிப்பு இன்மை ஏற்பட்டு தேவைக்கு அதிகமான நிலம் வைத்திருக்கிறவன் என்ற காரணத்தினாலேயே பரிகாசத்திற்கு உள்ளாகிறவர்களாக இருக்கிறார்கள். ஆகவே இன்றைய சூழ்நிலையில் அதிகம் வைத்திருப்பவர்கள் வெட்கப்படும் நிலைமை வளர்ந்து வருகிறது. தேவைக்கு அதிகமாக நிலம் வைத்துக் கொண்டிருக்கிறவர்கள் அவைகளை தாங்களே முழு மூச்சில் சம்பாதித்துக் கொண்டது அல்ல. உழவர்கள் உழைத்த உழைப்பின் மூலமாக அவர்களிடத்தில் சேர்ந்திருக்கும்படியான 2–20 p.m.

சொத்து அது. நேற்று சிலர் நிலமுடையோர் தாங்கள் உழைத்து உடல் வாடி, கறுத்து, முதுகு கூனி, தோல் சுருங்கிப் போய் பலவித நோய் களுக்கே ஆளாவதாக வருணித்தார்கள். உண்மையில் இந்த வரியை எதிர்ப்பதற்கு அவர்கள் அப்படிச் சொன்னாலும், இந்த வரியினால் அவர் களுக்கு எவ்விதமான தொந்தரவும் இல்லை என்பதை நான் சொல்ல விரும்புகிறேன். மூவாயிரம் ரூபாய்க்கு மேல் விவசாய வருமானம் உடைய வர்களுக்கு வரி என்றால் அதாவது மாதம் 250 ரூபாய் வருமானம் உள்ளவர்கள் வயிறு ஒட்டி, முதுகு கூனி, தோல் கறுத்து இப்படிப்பட்ட வறியவர்களாக காட்சி அளிக்கிறார்கள் என்றால் நம்புவது எப்படி ? உண்மையிலேயே மாதம் 250 ரூபாய் வருமானம் உள்ளவர்கள் அப்படிப் பட்ட நிலைமையில் இருக்கவேண்டுமென்றால் மகா கருமியாக இருக்க வேண்டும். இந்த வரியினால் உண்மையில் அசல் விவசாயிகள் பாதிக்கப் படமாட்டார்கள். ஓரளவு 250 ரூபாய் வருமானம் உள்ளவர்கள், செலவு போக என்றால் அவர்களை ஏழை என்று சொல்லவும் முடியாது. பத்து ஏக்கராவுக்கு மேலாக உடையவர்களாக இருப்பார்கள். மோட்டார் வைத்து பயிரிடக்கூடிய வசதி உள்ளவர்கள் இரண்டு ஏக்கராவிலேயே அந்தப் பணத்தைச் சம்பாதித்து விடுவார்கள். மேலும் அமைதியான முறையில் அவர்கள் வாழ்க்கை நடத்த விரும்பினால், மாதம் 250 ரூபாய்க்கு மேல் வருமானம் உள்ளவர்கள் அவ்வாறு அமைதியான வாழ்க்கையை நடத்துவதற்குச் சந்தா சர்க்காருக்கு கட்டக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அந்தச் சந்தாதான் இந்த வரி. அதுவும் ரூபாய்க்கு 5 நையே பைசா தான். இதை அதிகம் என்று சொல்ல முடியாது. இனிமேல் இதை எதிர்ப்பதில் பிரயோஜனம் இல்லை என்பதை அவர்கள் புரிந்து கொண் டிருப்பார்கள் என்று நம்புகிறேன். அவர்களுடைய எதிர்ப்பு பூர்ணமாக நின்றுவிடும் என்று நினைக்கிறேன்.

அடுத்தபடியாக தமாஷா வரி, டீசல் எண்ணைக்குப் போடப்படும் வரி ஆகிய இரண்டும் வந்திருக்கிறது. தமாஷா வரியைப் பொறுத்தவரையில் இன்னும் கொஞ்சம் கடுமையாகப் போட்டாலும் கூட நல்லது என்று நினைக்கிறேன். சினிமா என்பது ஏழைகளுக்கு வெறும் பொழுது போக்கு என்பது மட்டும் ஆக இருக்கவில்லை. டாக்டர் சொன்னார் என்று கொஞ்சம் குடிக்க ஆரம்பித்தவன் சில காலத்திற்குள்ளாகவே முழுக்குடிக்காரனாக ஆகிவிடுவதைப் போலத்தான் இன்றைக்கு எங்கள் பக்கத்தில் பண்ணை யாட்கள் ஒரு ஷோ பார்த்துவிட்டு வந்துவிடுவதில்லை. அத்தனை ஷோவுக் கும் அங்கே படுத்துக்கொண்டு விடுகிறார்கள். ஏராளமான ஏழைகளுடைய பணம் தான் அங்கே மிக அதிகமான அளவில் போய்க் கொண்டிருக்கிறது. முதல் வகுப்பு சௌகரியம் தான், என்றாலும் இரண்டாவது வகுப்பு கொஞ்சம் வசதி குறைவு என்பதனால் இரண்டாவது வகுப்புக்குக் கூட்டம் அதிகமாவதும், இடம் இல்லாவிட்டால் முதல் வகுப்பு பிரயாணியே மூன் றாம் வகுப்பில் பிரயாணம் செய்ய, முதல் வகுப்பு காலியாகப் போவது போலத்தான் இன்றைக்கு தமாஷா வரியை அதிகப்படுத்தினால் முன் கூட்டம் குறையும். கடை நிலைக்கு அதிகம் கூட்டம் ஏற்படும். அதனால் அடிக்கடி போகிறவர்கள் இனிமேல் அபூர்வமாகப் போவார்கள். ஆகவே தமாஷா வரியை அதிகப்படுத்தினால் நல்லதுதான்.

சினிமா செல்லும் சிறுவர்கள் காட்சியில் வர்ணிக்கப்படும் விண்ணிலா வும் மதியும் போல, வீணையும் நாதமும் போல காதலி அமைய வேண்டு மென கனவு கண்டு, காண்பது கற்பனை முதலுக்கு வருவது கஷ்டம் என உணராமல் கெட்டு அதிருப்தி அடைந்து வருகின்றார். ஆகவே தமாஷா வரியை இன்னும் கொஞ்சம் அதிகப்படுத்தினாலும் கூட காங்கிரஸ் கட்சி யைச் சேர்ந்தவர்களோ, எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்களோ எதிர்க்கமாட் டார்கள். எதிர்ப்பதற்கும் எதிர்க்கட்சிக்காரர்களாக இருந்தாலும் வெட் கப்படுவார்கள் என்று நினைக்கிறேன்.

சினிமாவுக்கு வரியைப் போட்டு, நாடகத்திற்கு இல்லை என்று சொல்லி யிருப்பது சரியில்லை. இரண்டும் மூத்தாள், இளையாள் உறவு போன்றது தான். அந்தக் காலத்து நாடகக்காரர்கள் இன்றைக்கு சினிமாக்காரர்

7th March 1958] [Sri G. Narayanaswami Naidu]

கள். இன்றைக்கு நாடகக்காரர்கள் ஆக இருப்பவர்கள் நாளைக்கு சினிமாக் காரர்களாகப் போகிறார்கள். ஆகவே இது இரண்டுக்கும் பெரிய ஏற்றத் தாழ்வு இருப்பதாக நினைக்கக்கூடாது. கதை எழுதுகிறவர்கள், திரை எழுதுபவர்கள், பாடல் அமைப்பவர்கள் எல்லோருக்குமே வரி போடலாம். இப்படி நாட்டு நலனுக்கு இவர்களிடத்திலும் ஒரு சந்தா வசூல் செய்தால் இவர்களுக்கும் அதனால் மதிப்பும் பெருமையும் உண்டாகும். ஆகவே அதையும் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக டீசல் எண்ணைக்கு வரி போடுவதைப்பற்றி பல தகராறு இருக்கிறது. பெரிய விவசாயிகளும் உபயோகப்படுத்துகிறார்கள். சிறிய விவசாயியும் உபயோகப்படுத்துகிறார்கள். விவசாயிகளை இது பாதிக்கக் கூடாது என்பது உண்மை. பழைய ராஜாக்கள் மாதிரியே தான் பஸ் காரர்களுடைய நிலைமை இன்று வளர்ந்திருக்கிறது. அவர்கள் கொடுக்கிற கணக்குவழக்கு நியாயமாக இருக்கமுடியாது. உண்மையாக பஸ்ஸுக்கு வரி கொடுத்தால் அவர்கள் இன்று வாழும் உன்னத வாழ்க்கை வாழ முடியாது. அவர்களிடத்தில் ஓரளவு இந்த டீசல் எண்ணைக்கு ரிபேட் மாதிரியாக வரி வசூலித்து விவசாயிகளுக்கு உதவி செய்ய வேண்டும். கூப்பன் ஸிஸ்டத்தைக் கொண்டுவரமுடியாது. பல விஷயங்களில் கூப்பன் முறை கொண்டு வந்து, ஏற்கெனவே அதைக் கொண்டு வந்து எவ்வளவு விபரீதமான நிலைமை எல்லாம் ஏற்பட்டது என்பது நமக்குத் தெரியும். ஆகவே விவசாயிகளை பாதிக்காத வகையில் இந்த வரியை வசூல் செய் வதற்குத்தக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நமது ராஜ்யத்தில் இருக்கும் தாலூக்கா கச்சேரி களைப் பார்த்தால் பழைய காலத்தில் எப்படிப்பட்ட நிலையில், எப்படிப்பட்ட மனோபாவத்தை வளர்க்கக்கூடிய நிலைமையில் இருந்ததோ அதே நிலைமை யில்தான் இன்றைக்கும் இருந்து கொண்டிருக்கிறது. தாலுகாவில் பழைய ஹரிகேன் லைட்தான். பழைய பங்காதான். துணிகூட மாற்றப்படவில்லை. பிரிட்டிஷ்காரர்களால் கொடுக்கப்பட்ட சொத்து என்ற காரணத்திற்காகத் தான் பாதுகாக்கிறார்களோ என்னவோ அதே ஹரிகேன், நாடா இல்லாது, கிளாஸ் உடைந்தது இன்றைக்கும் இருந்து கொண்டிருக்கிறது. எங்கள் முனிஸிபாலிட்டியில் கூட மின்சார விசிறி, விளக்கு எல்லாம் போட் டிருக்கிறோம். அதற்குப் பக்கத்தில் சர்க்காருடைய பலம் பெற்ற தாலுக்கா ஆபீசில் இன்னமும் பழைய நிலைமைதான். பத்து வருஷத்திற்கு ஒரு முறை சுண்ணும்பு அடிப்பார்களோ என்னவோ? நமது ராஜ்யத்திற்கு அதிக வருவாயைத் தேடித்தரும் இலாகா அது. எல்லா தாலூகா காரியாலயங்களையும் ஒரேயடியாக சீர்திருத்த முடியாது என்றால், மூன்று பாகங்களாக மாகாணத்தைப் பிரித்து ஒவ்வொரு வருஷமும் ஒவ்வொரு பாகத்திலுள்ள காரியாலயங்களைச் சீர்திருத்தி மின்சார விசிறி, விளக்கு எல்லாம் போட்டு வசதி செய்து வரவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். இப்படி பல சீர்திருத்தங்களை சர்க்கார் செய்யவேண்டி யிருப்பதன் காரணமாக நமது ராஜ்ய வருவாய் அதிகப்படத்தான் வேண் டும். ஆகவே புதிதாகப் போடப்படுகிற வரியை நாம் எல்லோரும் வர வேற்கவேண்டியதுதான். சோஷலிஸ சமுதாய அமைப்பைச் சிருஷ்டிக்க விரும்புகிற ராஜ்யத்தில் மக்கள் வரி கொடுக்க—அதுவும் கொடுப்பதற்கு வசதியுள்ளவர்கள் கொடுக்க முடியாது என்று சொல்ல முடியாது. உயர மாக இருக்கக்கூடியவர்களுக்கு எந்த வீட்டு நிலையும் கொஞ்சம் இடிக்கத் தான் செய்யும். பணக்காரர்கள் புதிய வரித்திட்டத்தினால் கொஞ்சம் இடிபட்டாலும் கூட மகாஜனங்களுடைய சௌகரியத்திற்காக அவர்கள் அதைப் பொறுத்துக்கொள்ளத்தான் வேண்டும். இந்த வரிப் பணம் எல் லாம் மகாஜனங்களுடைய நலனுக்கே செலவிடப்படுகிறது. ஆகவே கொடுக் கக்கூடிய தகுதியுள்ளவர்களிடமிருந்து வரிப்பணத்தை வசூல் செய்ய கொஞ்சங்கூட தயங்காமல் முழுமூச்சுடன் வரி விதிக்கலாம். இந்த விவ சாய வருமான வரியினால் உண்மையில் எங்கள் ஊரில் பாதிக்கக்கூடிய வர்கள் ஊருக்கு இரண்டு, மூன்று பேர்கள்தான் இருப்பார்கள். இப் படியே தான் ஒவ்வொரு இடத்திலும் இருக்கும். ஆகவே வரித்திட்டத்தை நான் ஆதரித்து, நமது ராஜ்யத்திலுள்ள சர்க்கார் காரியாலயங்களை நல்ல

முறையில் சீர்திருத்தி அமைக்கவேண்டும், தாலுக்கா கச்சேரி காரியாலயங்களுக்கு மின்சார விளக்கு, விசிறி முதலிய வசதிகள் எல்லாம் உடனடியாகச் செய்து கொடுக்கப்படவேண்டும் என்று சொல்லிக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

2–30 p.m. **Sri A. GOVINDASAMY** : சட்டமன்ற தலைவர் அவர்களே, இந்த வரவு செலவுத் திட்டத்தில் பொது மக்களுக்கு கவர்ச்சியோ அல்லது களிப்போ அளிக்கக்கூடிய அம்சங்கள் இல்லாதது கண்டு நான் என் வருத்தத்தை நிதி அமைச்சர் அவர்களிடம் தெரிவித்துக் கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன். எப்போதும் போல் நிதியமைச்சர் அவர்கள் தனது சோகக் குரலைக் காட்டித்தான் மத்திய அரசாங்கம் நமக்குத் தர வேண்டிய நிதியைத்தர மறுக்கிறது, தேவையான நிதியை தர மறுக்கிறது, அதற்காக நாம் போராடிக் கொண்டிருக்கிறோம், எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம் என்று சொல்லி சோகக் குரலைக் காட்டித்தான் ஒவ்வொரு ஆண்டும் தனது நிதி நிலை அறிக்கையை சமர்பித்து வருகிறார்கள். இந்த ஆண்டு நிதியமைச்சர் அவர்கள் உண்மையாகவே சோகக் காட்சி அளித்துக் கொண்டிருக்கிறார்கள். அதன் ரகசியம் எனக்குத் தெரியவில்லை. ஆனால் அவரது மனதில் ஏதோ வேலை செய்து கொண்டிருக்கிறது என்பதை நான் ஊகிக்கிறேன்., மற்றவர்களும் அதைப்பற்றி சிந்தித்துக்கொண்டிருக்கிறார்கள்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : ஒரு மணிக்கு வைப்பதால் தான் சோகமாயிருக்கிறேன்.

**Sri A. GOVINDASAMY** : சோஷியலிஸ சமுதாயம் நிறுவவேண்டுமென்று ஆவடி காங்கிரஸில் தீர்மானம் போட்டார்கள். ஆனால் அது ஏட்டளவில் இருக்கிறதேயொழிய செயல் அளவில் சர்க்கார் அதற்கு வேண்டிய திட்டங்கள் வகுக்கவில்லை. ஐந்தாண்டுத்திட்டம் நடைமுறைக்கு வந்து திட்டங்கள் பரவலாக போடப்பட்டு ஏழு ஆண்டுகளில் நிறைவேற்றி வருவதாக காட்டப்படுகிற இந்த நேரத்தில் அத்திட்டங்களால் பெருவாரியான மக்கள் நன்மை அடைகிறார்களா என்றால் அடையவில்லை என்றுதான் சொல்ல முடியும். அதற்கு காரணம் என்ன ? திட்டங்கள் போடும்போது மற்ற கட்சிகளையும் கலந்து கொண்டு அவைகள் நிறைவேற்றப்படும்போது அவர்களின் ஒத்துழைப்பு பெறாதது ஒரு காரணம். அடுத்ததாக, இந்தத்திட்டங்களுக்காக செலவு செய்யப்படுகிற பணம், அப்பணத்தின் பெரும் பகுதி கண்ட்ராக்டர்களுக்கும், சம்பளமாக உத்தியோகஸ்தர்களுக்கும் போகிற அளவில் அதை கண்காணிக்க, அத்திட்டங்களினால் எத்தகைய நன்மை மக்களுக்கு ஏற்பட்டிருக்கிறது என்று கவனித்து அறிய ஒரு கமிட்டி போட்டு எவ்வளவு செலவு செய்கிறோம், நிலைமை என்ன, அதனால் ஏற்பட்டிருக்கும் பலன் என்ன என்பதையெல்லாம் பற்றி பரிசீலிக்க வேண்டுமென்று நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். இன்றைய தினம், நான்கு தினங்களுக்குப் பிறகு மின்சார ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்ய இருக்கிறார்கள். அது சர்க்காரின் கவனத்தில் வந்திருக்கும். அது குறித்து என்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கிறார்கள் என்று எனக்குப் புலப்படவில்லை. மக்களின் மனதில் குமுறல் இருக்கிறது என்பதை எடுத்துக் காட்டத்தான் நான் இதைக்குறிப்பிடுகிறேன். மின்சார போர்டிற்கு அதிகாரங்களை எல்லாம் விட்டுவிட்டோம், எங்களிடம் அதிகாரம் இல்லை என்று சொல்லி தப்பித்துக் கொள்ள முடியாது. அந்த போர்டில் நம் சர்க்கார் காரியாலயத்தில் வேலை பார்க்கிற, செட்டூர் அவர்களும், வர்க்கீஸ் அவர்களும், அப்பாதுரை முதலியார் அவர்களும் இருக்கிறார்கள். அரசாங்கத்துடன் நெருங்கிய தொடர்பு உள்ளவர்கள்தான் இவர்கள் என்பதை கவனிக்க வேண்டும். அதனால் இந்த மாதம் (11–3–58 முதல் 13–3–58) வரை வேலை நிறுத்தம் ஏற்பட்டால் சங்கடம் ஏற்படும். சட்டசபை கூட நடக்குமோ என்பதும் சந்தேகந்தான். இதை உடனடியாக கவனித்து வேண்டிய நிவாரணம் தேடவேண்டியது மின்சார இலாகா அமைச்சர் அவர்களின் பொறுப்பாகும். அவர்கள், குறைந்த பட்ச சம்பளம் 18-ல் இருந்து 31 வரை கேட்கிறார்கள். அது பெரிய சலுகை அல்ல. ஏற்கனவே இதற்கு

7th March 1958] [Sri A. Govindasamy]

முன் மராமத்து இலாகா மந்திரியாக இருந்தவர் இதைக் கவனித்து வேண்டியது செய்வதாக ஒத்துக்கொண்டு பின் தன் சகாக்கள் ஒத்துக்கொள்ளவில்லை என்று சொல்லிவிட்டுப் போனார். இப்பொழுது இருக்கும் மந்திரியவர்கள் இதைக் கவனித்து வெகு துரிதமாக, மின்சார வேகத்தில் அதற்கு நிவாரணம் தேடவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். லேபர் கமிஷனருக்கு இந்தப் பிரச்னை போய் அவரால் தீர்க்க முடியாத நிலை ஏற்பட்டிருக்கிறது. இதை உடனடியாக டிரிப்யூனலுக்கு விடவேண்டும். அடுத்தபடியாக, நெய்வேலி பகுதியில் ரெயில்வே ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் இப்பொழுது தேவைக்கு அவசியமற்ற பகுதியில் இருக்கிற கடைகள் வீடுகள் இவைகளை ரெவன்யூ அதிகாரிகள் **26-2-58**-ல் இடித்து நிறவியிருக்கிறார்கள். தாண்டவகுப்பம் என்ற கிராமத்தில் வீடுகளைச் சுற்றி முற்றுகை போட்டுக் கொண்டு அங்குள்ள வீடுகளை இடித்து அங்குள்ள தட்டு முட்டு சாமான்களை எல்லாம் எடுத்து உடைத்திருக்கிறார்கள். இது பற்றி ரெவன்யூ அமைச்சர் அவர்களிடம் எங்கள் கட்சியைச் சேர்ந்த செல்வராஜ் அவர்களும், கல்யாணசுந்தரம் அவர்களும் நானும் எடுத்துச் சொல்லியிருக்கிறோம். அதையும் உடனடியாக கவனித்து வேண்டியதைச் செய்யவேண்டும். அந்தப் பகுதியில் ஒரு குறிப்பிட்ட நபர் ஸ்டே ஆர்டர் வாங்கியிருக்கிறார், ஹைகோர்ட்டில் இருந்து. இப்பொழுது அங்கு சினிமாக் கொட்டகைகள் கட்ட நிலம் காங்கிரஸ்காரர்களால் வாங்கப்பட்டிருக்கிறது. சினிமாவை நீங்கள் எதிர்க்கிறீர்கள். சரி. சினிமாவிற்கு கதை எழுதுகிறவர்கள் திராவிட முன்னேற்றக் கழகக்காரர்கள் என்பதற்காக மாத்திரம் எதிர்க்கக்கூடாது. அப்படி அதை எதிர்த்துக்கொண்டு அதிகமாக சினிமாக் கொட்டகைகள் வைத்துக்கொள்ள லைசென்ஸ் வழங்கியிருக்கிறது இந்த அரசாங்கம். நீங்கள் ஆட்சிக்கு வந்ததற்கு பிறகு எவ்வளவு சினிமாக் கொட்டகைகளுக்கு லைசென்ஸ் வழங்கியிருக்கிறீர்கள் ? சினிமாக் கதைகள் திராவிட முன்னேற்றக் கழகக்காரர்கள் எழுதுகிறார்கள் என்று அதை நீங்கள் எதிர்க்க வேண்டாம். உங்களுக்கு அப்படி கதை எழுதத் தெரியவில்லை என்றால் எங்களிடம் வாருங்கள், நாங்கள் சொல்லித் தருகிறோம். கருணாநிதி அவர்களும், அண்ணா அவர்களும், ஆசைத்தம்பி அவர்களும் கதை எழுதுகிறார்கள். அவர்கள் வருமான வரியும் கட்டுகிறார்கள். இந்த வரியைக் கொண்டு வந்தால் திராவிட முன்னேற்றக் கழகக்காரர்கள் எதிர்ப்பார்கள் என்று சொல்லி அதை காங்கிரஸ்காரர்களே எதிர்க்கிறார்கள். ஏனென்றால் அவர்களுக்குத்தான் அதிகம் சினிமாக் கொட்டகைகள் இருக்கிறது. ஆகவேதான் அவர்களிடம் இருந்து எதிர்ப்பு வருகிறது. திராவிட முன்னேற்றக் கழகக்காரர்களிடம் இருந்தல்ல. அடுத்தபடியாக, சீதோஷ்ண நிலை குறித்தும் மழை குறித்தும் அமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். மழை குறைவாகவோ அல்லது அதிகமாகவோ பெய்கிறது என்றால் அதனால் அரசாங்கம் பெருமையோ சிறுமையோ கொள்ள வேண்டியதில்லை. ஏதோ சாங்கியத்திற்காக சொல்லப்படுகிறது. அடுத்தபடியாக, உணவுப் பற்றுக்குறை இருக்கும்போது, நியாயவிலைக் கடைகளை மூடுகிறோம் என்று சொல்கிறது, அரசாங்கம். மக்களுக்கு அரிசி அதிகமாகக் கிடைக்கிறதா என்பதைப்பற்றி அரசாங்கம் சிந்திப்பது கிடையாது. சிறு விவசாயிகளுக்கு உதவி செய்கிறோம் என்று சொல்கிறார்கள். சிறு விவசாயிகளுக்காக அரசாங்கம் உதவி செய்ய என்ன திட்டங்கள் போட்டிருக்கிறார்கள் என்று தெரியவில்லை. சிறு விவசாயிகளுக்கு கடன் உதவி, எரு உதவி, காளை உதவி, மின்சார உதவி போன்ற உதவிகளை அல்லது வசதிகளையெல்லாம் அவசியம் செய்து தரவேண்டும். நாங்கள் ஆயிரம் கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரித்திருக்கிறோம் என்று சொல்கிறார்கள். தமிழ்நாட்டில் தான் மின்சாரம் அதிகமாக விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது என்று சொல்கிறார்கள். தமிழ்நாடு ஒரு விவசாய நாடாகும். வடநாட்டில் இப்படி மின்சாரம் விஸ்தரிக்கப்படவில்லை என்று கவர்னர் உரையின் மேலுள்ள விவாதத்தின்போது தேனீ தியாகராஜன் அவர்கள் சொன்னார்கள். அங்கு தொழில் வளர்ந்திருக்கிறது. அங்கு மின்சாரம் தொழிலிற்கு வழங்கப்படுகிறது. இங்கு தொழில் அந்தளவு வளரவில்லை. மந்திரி அவர்கள் புள்ளி விவரங்கள் காட்டி எங்களைத் திருப்திபடுத்த வேண்டும். ஆனால் அதற்கு வேண்டிய புள்ளி விவரங்களைக் காட்டமுடியாத நிலையில் அமைச்சர் அவர்கள் இருக்கிறார்கள். சாத்தனூர் திட்டத்தினால் விழுப்புரம் தாலூகா

வில் பெரும் பகுதி பாதிக்கப்பட்டிருக்கிறது. அங்கு மழை பெய்யவில்லை என்று சர்க்கார் சொல்லி தப்பித்துக் கொள்ளப் பார்க்கிறார்கள். சென்ற ஆண்டில் 24 அங்குலம் பெய்தது. இந்தாண்டு 17 அங்குலம் பெய்தது. வித்தியாசம் 7 அங்குலந்தான். அந்த அளவிற்குத்தான் பாதகம் ஏற்பட்டிருந்தால் அதை ஒத்துக் கொள்கிறோம். அங்கு, கிட்டத்தட்ட 40,000 ஏக்கரா பாதிக்கப்பட்டிருக்கிறது. நண்பர் தங்கவேலு அவர்கள் சொன்னார்கள், அவர்களைக் கொண்டு சொல்லச் சொன்னார்களோ என்று தெரியாது, 17 நாட்கள் தண்ணீர் விட்டார்கள் என்று. சாத்தனூர் திட்டத்தினால் பாதிக்கப்பட்ட இந்த சபையில் இருக்கும் எம். கந்தசுவாமி படையாச்சி, வி. பி. சாரங்கபாணி கவுண்டர், எஸ். ஏ. எம். அண்ணாமலை உடையார் இவர்களைக் கேட்டுப் பாருங்கள். பாதிக்கப்பட்ட இடங்களில் திருக்கோவிலூர், விழுப்புரம், கடலூர் தாலூகாக்களில் தகுந்த நடவடிக்கைகள் எடுத்து பூர்ணவரி வஜா தள்ளித் தர வேண்டும். மூன்று வருடம் விவசாயக் கடனை வசூல் செய்வதை ஒத்திபோட வேண்டும் என்று சொல்கிறோம். இது, கோவிந்தசுவாமியின் வாயில் இருந்து வருகிறது என்று பேசாமல் இருந்து விடக்கூடாது. பிரச்னையை கவனித்து ஆவன செய்ய வேண்டும். அடுத்தபடியாக, வேலையில்லாத் திண்டாட்டம் பரவலாக இருக்கிறது. வடநாட்டில் பார்த்ததைச் சொன்னேன், அங்கு பிச்சைக்காரர்கள் இல்லையென்று. அங்கு ஆண்களும் பெண்களும் வேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆனால் இங்கு படித்தவர்கள் இடையிலும், உடலால் உழைக்கத் தயாராக இருப்பவர்களிடையேயுள்ள வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க அரசாங்கம் யாதொரு நடவடிக்கையும் எடுக்கக் காணோம். கைத்தறி நெசவாளர்களின் விஷயத்தில் இந்த அரசாங்கம் நல்லதொரு முடிவிற்கு வரவேண்டும். அவர்கள் வாழ வேண்டுமா அல்லது சாக வேண்டுமா என்று ஒரு முடிவிற்கு வரவேண்டும். அவர்கள் வாழ வேண்டுமென்று சொன்னால், கைத்தறிக்காக கரைபோட்ட வேஷ்டிகளையும், கலர் புடவைகளையும் ஒதுக்கி வைக்கவேண்டும். அது பற்றி வந்த தீர்மானத்தை, ராஜாஜி அவர்கள் இருந்த காலத்தில் இது பற்றி வந்த தீர்மானத்தை நானும், எம். பி. சுப்ரமணியம் அவர்களும் ஆதரித்து அந்தத் தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டு மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டது. ஆனால் மத்திய அரசாங்கம் அதை நிராகரித்தது.

3–40 p.m. நான் டெல்லிக்குச் சென்றிருந்த சமயம் டி.டி.கே. அவர்களை கண்டு, கைத்தறித் துணிக்கு கொடுக்கப்பட்டு வந்த ரிபேட்டை குறைத்து இருக்கிறார்களே, அதை கூட்டுவதற்கு ஏதாவது வழி செய்யவேண்டும் என்று கேட்ட நேரத்தில் அப்படி குறைத்து கொடுக்கப்பட்டு வருவதாக எனக்குத் தெரியாதே என்று சொன்னார்கள். அதைப்பற்றி விவரமாக கூறின பிறகு இதைப்பற்றி கனம் அமைச்சர் வெங்கட்ராமன் அவர்களுக்கு செய்தி அனுப்பிவைக்கிறேன் என்று சொன்னார்கள். கைத்தறி வார விழா கொண்டாடப்படுகின்ற நேரத்தில் இந்த ரிபேட் கூடுதலாக கொடுக்கப்பட்டது. ஆகவே இந்த கூடுதல் ரிபேட்டை பொங்கல் சமயத்திலும் தீபாவளி சமயத்திலும் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். உண்மையிலே கைத்தறியை உயர்த்துவதற்கு என்ன வழிகளை வைத்திருக்கிறார்கள் ? கைத்தறி வார விழா கொண்டாடப்படுகிறது. மந்திரிகள் போய் பேசுகிறார்கள், நீங்கள் எல்லாம் கைத்தறித்துணியை உபயோகப்படுத்தவேண்டும் என்று சொல்லுகிறார்கள், ஆனால் அவர்கள் கைத்தறித் துணியை ஆதரிப்பதற்கு தயாராக இல்லை. அமைச்சர்கள் ஊருக்கு உபதேசம் செய்வதில் பிரயோஜனம் இல்லை. இன்று அரசாங்கத்தின் சார்பில் கதர் வாங்கப்படுகிறது. அதை மாற்றி அரசாங்கத்திற்கு வேண்டிய துணிகளை கைத்தறித் துணிகளாக வாங்கலாம் என்றும் அரசாங்கத்திற்கு கூறிக்கொண்டு, ஓராசிரியர்கள், என்.ஜி.ஓ-க்கள் இவர்களுடைய கோரிக்கைகளையும் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

Sri P. G. MANICKAM : ஸார், பாயின்ட் ஆப் இன்பர்மேஷன், சபையின் மேல் தளத்தில் குருவிகளுடைய சப்தம் அதிகமாக இருந்து கொண்டிருப்பதால் மற்றவர்கள் பேசுவதை சரியாகக் கேட்க முடியவில்லை. அதோடு

7th March 1958] [Sri P. G. Manickam]

குருவிகள் மேலேயிருந்து அங்கத்தினர்களின் மீது மலமும் கழித்துக் கொண்டிருக்கிறது. ஆகவே அவைகளை அகற்றி சுத்தமாக வைத்து, சபையில் பேசுவதை சரியாக கேட்பதற்கும் வழி செய்யப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**Mr. SPEAKER :** அதைப்பற்றி கவனிக்கலாம். ஆனால் குருவிகள் இருப்பது நல்லது என்று பெரியவர்கள் சொல்லுவார்கள். (சிரிப்பு.)

(இச்சமயத்தில் ஸ்ரீ K. சட்டநாத கரையாளர் தலைமை வகித்தார்.)

* **Sri P. M. PERIA KARUPPAN AMBALAM :** சபைத்தலைவர் அவர்களே, இங்கு நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் பட்ஜெட்டை நான் முழுமனதுடன் ஆதரித்து சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். நமது நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த பட்ஜெட்டில் பல நல்ல காரியங்களை நாம் காணுகின்றோம். முக்கியமாக விவசாயிகளுக்கு கடன் வசதிகளும், போக்குவரத்து வசதிகளும் செய்து கொடுக்க முன் வந்திருக்கிறார்கள். அத்துடன் மதுரையிலிருந்து கிழக்கு மேற்கே காரைக்குடிக்கு மேலூர் வழியாக ரயில்பாதை வேண்டும் என்று தீர்மானித்து அதற்காக சர்வே செய்து கல்கள் எல்லாம் போட்டாய்விட்டது. இதில் வேலை துவக்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் இந்த பட்ஜெட்டில் செய்யப்பட்டிருக்கும் என்று அங்குள்ள மக்கள் எண்ணியிருந்தார்கள். ஆனால் இந்த பட்ஜெட்டில் அதை காணாததினால் அங்குள்ள மக்கள் பெரிதும் ஏமாற்றம் அடைந்திருக்கிறார்கள். அந்த ரயில்பாதை மிகவும் அவசியம் என்பதை பல தடவைகள் வற்புறுத்தப்பட்டிருக்கிறது. ஆகவே அதை போட்டுக் கொடுப்பதற்கு அரசாங்கம் வசதி செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அத்துடன் நமது ராஜ்யத்தில் பல ஜில்லாக்களில் பல காட்டாறுகள் வீணைகப் போய்க்கொண்டிருக்கிறது. அவைகளில் 4,000 ரூபாய் அல்லது 10,000 ரூபாய் செலவு செய்து சிறிய சிறிய அணைகளை கட்டினால் ஆயிரக்கணக்கான ஏக்கர்களில் விவசாயத்தைச் கொண்டு வந்து உணவுப்பொருள்களை பெருக்க முடியும். இதையும் அரசாங்கம் கவனித்து வேண்டியது செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக விவசாய வருமான வரி போட்டிருப்பதைப்பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். விவசாயிகளுக்கு இந்த கணக்கு வைக்கும் பழக்கம் கிடையாது. கிராமாந்திரங்களில் சாதாரணமாக படிப்பில்லாத மக்கள்தான் அதிகமாக இருக்கிறார்கள். அவர்கள் கணக்கு வைத்துக் கொள்வதில்லை. ஆகவே இதற்கு முன்னால் ஸர்சார்ஜ் விதித்திருப்பதுபோல இன்னும் கூடுதலாக ஏதாவது 100 ரூபாய் அல்லது 200 ரூபாய் சேர்த்து, அந்த முறையில் ஸர்சார்ஜ்ஜை விதிப்பார்களானால் இவர்களுக்கு கணக்கு வைக்கக்கூடிய அவசியம் இருக்காது. இதனால் விவசாயிகளுக்கு மிக நலமாய் இருக்கும் என்று சொல்லிக்கொள்கிறேன். அதோடு எனக்கு இந்த சந்தர்ப்பத்தை அளித்த தலைவர் அவர்களுக்கு நன்றியும் செலுத்திக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* **Sri P. URKAVALAN :** சபைத்தலைவர் அவர்களே, நிதி மந்திரி அவர்கள் கொண்டு வந்திருக்கும் வரவு செலவு திட்டத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த வருடம் பருவ மழை சரியாக பெய்ததின் காரணமாக நல்ல பலனை அளித்து இருக்கிறது என்று நிதி மந்திரி அவர்கள் வரவு செலவு திட்டத்தில் கூறியிருக்கிறார்கள். இருந்தபோதிலும்கூட சில பகுதிகளில் பாதிக்கப்பட்டிருக்கிறது. அதாவது சங்கரன்கோவில் தாலூகாவில் பனையூர் என்று பெரிய குளம் இருக்கிறது. அதன் மூலம் 2,000 ஏக்கர்கள் வரையில் நெல் சாகுபடி செய்திருந்தார்கள். பின்னால் மழை இல்லாத காரணத்தால் அவை யெல்லாம் பட்டுப் போய் விட்டது. ஆனால் அதற்குப் பக்கத்திலுள்ள பல குளங்களில் தண்ணீர் நிறைந்திருந்தது. அதன் காரணமாக அதிலிருந்து தண்ணீர்விட வேண்டும் என்று கலெக்டர் அவர்களுக்கும், அங்குள்ள எஸ்டேட் மானேஜர் அவர்களுக்கும் தந்தி மூலமாகவும், மகஜர்கள் மூலமாகவும் அறிவித்திருந்தார்கள். ஆனால் அதுபற்றி ஏன் என்று கேட்க

வில்லே. ஏனென்ருல் சர்க்கார் நிர்வாகத்தில் சில தவறுகள் இருக்கின்றன. இதை நீக்கவேண்டியது அவசியம் என்பதை கூறிக் கொள்கிறேன். பெரும்பாலும் சங்கரன்கோவில் தாலூகாவில், கோவில்பட்டி தாலூகா, ஸ்ரீவில்லிபுத்தூர் தாலூகா போன்ற தாலூகாக்கள் மழையின்மையின் காரணமாக பஞ்சப் பிரதேசமாகவே இருந்து வருகிறது. இந்த வருஷம்தான் அங்கு மழை பெய்தது. ஆகவே இதற்கு அங்குள்ள மக்களுக்கு வசதி செய்து கொடுப்பதற்காக கீரியாறு, பம்பையாறு போன்ற திட்டம் சுமார் 20, 30 வருடகாலமாக ஆலோசிக்கப்பட்டு வருகின்றது. இதை எந்த விதத்திலும் உடனடியாக, மத்திய சர்க்காரிடம் அணுகி இதை நிறைவேற்றிக் கொடுத்து அங்கு வாழும் மக்களுக்கு ஆவன செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இப்போது விவசாய வருமான வரி விதித்திருக்கிருர்கள். இது ஒருக்காலும் ஏழை மக்களே பாதிக்கப்போவதில்லே. மூவாயிரம் ரூபாய்க்கு மேல் வருமானம் உள்ளவர்களுக்குத்தான் இந்த வரி இருப்பதால் ஏழைகளேயோ சாதாரண விவசாயிகளேயோ பாதிக்காது என்று ஒரு விவசாயி என்ற ஹோதாவில் சொல்லிக் கொள்கிறேன். ஆனல் பெரும் நிலச்சுவாந்தார்களுக்கு இந்த மாதிரி வரி வருவதால் ஏதோ அவர்களுக்கு ஒரு அச்சம் ஏற்படுகின்றது. எப்படியும் அவர்கள் இந்த வரியை கொடுக்க வேண்டியதுதான். ஏழை விவசாயி எப்போதும் ஏழையாகவே இருக்கவேண்டும் என்றே அல்லது உழைப்பவன் என்றும் உழைத்துக்கொண்டே இருக்கவேண்டும் என்றே கிடையாது. அவர்களும் ஒரு காலத்தில் முன்னுக்கு வரவேண்டும். உழைப்பவனுக்கு நிலம் சொந்தம் என்கின்ற நிலேமை வரவேண்டும். பாடுபடுபவனுக்கு மதிப்புக் கொடுக்கக்கூடிய காலம் வரவேண்டும். மற்றென்று, நெசவாளர்கள் பிரச்னே ரொம்ப நாட்களாக இருந்து கொண்டு வருகிறது. குறிப்பாக சங்கரன்கோவில், புளியங்குடி, கடையநல்லூர் போன்ற இடங்களில் கைத்தறி நெசவாளர்கள் சுமார் 20 ஆயிரம் பேர்கள் இருக்கிருர்கள். அவர்களுக்கு நெசவாளர்கள் காலனி ஒன்று சட்டிக் கொடுக்க வேண்டும். இன்றைக்கு பிரதானமாக இருக்கக்கூடிய, உண்ண உணவு, உடுக்க உடை, எல்லோருக்கும் அவசியம் என்ற முறையில் இன்று விவசாயிகளுக்கு செய்து கொடுப்பதுபோல நெசவாளர்களுக்கும் எல்லா நன்மைகளேயும் செய்து கொடுக்க வேண்டும். ஹரிஜனங்களுக்கும் பின்தங்கிய வகுப்பினருக்கும் கழிந்த ஆண்டை விட இந்த ஆண்டு கூடுதல் பணம் ஒதுக்கப்பட்டிருக்கின்றது. அது வரவேற்கத்தக்கதுதான். இருந்தபோதிலும் ஹரிஜனங்களுக்கு ஒதுக்கப்படுகிற பணம் வேறு பல விதமாக செலவழிக்கப்படுகிறது. இந்த முறையில் '' நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழியாக புல்லுக்கு விரங்கே புசியுமாம் தொல்லுலகில் '' என்ற மாதிரி இந்தப் பணம் போய்க்கொண்டிருக்கிறது. ஆகவே இதை கவனித்து இந்தப் பணத்தை எல்லாம் இவர்களுக்கு நன்மை பயக்கும் முறையில் செலவு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு மாடு வாங்கி கொடுக்கப்பட்டு வருகிறது. இதில் நிறைய பணமும் செலவு செய்யப்படுகிறது. ஆனல் நல்ல முறையில் மாடு வாங்கி கொடுப்பதில்லே. இதையும் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு என்.ஜி. ஓ.க்களுடைய பிரச்னேயும் இன்று நாட்டில் பிரதானமாக இருந்து வருகிறது.

2–50 p.m. இப்போது அவர்கள் குழந்தைகளுக்கு படிக்க வசதி செய்து கொடுக்கிறேம். இன்னும் ஓரளவு அவர்கள் மன நிம்மதி அடையக்கூடிய வகையில் சில சலுகைகள் கொடுக்க வேண்டியது அவசியம். கிராம மக்களுக்கு கிராம அதிகாரிகளேப்பற்றி ஒரு பிரச்னேயாக இருக்கிறது. கிராம அதிகாரிகள் அங்கு நல்ல முறையில் வேலே செய்ய வேண்டும். ஏனென்ருல் ஒரு சாதாரணக்கடன் வாங்கவோ, அல்லது வேறு எதை யெடுத்தாலும் அவர்களிடம் போக வேண்டியிருக்கிறது. அவர்கள் மன நிம்மதி இல்லாமலிருப்பது பெரும் குறையாக இருக்கிறது. இப்போது வருமான வரி போடுவதற்கு பயப்படுவது ஏனென்ருல், கிராம அதிகாரிகள் நல்ல முறையில் நடந்துகொள்ள மாட்டார்களோ, அவர்களிடத்தில் சிக்க வைக்கிருர்களே என்று நினைத்துத்தான் கஷ்டப்படுகிருர்கள். ஆனல் நிதி அமைச்சர் சொன்னபடி அத்தகைய நிலேக்கு வராது என்று நினைக்கிறேன்.

7th March 1958] [Sri P. Urkavalan]

மற்றென்று, மாஜி ராணுவத்தினர்கள் கூட்டுறவு மோட்டார் சங்கம் என்று ஒன்று இருக்கிறது. அந்த சங்கத்திற்கு சர்க்கார் உத்தியோகஸ்தரை காரியதரிசியாகப் போடுகிறார்கள். சில சந்தர்ப்பங்களில் மெம்பர்களுக்கும் காரியதரிசிக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டால் சங்கமே நசித்துவிட ஏதுவாக இருக்கிறது. அதை மாற்றிவிட்டு அந்த சங்கத்திற்கு மாஜி ராணுவத்தினர் ஒருவரையே காரியதரிசியாகப் போட்டு அவர்கள் நடத்தினுல் அவர்கள் அக்கரை காட்டுவார்கள், சங்கத்தை நல்ல முறையில் நடத்துவார்கள் என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

மற்றென்று நம் நாட்டிலே, ஏழை, பணக்காரர், முதலாளி என்ற வித்தியாசங்கள் இருந்து வருகின்றன. பெரும்பாலும் ஒரு சாதாரண, ஏழை வீட்டுப் பிள்ளை படித்து வந்தால், பிறகு உத்தியோகம் தேட பெரும் கஷ்டப்படுகிறார்கள். இதில் ஓரளவுக்கு வரம்பு கட்டவேண்டும். இப்போது நிலச் சீர்திருத்தம் கொண்டுவரப் போகிறோம். அதே மாதிரி படித்த பணக்கார வீட்டுப் பிள்ளைகளுக்கும், ஏழை வீட்டுப் பிள்ளைகளுக்கும் ஒருவித வரம்பு கட்டவேண்டும். இருபது எக்கர் நிலம் இருக்கக் கூடிய ஒருவருடைய வீட்டில் இருக்கக்கூடிய பிள்ளைகளுக்கு உத்தியோகம் வேண்டியதில்லை. அந்த நிலத்தை சாகுபடி செய்வதிலிருந்து வரக்கூடிய வருமானமே போதும். அவர்கள் படிக்கட்டும். படிக்க வேண்டியது அறிவு வளர்ச்சிக்காக. சாதாரண ஏழை வீட்டுப் பிள்ளைகள் வேலையில்லாமலிருந்தால் வெளியே சுற்றிக்கொண்டிருந்து பல பிரச்னைகளில் ஈடுபட்டு பல கட்சிகளில் ஈடுபட்டு உருக்குலைகிறார்கள். ஆகவே இதற்கு ஒரு வரம்பு கட்ட வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, எனக்கு பேச சந்தர்ப்பம் கொடுத்த சபைத்தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

* **SRIMATHI T. N. ANANDANAYAKI:** கனம் அவைத் தலைவர் அவர்களே, நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் 1958-59-ம் ஆண்டுக்கான வரவு செலவுத்திட்ட அறிக்கையைக் கொண்டு வந்ததைக் குறித்து பலவற்றை மகிழ்ச்சியோடும், ஒரு சிலவற்றை—ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தபோதிலும் கூட—வருத்தத்துடன் வரவேற்கக்கூடிய நிலையில் இருக்கிறோம். பல நல்ல அம்சங்கள் இந்த வரவு செலவுத் திட்டத்திலிருப்பதை யாரும் மறுக்க முடியாது. அதே சமயத்திலே, சில தொல்லைகளை இன்னும் கொஞ்சம் நாட்களுக்கு ஒத்திப் போட்டிருக்கலாம் என்பதை நினைத்துப் பார்க்கும்போது அந்தத் தொல்லைகள் இல்லாமல் இருந்தால் இன்னும் மகிழ்ச்சியாக இருந்திருக்கும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. காரணம் என்னவென்றால், 1957-58-ம் ஆண்டு வரவு செலவுத் திட்டப்படி 3 கோடியே 33 லட்சம் ரூபாய் துண்டு விழுமென்று எதிர்பார்த்தார்கள். துண்டு விழுவதைச் சரிக்கட்டவில்லையே என்று கூட அப்போது எதிர் கட்சிக்காரர்களில் சிலர் குற்றம் கூறினார்கள். அதையும் நாம் சமாளித்து விட்டோம். திருத்திய மதிப்பீட்டின்படி நமக்கு 5 லட்சம் உபரியாக வந்திருப்பதைப் பார்க்கும்போது நாம் மகிழ்ச்சியடைகிறோம். துண்டு விழுவதை வரியின் மூலமாகவும், மத்திய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட நிதிக் குழுவின் சிபாரிசுகள் மூலமாகவும் மாற்றி உபரி பட்ஜெட்டாக கொண்டுவரக்கூடிய அளவுக்கு வந்திருப்பதுபற்றி மிகவும் மகிழ்ச்சியடைகிறோம். மூன்று கோடியே 33 லட்சம் துண்டு விழுந்ததை உபரியாக மாற்றக்கூடிய நிலைமைக்கு நாம் வந்திருக்கும்போது இந்த ஒரு கோடியே ஐந்து லட்சம் துண்டு விழுவதை—ஒரு கோடியே 35 லட்சம் துண்டு விழுவதில், மத்திய அரசாங்கத்திலிருந்து மானியமாகக் கிடைக்கும் முப்பது லட்சம் போக பாக்கி ஒரு கோடியே ஐந்து லட்சத்தை—இந்தச் சிறிய பற்றுக் குறையை புதிய வரிகளில்லாமலேயே சமாளித்திருக்கலாம் என்று நினைக்கும்போது வருத்தமாகத்தான் இருக்கிறது. மேலும் துரிதமாக சில நல்ல காரியங்களைச் செய்யவேண்டிய சூழ்நிலையில் இருப்பதினுல் நாம் இந்த வரிகளைப் போட வேண்டியிருக்கிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். சில நல்ல அம்சங்களைப் பற்றிக் குறிப்பிடும்போது ஒரு வரவு செலவுத் திட்டத்திலே எதற்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டுமென்றால், புதிதாக அரசாங்கத்திற்கு வருவாய் தரக்கூடிய

[Srimathi T. N. Anandanayaki] [7th March 1958

திட்டங்களையும், உணவு உற்பத்திப் பெருக்கத் திட்டங்களுக்கும் முக்கியத்துவம் வழங்க வேண்டும். அந்த முறையிலே நம்முடைய மாகாணத்தைப் பொறுத்தமட்டில் உணவு நிலைமை ஓரளவுக்கு ஓங்கி நிற்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. எதிர்கட்சிக்காரர்கள் ஏன் நியாய விலைக் கடைகளை மூடுகின்றீர்கள், இன்னும் பற்றாக்குறை இருக்கின்றதே என்று சொன்னாலும்கூட, நம்முடைய மொத்தத் தேவை 48 லட்சம் டன். நாம் இப்போது உற்பத்தி செய்வது 46 லட்சம் டன். ஆகவே மொத்தத்தில் பற்றாக்குறை இரண்டு லட்சம் டன்தான். இங்கிருந்து கேரள ராஜ்யத்திற்கு 2½ லட்சம் டன் உணவுப் பொருள் போயிருக்கின்றது. இதையெல்லாம் பார்க்கும்போது நாம் இந்த உணவு உற்பத்தி விஷயத்தில் முன்னேறிக் கொண்டிருக்கிறோம் என்பதை யாரும் மறுக்க முடியாது. அதே சமயத்தில் 750 பவுண்டு விளைந்ததானது இன்றைய தினம் 1,255 பவுண்டாக விளையக்கூடிய அளவுக்கு வேளாண்மையை வளப்படுத்துவதற்கு இயன்றதை நமது சர்க்கார் செய்திருக்கின்றார்கள் என்பதை மறந்துவிட முடியாது. இருந்தபோதிலும் நம் உற்பத்தி சீனாவுக்கு அருகேயிருந்தாலும் இன்னும் ஜப்பானை எட்டிப் பிடிக்கவில்லை என்று குறிப்பிடக்கூடும். ஜப்பானிய விவசாய முறையை மிகத் துரிதமாக அமுல் நடத்துவதற்கு முற்படவேண்டும். நாம் உற்பத்தி செய்வது 1,255 பவுண்டுதான். ஆனால் ஜப்பானில் ஒரு ஏக்கருக்கு 2,550 பவுண்டு உற்பத்தி செய்கிறார்கள். அதாவது நம்மைப் போல் கிட்டத் தட்ட இரண்டு மடங்கு உற்பத்தி செய்கிறார்கள். அந்த "இன்டென்ஸிவ் கல்டிவேஷனை"—அதாவது ஜப்பானிய முறையை—பரப்புவதற்கு எதைச் செய்ய வேண்டுமோ, அதைச் செய்யவேண்டும். ஜப்பானிய முறையைக் கையாளுகின்ற விவசாயிகளுக்கு இவ்வளவு மானியம் தரப்படும் என்று சொல்லி, அதற்காக சில லட்சக்கணக்கான ரூபாயை ஒதுக்கி வைத்துப் புதிய முறையைக் கையாளுவதற்கு ஊக்கமளிக்கவேண்டும். அதனால்தான் விளைச்சல் அதிகரிக்கும், உணவு உற்பத்தியும் பெருகும். அப்போதுதான் "பற்றாக்குறை, பற்றாக்குறை" என்ற பல்லவி மறைந்து போகும். நியாய விலைக் கடைகளைப்பற்றி கூறுகிறார்கள். கனம் அமைச்சர் அவர்கள் நேற்று மேல் சபையில் இதைப்பற்றி மிகவும் அழகாகக் கூறியிருக்கின்றார்கள். நியாய விலைக் கடைகளில் அமெரிக்க அரிசிதான் கொடுக்கப்படுகிறது. அதன் விலையும் மற்ற கடைகளில் விற்கும் அரிசியின் விலையும் ஏறத்தாழ ஒன்றாகத்தான் இருக்கிறது. நெல்லூர் அரிசியின் விலையும், நியாய விலைக் கடைகளில் விற்கப்படும் அரிசியின் விலையும் ஒன்றாக இருக்கும்போது, நியாய விலைக் கடைகளே தேவையில்லையென்று கூறியிருப்பதை நான் வரவேற்கிறேன். இப்படி இருக்கும்போது நியாய விலைக் கடைகளை தொடர்ந்து நீடிக்கவேண்டுமென்று சொன்னால், அது கண்ட்ரோலில் கொண்டுபோய் நிறுத்திவிடும். அதனால் விவசாயத்திலீடுபட்டவர்களுக்கு துன்பம் நேரிடும். கனம் ராஜாஜி அவர்கள் கண்ட்ரோலை எடுத்த போது பலர் பயமுறுத்தினார்கள், "பற்றாக்குறை இருக்கும்போது கண்ட்ரோலை எடுத்து விட்டீர்களே ?" என்று. அப்போது எல்லோருக்கும் புரியாத ஒரு புதிராக இருந்து பிறகு நிலைமை சரியாயிற்று. அந்த அளவிலே நியாய விலைக்கடைகளை மூடி, உணவு உற்பத்தி அதிகரித்து கடைகளிலே நல்ல முறையில் சப்ளை அதிகரிக்குமானால், அது சிறந்தது என்றே நான் நினைக்கிறேன். அதைத்தான் விவசாய அமைச்சர் செய்வார் என்று எதிர்பார்க்கிறேன்.

அடுத்தபடியாக உற்பத்தியின் நிலையை கவனிக்கும்போது நாம் பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களையெல்லாம் முடித்துவிட்டோம். மாபெரும் அணைக்கட்டுகளைக் கட்டுவதற்கு இனிமேல் இடம் இல்லை. மிக துரிதமாகத் திட்டகளையெல்லாம் எடுத்து நிறைவேற்றிவிட்டோம். சிறந்த முறையிலே நீர்ப்பாசனத்தை விஸ்தரித்து குளங்களையும், ஏரிகளையும், கண்மாய்களையும் சீர்படுத்தி, அதன் மூலமாக விவசாயத்தை வளர்க்கவேண்டுமென்று அமைச்சர் அவர்கள் நினைத்திருப்பது வரவேற்கத் தக்கது. அதோடு கழிவு உரம் என்று சொல்லுகிறார்களே, சென்னை கார்ப்பொரேஷன் கூட அந்த உரத்தை நல்ல முறையில் பயன்படுத்த தலாட்டி திட்டம் என்று ஒரு திட்டத்தை தீட்டியிருக்கின்றார்கள். இப்போது எல்லா ஜில்லாக்

களிலும், இப்போது மதுரை டவுனிலே இந்த திட்டம் இருக்கிறது என்று நினைக்கிறேன், கழிவு இருக்கின்றது. கழிவு இல்லாத ஜில்லா இருக்காது. எல்லா இடங்களிலும் உள்ள இந்தக் கழிவு உரத்தைப் பயன்படுத்தக்கூடிய வகையில் ஒரு திட்டத்தை அரசாங்கம் உடனடியாகக் கொண்டு வந்து அதற்காக கடன்களைக் கொடுத்தால் பற்றுக்குறையாக உள்ள அம்மோனியம் ஸல்பேட்டோடு இந்தக் கழிவு உரத்தையும் உபயோகித்தால், வேளாண்மை அதிகரிக்கும் என்று நினைக்கிறேன். ஆகையினால் கனம் அமைச்சர் அவர்கள் எல்லா ஜில்லாக்களிலும் கழிவு உரத் திட்டங்களைக் கொண்டு வருவதற்கு வழி செய்தால் அது வரவேற்கத் தக்கதாக இருக்கும்.

அடுத்தபடியாக வீடு கட்டித் தருவதற்காக அரசாங்கம் தரும் நிலைமையைப் பார்க்கும்போது ராமநாதபுரத்தில் 3,000 வீடுகள் கட்ட 17 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். அது மிக மிக வரவேற்கத் தக்கது. வெந்த உள்ளத்தோடு, வேதனைப்பட்ட உள்ளத்தோடு இருக்கின்ற ராமநாதபுரம் மக்களின் உள்ளங்களுக்கு ஆறுதல் அளிக்கக்கூடிய வகையில் எறிந்து போன குடிசைகளுக்குப் பதிலாக, சிறந்த வீடுகளைக் கட்டித் தருவோம் என்று சொல்வதிலே, அவர்கள் வேதனையெல்லாம் வீடுகளைக் கண்டவுடனே மறந்து விடுவார்களென்று நினைக்கிறேன். இதை மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள். வீடுகளுக்காக 17 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருப்பது சிறந்தது. அதோடு மற்ற இனங்களில் செலவழிக்கப்படாமலிருக்கும் தொகையையும் இதற்காக செலவழிக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். அந்த வீடுகளைக் கட்டிக் கொடுப்பதில் தாழ்த்தப்பட்ட மக்களாக இருந்தாலும் சரி, பிற்பட்ட வகுப்பினராக இருந்தாலும் சரி, ஹரிஜனங்களாக இருந்தாலும் சரி, அத்தனை பேர்களுக்கும், இதை ஒரு அவசர வேலையாகக் கருதி செய்தால் உண்மையிலேயே வேதனையில் ஈடுபட்டுள்ள மக்கள் நிச்சயமாக வரவேற்பார்கள். இது பட்ஜெட்டில் ஒரு மிகச் சிறந்த அம்சம் என்று சொல்லாமல் இருக்க இயலாது.

தொழில் வளத்தைப்பற்றியும் பட்ஜெட்டில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அலுமினியத் தொழிற்சாலை ஒன்றை சேலத்தில் ஆரம்பிக்கப் போகிறோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். சமீபத்திலே ஒரு செய்தித் தாளில் பார்த்தபோது, இங்கே கிடைக்கும் பாக்ஸைட்டை விட பம்பாயில் கிடைக்கும் பாக்ஸைட் மிகச் சிறந்தது, ஆகவே அங்கே இந்த அலுமினியத் தொழிற்சாலை ஆரம்பிக்கப்படலாம் என்று படித்த ஞாபகம் இருக்கிறது. கனம் தொழில் அமைச்சர் அவர்கள் அதைப்பற்றி விரிவாக விளக்கினால் வரவேற்கத் தக்கது. அதை விட்டு விடாமல் சேலத்தில் இந்தத் தொழிற்சாலையைக் கட்டாயம் அமைக்க முயற்சி எடுக்க வேண்டும்.

போன உரையில் சொன்னேன் கொள்ளேகாலம் பட்டு பறிபோய் விட்டதே என்று. ஹோசூரில் இப்போது ஆரம்பிக்கப் போகிறோம் என்று சொல்வதை எங்களைப் போன்ற பெண்கள் நிச்சயம் வரவேற்பார்கள். எதிர் கட்சி அங்கத்தினர்கள் கூட இதை வரவேற்பதாகப் பேசினார்கள். அவர்களோடு இந்த வரவேற்பில் கலந்து கொண்டு அதே சமயத்தில் ஒரு பயத்தையும் தெரிவித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. கொள்ளேகாலத்தைக் கொடுத்து விட்டோம். படாஸ்கர் தீர்ப்பின்படி ஆந்திர எல்லைத் தகராறு தீர்க்கப்பட்டும், ஹோசூரைப்பற்றி ஒரு வார்த்தையையும் காணோம். ஹோசூரின் தலைவிதி பின்னால் . . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM: ஹோசூரைப்பற்றி தகராறு ஒன்றுமில்லை. கனம் அங்கத்தினர் அனாவசியமாக பிரச்னையைக் கிளப்ப வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI: இவ்வளவு திட்டவட்டமான விளக்கம் வந்ததைப்பற்றி மகிழ்ச்சி. இதற்காகத்தான் சொன்னேனேயொழிய வேறு காரணத்தால் அல்ல. ஹோசூரில் பட்டுத் தொழிற்சாலை, நூற்கண்டுத் தொழிற்சாலை ஆரம்பிக்கப் போவது மிகவும் வரவேற்கத் தக்கது. இப்படிப்பட்ட தொழில் வளங்கள் வருகின்றன

என்பதைப் பார்க்கும்போது " வட நாடு தேய்கிறது, தென் நாடு வளர்கிறது " என்று வட நாட்டிலே கோஷம் கிளம்புமளவுக்கு நாம் முன்னேறிக் கொண்டு போகிறோமென்று அஞ்சுகிறேன். (சிரிப்பு.)

அடுத்தபடியாக, புதிய வரிகளைப்பற்றி நினைத்துப் பார்க்கும்போது சினிமா, குதிரைப் பந்தயம் இவற்றின் மேலே எண்டெர்டெயின்மெண்ட்ஸ் டாக்ஸ் அதிகப்படுத்தியிருக்கிறார்கள். எதிர்கட்சி அங்கத்தினர்களில் சிலர் சொன்னார்கள், சினிமா வேண்டாம், வேண்டாமென்று சொல்லுகிறீர்களே, ஏன் அதற்கு வரிபோடுகிறீர்கள், ஏன் சினிமாவிற்கு லைஸென்ஸ் கொடுக்கிறீர்கள் என்று கேட்டார்கள். சற்று யோசித்துப் பார்த்தால் இதைச் சொல்லியிருக்க மாட்டார்கள். சினிமாவிற்கு லைஸென்ஸ் தந்தால்தான் அதிக சினிமாக்கள் ஏற்பட்டு, பொழுதுபோக்கு வரி போட்டு அதிகமான வரி வசூலிக்க முடியும். வருமானத்தை அதிகப்படுத்த வேண்டுமென்ற காரணத்திற்காக சினிமாக்களுக்கு லைஸென்ஸ் கொடுக்கப்படுகிறதே தவிர அதன் மீதுள்ள மோகத்தாலென்று தவறுதலாக எண்ணிவிடக் கூடாது.

(MR. Speaker in the Chair.)

அடுத்தபடியாக, இப்போது விவசாய வருமான வரி புதிதாகக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. மூவாயிரம் ரூபாய்க்கு மேல் விவசாயத்திலிருந்து மாத்திரமல்ல, மற்ற துறைகளிலிருந்து கிடைக்கக்கூடிய வருமானத்தையும் சேர்த்து வரி போடப்படுமென்று கூறப்படுகிறது. இதன் மூலம் எதிர் பார்ப்பது 70 லட்சம் ரூபாய்தான். இந்த 70 லட்சம் ரூபாய்க்காகப் போடுகின்ற இந்தப் புது வரி பல தொல்லைகளில் கொண்டுபோய் விடுமோ என்று பயப்படவேண்டியிருக்கிறது. மிராசுதார்களுக்காக வக்காலத்து வாங்கிக்கொண்டு பேசுகிறேனே என்று எண்ணிவிட வேண்டாம். மற்ற வருமானத்தையும் சேர்த்து எடுத்துக்கொண்டால் 5 ஏக்கர், 7 ஏக்கர், 8 ஏக்கர் வைத்துக் கொண்டிருக்கின்றவர்களும் இந்த வரி கொடுக்க வேண்டிய நிலை வந்து விடும். பல புதுப்புது சட்டங்களைப் போட்டு விவசாயிகளைப் பிரமிக்கச் செய்து கொண்டிருக்கிறோம். நியாய வாரச் சட்டம், சாகுபடியாளர் பாதுகாப்புச் சட்டம், இப்போது புதிதாக மனத்தைப் குழப்புகின்ற கை ஏர் மாட்டேர் மசோதா என்று ஒன்றின்மேல் ஒன்றாக புதுப் புதுச் சட்டங்களைப் போடுவதினாலே அவர்கள் ஒன்றும் புரியாமல் இருக்கின்றார்கள். இந்த நிலையில் வருமான வரி போட்டால் என்ன ஆகுமோ என்று பயமாக இருக்கிறது. ஒருவர் வேண்டாதவராக இருந்தால் அவரைப்பற்றி இன்கம்-டாக்ஸ் ஆபீஸருக்கு மொட்டை பெடிஷன் எழுதினால் போதும். கையெழுத்துக் கூட வேண்டியதில்லை. அதனால் அவர் அடையக்கூடிய தொல்லை இவ்வளவு அவ்வளவு அல்ல. அவரை நசுக்கும் வரை அந்த இலாகா அதிகாரிகள் விடமாட்டார்கள். நாம் நல்ல எண்ணத்துடன்தான் இந்த வரியைக் கொண்டு வருகிறோம் என்றாலும், அதிகாரிகளின் கையில் மாட்டிக்கொண்டு விழிப்பது இருக்கிறதே, அது எந்த அளவுக்குக் கொண்டுபோய் விடும் என்று சொல்ல முடியாது.

போலீஸ் அமைச்சர் அவர்கள் உணர்ந்திருப்பார்கள், போலீஸ் மக்களுக்கு பாதுகாப்பு அளிப்பதற்காக இருக்கிறதேயல்லாமல், பாழடிப்பதற்காக இல்லை. சமீபத்தில் கோடம்பாக்கத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சி—இது இப்போது நீதி மன்ற விசாரணைக்குட்பட்டிருக்கிறது, ஆகவே நான் இதைப் பற்றி அதிகம் சொல்ல விரும்பவில்லை. ஒரு சில ஆபீஸர்கள் பாதுகாப்பதை விட்டு பாழ்படுத்திவிடுகிறார்கள் என்ற எண்ணம் நிலவி வருகிறது, நாம் நல்ல எண்ணத்துடன்தான் அதிகாரங்களைக் கொடுத்திருக்கிறோம். இதில் காங்கிரஸ் சர்க்காரின்மீது குற்றமில்லை. அதிகாரிகளின் மனப்போக்கு எப்படியிருக்குமோ ? ஆனால் சிலர் பாழ்படுத்தி விடுகிறார்கள் என்ற பயம் பொது ஜனங்களுக்கு இருக்கிறது என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன். ஆனால் பழி யாரிடம் வருகிறது, எங்களிடம் வருகிறது. தென்னை மரத்தில் தேள் கொட்டி, பனை மரத்தில் நெறிகட்டியது என்று சொல்லுவார்கள். அதே போல் ஆபீஸர்கள் தங்களிஷ்டப்படி தவறாக நடந்து அதிகாரங்களை துஷ்பிரயோகம் செய்தால் பழி யார் தலையில் விழுகிறது என்று கேட்டால், இங்கே உட்கார்ந்திருக்கிற அமைச்சர் பக்த வத்சலத்தின் தலையின்மேல் விழுகிறது.

7th March 1958]

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : பழியைப்பற்றி கவலையில்லை. இப்போது எப்படி கனம் அங்கத்தினர் பயம் ஏற்படுகிறது என்று சொல்லுகிறார்களோ, அதே மாதிரி ஆபீஸர்களுக்கும் பயம் ஏற்படுவது நல்லதல்ல. அதை மட்டும் இந்த சந்தர்ப்பத்திலே சொல்ல விரும்புகிறேன்.

**Mr. SPEAKER** : அங்கத்தினருடைய நேரம் முடிந்து, கூடுதலாக இரண்டு நிமிடங்களும் ஆகியிருக்கின்றது.

**Srimathi T. N. ANANDANAYAKI** : விவசாயிகள் அதிகம் படித்தவர்களல்ல. இப்போது வருமான வரி என்று போட்டால் அவர்கள் மிகவும் பயந்து விடுவார்கள். ஒருவனுடைய நிலத்தில் ஒரு வருஷம் நன்றாக விளையலாம். மறு வருஷம் அவன் நிலத்தில் பூச்சி விழுந்து விவசாயம் பாதிக்கப்பட்டு வருமானமில்லாமல் இருக்கலாம். அப்போது பக்கத்து நிலக்காரனுக்கு நன்றாக விளைந்திருக்கலாம். வருமான வரி உத்தியோகஸ்தர் வந்து பக்கத்து நிலக்காரனுக்கு இவ்வளவு விளைந்திருக்கிறதே, உனக்கும் விளைந்திருக்கவேண்டும், நீ பொய் சொல்லுகிறாய் என்று சொல்லி அந்த விவசாயியைத் துன்புறுத்த நேரிடும். இப்போது இந்த விவசாய வருமான வரியினால் 70 லட்சம் எதிர்பார்க்கிறார்கள். இதற்காக 70 லட்சம் விவசாயிகளை வருத்துவதைக் காட்டிலும், யோசித்து இதைப் போட்டால் நல்லது என்று நினைக்கிறேன்.

* **Sri K. SATTANATHA KARAYALAR** : கனம் சபாநாயகர் அவர்களே, 1958–59-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையை சமர்ப்பித்து அதன் மீது நிதி அமைச்சர் அவர்கள் நிகழ்த்திய உரை மிகத் திறம்பட அமைந்துள்ளது என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில், நாட்டில் இன்று இருக்கக்கூடிய பொருளாதார நெருக்கடியைப் பற்றியோ, வேலையில்லாத் திண்டாட்டத்தைப் பற்றியோ அல்லது பணவீக்கத்தைப் பற்றியோ ஒன்றுமே சொல்லாமல் நாட்டின் நிதி நிலை திருப்திகரமாகக் கூறப்பட்டுள்ளது ஆனால் நிலைமை என்ன ? அத்தியாவசியமான உணவுப் பொருள்களின் விலைவாசி விஷம் போல் ஏறி வருகிறது. உற்பத்தி உச்ச நிலையை அடைந்து விட்டது என்று சொல்லப்படுகிறது. கைத்தறியை எடுத்துக்கொண்டால் நிதிநிலை நாட்டில் அகில இந்திய ரீதியில் பாதித்துள்ளது என்பது தெரியவரும். சுமார் $5\frac{1}{2}$ லட்சம் கைத்தறி நெசவாளர்கள் உள்ள தமிழ் நாட்டில் சுமார் $1\frac{3}{4}$ லட்சத்திற்கு அதிகம் கூட்டுறவு இயக்கத்திலே இருக்கக்கூடும். அவைகளில் மாத்திரம் சுமார் 1 கோடியே 40 லட்சத்திற்கு சரக்குத் தேங்கியுள்ளது. இன்னும் தனிப்பட்டவர்களிடம் இருப்பதையும் சேர்த்துக் கணக்கிட்டால், சுமார் 5 கோடி ரூபாய் வரையில் தேக்கம் ஏற்பட்டிருக்கிறது என்று தெரிகிறது. இது ரிபேட்டைக் குறைத்ததால் மட்டுமல்ல என்று தெரிகிறது. கழிந்த பொங்கலுக்குப் பிறகும் இதே நிலைமை தமிழ் நாட்டில் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. அது மட்டுமல்ல. மில் துணி நிலைமையை எடுத்துக்கொண்டால், குறிப்பாக கோயம்பத்தூர் வட்டாரத்திலே மூன்றாவது ஷிப்டை நிறுத்தப்போவதாக முன்னறிவிப்பு நோட்டீஸ் மானேஜ்மெண்ட் கொடுத்திருக்கிறார்கள். செங்கோட்டை, மதுரை, பாபநாசம் மில்களில் ஏற்கெனவே ஆட்களை எடுக்க வேண்டுமென்று திட்டமிட்டு, இப்பொழுது ஆட்களை எடுக்கவில்லை என்ற நிலைமை ஏற்பட்டுள்ளது. கைத்தறிக்கு நமது மாகாணத்தில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஐந்து ஆண்டுகளிலே 4 கோடியே 14 லட்சம் ரூபாய் செலவு செய்வதாக இருந்தது. கழிந்த இரண்டு ஆண்டுகளில் 3 கோடி ரூபாய் வரை செலவழித்தாய் விட்டது. இந்த ஆண்டிலே 92 லட்சம் ரூபாய் செலவழிப்பதாக இருக்கிறது. மொத்தம் ஐந்து ஆண்டுகளிலே செலவு செய்யவேண்டிய தொகையை மூன்று வருடத்திலே செலவு செய்யப்போகிறோம். அப்படிச் செலவு செய்தும், நாட்டிலே கைத்தறித் தேக்கம் ஏற்பட்டு, சுமார் 5 லட்சத்திற்கு அதிகமான குடும்பங்கள் கஷ்டப்படக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்றால், இதை ஒரு "**isolated phenomenon**" ஆகக் கருதுவதற்கு இல்லை. பம்பாய் போன்ற முக்கிய நகரங்களை எடுத்துக் கொண்டால் கழிந்த டிசம்பர் மாதத்திற்கு முன்பாகவே சுமார் 20,000 மில் தொழிலாளர்கள் பாதிக்கப்

பட்டிருக்கிறார்கள். கழிந்த பார்லிமெண்ட் கூட்டத்திலே கூட இதைப்பற்றி எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். வளரும் தொழிலிலே ஒன்றாகக் கருதிய தொழிலின் நிலைமை அப்படி யிருந்தும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே மேலும் அநேக லைசென்ஸ் கொடுக்கப் பட்டு மில்கள் திறக்கப்படவேண்டிய நிலைமையிலே இருக்கிறது. இதே மாதிரி செமெண்ட் தொழிலிலும் தேக்கம் ஏற்பட்டுக்கொண்டு வருகிறது.
3-10 p.m. 1956-ல் சுமார் 42 லட்சம் டன்னாக உற்பத்தி இருந்தது. தற்சமயம் 60 லட்சம் டன்னுக்கு கொஞ்சம் அதிகமாக இருக்கலாம். 1961-ம் ஆண்டு முடிவுக்குள், அதாவது இரண்டாவது ஐந்து ஆண்டுத் திட்ட முடிவுக்குள் 1 கோடி 30 லட்சம் டன் உற்பத்தி அதிகரிக்கும். ஆனால் இப்பொழுதே நெருக்கடி ஏற்பட்டு உள்ளது. இத்தனைக்கும் காரணம் என்ன ? சாதாரண மனிதனின் அன்றாட தேவைப் பொருள்களான விவசாயப் பொருள்களின் விலை விஷம் போல் ஏறிக்கொண்டே இருக்கிறது. உணவு தானியங்களின் விலை 1956-ம் வருஷம் ஜூலை மாதம் 377 மொத்த குறியீட்டு எண்ணாக இருந்தது. 1957-ம் வருஷம் டிசம்பர் மாதம் 512 ஆக உயர்ந்து இருக்கிறது என்று நிதி மந்திரி அறிக்கையில் கூறினார்கள். உணவுப் பொருள்களில் குறிப்பிடத்தக்க பற்றாக்குறையின் காரணமாக இந்தத் திடீர் உயர்வு ஏற்படவில்லை என்று கூறினார்கள். அப்படியானால் பற்றாக்குறைக்கு காரணம் என்ன ? இதைப் பற்றி சிந்திக்கும் போது " **Foodgrain Enquiry Committee Report** " பார்ப்பது நன்றாக இருக்கும்.

" The money supply has gone up from Rs. 1,794 crores on 31st March 1954 to Rs. 2240·2 crores on 31st August 1957 or an increase by 24·9 per cent in 3½ years. The rise of prices is therefore basically the consequence of the rate of economic development and its mode of financing. " விலை உயர்வைப்பற்றிச் சொல்லும்போது பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

" Stock holding at the farm level has increased considerably in 1956–57 as compared to 1955–56 less than 60 per cent and in some areas even less than 50 per cent of the crop came to the market in 1956–57 within two or three months of the harvest as compared to 70 to 80 per cent in normal years."

ஒரு சில பெரிய நிலச் சொந்தக்காரர்கள், '**farm**' கள் வைத்திருப்பவர்கள், பெரிய வியாபாரிகள் நாட்டில் உள்ள பொருள்களை தேக்கி வைப்பதனால் பொருள்களுக்கு விலை வாசி உயர்வு ஏற்பட்டிருக்கிறது. இதைப்பற்றியும் அதிலேயே குறிப்பிடப்பட்டு உள்ளது. இது எதிர்பாராத விஷயமல்ல. இதைப்பற்றி முன் கூட்டியே இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தை தீட்டியவர்கள் எதிர்பார்த்தே சொல்லி இருக்கிறார்கள். அவர்கள் சில 'அஸம்ஷன்ஸ்' பொருளாதார அடிப்படையில் வைத்து சொல்லியிருக்கிறார்கள்.

(*a*) that the terms of trade in the next five years will remain on an average, the same as they have been in 1955–56 (first nine months) and (*b*) that inflationary pressures will be held firmly under control·"

பணப் பெருக்கத்தைப்பற்றி பின்வருமாறு சொல்லி யிருக்கிறார்கள்.

" Care will however have to be taken to prevent excessive credit expansion which may react adversely on prices and to ensure that credit does not flow into speculation to the detriment of productive activity."

ஸ்பெகுலேஷன் மூலமாக நாட்டில் பணம் உபயோகிக்கக் கூடாது என்று திட்ட வட்டமாகச் சொல்லியிருந்தும் பலமாக நாட்டில் இன்று பணம் ஸ்பெகுலேஷனில் உபயோகப்படுத்தப்படுகிறது. இதனால் ஏற்படும் நிலைமை

7th March 1958] [Sri K. Sattanatha Karayalar]

என்ன ? இந்தப் பணப்பெருக்கு நாட்டுக்கு உபயோகப்படாமல், ஒரு சிலர் சொந்த லாபத்திற்காக பணத்தை உபயோகப்படுத்திக்கொண்டு வருகிறார்கள். நாட்டில் இருக்கக்கூடிய பண உயர்வு 13,480 கோடி ரூபாயாக இன்னும் இரண்டு வருஷத்தில் எட்டிப் பிடித்துவிடும். இந்தப் பணம் யாரிடம் போகிறது என்று பார்போம்.

All India Rural Credit Survey Agricultural labour Enquiry report.

" Between 1949–50 and 1953–54, there is impowerishment of the people left in the lowest income classes. This would be manifest from the fact that while in 1949–50, 30 per cent of the agricultural working force enjoyed 10·2 per cent of the income in 1953–54, 28·8 per cent enjoyed 7;3 per cent and not 8.1 per cent of the income.

Also the non-agricultural working force on the basis of 1949–50, the 9·5 per cent working force should have enjoyed 2·7 per cent of the income but they had only 1·9 per cent."

நாட்டில் இருக்கக்கூடிய ஒரு சில முதலாளிகள், பணக்காரர்கள், மேலும் மேலும் பணக்காரர்களாகிக் கொண்டிருக்கிறார்கள். மத்திய தர வகுப்பைச் சேர்ந்தவர்கள், சாதாரண அக்ரிகல்சரல் லேபரர்ஸ், தொழிலாளிகள், இவர்களுடைய வாழ்க்கை பாதிக்கப்பட்டு மேலும் மேலும் ஏழையாகவும் மெலிந்தும் போய்க் கொண்டிருக்கிறார்கள். இந்த சூழ் நிலையில்தான் என்.ஜி.ஒ.-வினர், உபாத்தியாயர், குறிப்பாக ஆலைத் தொழிலாளி இவர்களைப்பற்றி நாம் சிந்திக்க வேண்டும். அப்படிச் சிந்திக்காமல் காங்கிரஸ் அங்கத்தினர்கள் விவசாய வருமான வரியைக்கூட எதிர்த்துப் பேசுகிறார்கள். அது வெறும் பிரச்சாரத்திற்காக தங்கள் கட்சி ஏதோ தீவிர நடவடிக்கை எடுப்பதாக வெளியில் பொது மக்கள் நினைக்க இப்படிப் பேசுகிறார்கள். அதேநேரம் இவர்கள் அகில இந்திய ரீதியில் கையாளும் கொள்கைகள் நாட்டில் ஏழையை ஏழையாகவும் பணக்காரர்களை பெரிய பணக்காரர்களாகவும் உயர்த்துகிறது. சோஷலிஸம் பேசிக்கொண்டு நடைமுறையில் ஒரு நிலைக்குத்தான் வருகிறது.

' Whoever hath to him shall be given and he shall have more abundance, but whoever hath not from him shall be taken away even that he hath." இதுதான் சர்க்காரின் கொள்கை போலும்.

SRI A. V. THOMAS : Mr. Speaker, let me at the outset take the rather unpleasant part of the budget that has been presented by the Hon. Finance Minister. I mean to say that part of the budget which relates to taxation measures. First comes the tax on diesel oil. The only one remark that I wish to make here is that diesel oil that is used for agricultural purposes should be exempted from this tax.

Next comes the Entertainment Tax. Reference is there in the budget to Horse Racing. I am glad, however, that it is likely that horse racing will be allowed to continue. Because, to some extent I am interested in horse racing and I make no secret of it. But, I feel that the Government will have to exercise more control on the mode of racing. All is not well in the city of Guindy. I have also made representations to the Hon. Home Minister about certain defects in the present system of racing. Before the issue of further licences, I hope that the Government would appoint a Committee

to go into the whole matter or they themselves would make necessary arrangements and provide sufficient safeguards to ensure fair racing. The public have a big hand in racing. It is no secret that quite a lot of money changes hands in Guindy. So, the interests of the public have to be safeguarded and it is the duty of the Government to see that no unfair methods are carried on.

Next comes the levy of agricultural income-tax on land holdings. To be quite candid, of course I am one interested in plantations, some of my comrades do welcome this not because they realise that it is necessary or anything of the sort, but because they think, 'Oh, we are paying the tax, why not the others also pay the agricultural income-tax?' I do not take that view. As far as agriculture is concerned, perhaps it many be argued that in the neighbouring State, that tax is levied. But, there is a world of difference between conditions obtaining in those States and our State. Excepting perhaps two or three districts where our rivers flow, the major part of our State is dependant on rains and rain-fed tanks for its cultivation. Also the fertility of the soil is another great factor. So all these go to show that conditions here are not the same as in other States, and it would be unwise for this State to follow the systems in force in other areas.

3-20 pm. Apart from that, we know—I realise that—that money is needed for other purposes also. But in this case, apart from this levy, it is also proposed that any non-agricultural income will also be added to the agricultural income so that a higher rate of tax would be realised. I suggest the Government might consider other methods of raising this money even from the agriculturists themselves. If they want to tax the agriculturists, the small holders and the small cultivators should be exempted, because the small cultivator works in the field from morning till evening by the sweat of his labour. That is worth considering. There is a world of difference between this and other taxes. For instance, the Plantation Labour Act may be a little different. But on the question of taxation, as far as I am concerned, it will have to be there. There may be other methods of perhaps assessing the cess on the larger areas which are cultivated, at the same time excluding the small areas, say, up to 50 acres or so. Therefore, a certain limit could be fixed for paddy fields.

Then, the most worrying thing of the whole show here is that in this levy we are handing over the poor agriculturist or farmer to the hands of the tax collector. Nobody likes a tax collector, including myself. But even if we have to produce our books of accounts or argue, etc., it may be possible for some of us to send somebody else, a lawyer or an accountant. But in the case of the poor agriculturists, he has nobody to send and even if he has. he has to pay and he has not the money and means to do so. So the agriculturist should be saved by all means from the tax collector. If he is asked to come to a Tax Office, it means two or three days wasted. He will lose his work; if he is absent, his crops will suffer,

7th March 1958] [Sri A. V. Thomas]

his animals will suffer, and his family will suffer. So, that contingency should be avoided at all costs. This is very important. I plead with the Government that instead of levying this tax, they should find some other method, as I said before.

On the question of irrigation—I hope the Hon. Minister for Irrigation would lend his ears to what I say—I have been suggesting over and over again that a separate department should be constituted to explore the possibilites of water-supply in the whole State. I know they are discussing some of these matters and recently also they were discussing the matter with the neighbouring Government of Kerala. But that is not enough. Not only the river water, but the rain water and other underground water also will have to be tapped. For instance, for the last one year and more I have brought to the notice of the Hon. Minister either here or through other sources, the large quantity of water that is running to waste from the Kanyakumari to the sea. The Irrigation Minister, the Hon. Mr. Kakkan has seen it and he knows how much water is wasted year after year. In one or two years when there is not much of rainfall, the flow may not be very much. But it is an undoubted fact which we have seen with our own eyes that a large quantity of water is wasted into the sea. What are we doing about it? The Government must devote their attention to this and realise that the poor are suffering; if that water is turned to the areas which are thursting for water, perhaps a large area or a whole district can be irrigated with that water. I say, please give your attention to that. It may be said that the Engineering department is looking into it. But the Engineering department could only do their day to day work. So I would again imprest on the Hon. Minister to take the question of constituting a separate department or deputing one of the Chief Engineers with a complete staff of surveyors, etc., to go into this question thoroughly and urgently.

With regard to food production, it is satisfactory to note that there has been a slight increase and in the last year or two there has been an increase of about 2 lakhs tons. Personally, I am no doubt happy, but I am not satisfied with the increase. I can say in this connection that in the case of another crop, in the plantation area,—I mean tea—some years ago we thought we could not get more than 500 lb. But to-day, due to careful cultivation, judicious manuring, etc., estates are able to produce 1,400 to 1,500 lb.—not all estates but estates which do proper cultivation. That means, we are getting 300 per cent more than what we were getting at one time. Therefore, conditions have changed; science has advanced and all possible ways and means should be utilised to increase our paddy crop also. We have not reached the level of Japan or China, in one of which the yield is about 1,000 per cent more than what we are getting here.

Coming to handloom industry, we have been hearing of accumulation of stocks. I would ask the Government what they have done about it? There is the State Trading Corporation. I am afraid

they have been buying such articles on which the Corporation expects to get a profit. If that is so, the existence of that Corporation is of no use. Well, in any transaction, if there is profit, you will have to incur some times a loss also. On the other hand why not the State Trading Corporation effect sales as they are produced and themselves purchase and send to other countries and outer markets.

One more small matter to which I like to refer and that is with regard to the concessions, etc., given to Harijans and other depressed communities. There has been a lot of complaints, although at Ministerial level they had agreed that these concessions would be available to people mentioned in that schedule. Still the educational department does not appear to act up to that advice. In fact there is discrimination—I would call it so—in the grant of these concessions because all such people are not given that benefit. They may profess one religion or another. So long as they are Harijans and belong to the depressed community, no distinction should be there and any distinction should be wiped out. It has been argued that the grant of concession is on economic basis. I would welcome if economic backwardness is taken into consideration. There are, after all, poor people in all communities. Well, you are giving that to the Harijans. But over and above that, give it to the economically backyard—not backward classes alone—irrespective of religion.

Then again, in the matter of midday meals, why should restrictions be put in giving this? You supply food in the schools to certain people. It means we are creating two classes, two divisions. When we are preaching for abolition of all distinctions, why should we do this? Everywhere we want to do away with caste, creed, etc. Then why from very childhood should this be put into their minds that 'you are taking this food; you are inferior', etc. Give the food to everybody; those who like it may take it and those who do not like, need not take it. One other matter and I will finish in one or two minutes, Sir.

I am glad that the Hon. Minister in the concluding paragraph of his Budget speech has made reference to our esteemed friend Mr. T. T. Krishnamachari. I am happy that he had the boldness to add that. In fact, I did not expect it. I appreciate our friend Mr. Subramaniam's attitude in taking up that position. We all realise that Mr. T. T. Krishnamachari belongs to our State and he has done a wonderful piece of work in Delhi. Opinions may differ about other matters, but when a few months ago the country was facing a very very difficult situation regarding our Five-Year Plan, etc., and when finance was required, for that Mr. Krishnamachari went to America and was able to do wonderful things. After all, as you all know financiers whether here or elsewhere or in any country, are hard nuts to crack. By his persuasive methods he was able to explain to the people of other countries the actual needs of our country and was able to get money. We owe a debt of

7th March 1958] [Sri A. V. Thomas]

gratitude to him and we should also thank him for the very valuable service he has done to this country and for the credit he has brought to this State. Thank you, Sir.

Sri N. R. THIAGARAJAN : தலைவர் அவர்களே, சென்ற நான்கு நாட்களாக பட்ஜெட் மீது நண்பர்கள், குறிப்பாக எதிர்க்கட்சி நண்பர்கள் தில்லானு, தெம்மாங்கு, ஜாவளி, பதம் முதலிய ஏதேதோ பாடி முடித்துவிட்டார்கள். தியாகராஜ கீர்த்தனம் பாடுவது என்றால் அதற்கு நேரம் அதிகம் ஆகும். நான் என்ன செய்வது ? ஒலிப் பெருக்கி உயர் திருவாளருடன் ஒத்துழைக்கவில்லை. குட்டைத் திருவாளரோடு கூடிக் குலவியது என்னுடன் ஒத்துழைக்கவில்லை. அதன் அளவுக்கு என்னால் குறுக முடியவில்லை. ஆகவே, ஒலிப் பெருக்கியை உயர் திருவாளருக்காக சற்று உயர்த்தி வைத்தால் கூட நலம். 3-30 p.m.

Sri A. V. P. ASAITHAMBI : உட்கார்ந்தே பேசலாமே.

Sri N. R. THIAGARAJAN : நண்பர் ஆசைத்தம்பி அவர்கள் என்னை உட்கார்ந்தே பேசச் சொல்கிறார்.

Mr. SPEAKER : நின்றுகொண்டே பேசலாம்.

Sri N. R. THIAGARAJAN : "இயற்றலும் ஈட்டலும் காத்த லும் காத்த வகுத்தலும் வல்ல தரசு" என்று வள்ளுவப் பெருந்தகை கூறினார். அதைப்போல், இயற்றலும், ஈட்டலும், காத்தலும், காத்த வகுத்தலும் ஆகிய நான்கு முறைகளைக் கையாண்டு நமது நிதி அமைச்சர் அவர்கள் சோஷலிச பட்ஜெட்டைத் தயாரித்து வெளியிட்டிருக்கிறார்கள். அதற்காக நான் அவரைப் பாராட்டுகிறேன்.

நிதி நிலை அறிக்கையிலே, 34 பாராக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. "வான்நின்று உலகம் வழங்கி வருதலால்தான்—அமிழ்தம் என்றுணரற் பாற்று" என்று வள்ளுவன் கூறியதைப் பின்பற்றி, முதலில் மழையைக் குறிக்கோளாகக்கொண்டு அழகான முறையிலே இந்த பட்ஜெட்டைத் தயாரித்து வெளியிட்டிருக்கிறார்கள். ஒவ்வொரு பாராவாகப் படித்துப் பார்த்ததில், என்னுடைய கவனத்தைக் கவர்ந்த ஒன்றிரண்டு விஷயங்களைப் பற்றி இங்கே கூறப் பிரியப்படுகிறேன்.

காடுகளை வளர்க்கும் வேலைக்காக 29 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக் கிறது. என்னுடைய தொகுதியான தேனியில், ஊருக்கு அருகே ஆண்டு தோறும் மரம் வளர்க்க முயற்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆனால், ஒரு முறைகூட வெற்றியடையவில்லை. இதைப்போன்று என்னுடைய தொகுதியில் பல இடங்களில் ஊர்களுக்கு அருகே மரம் வளர்க்கும் முறையிலே தோல்வியடைந்திருக்கிறார்கள். என்றாலும்கூட, ஆண்டு தோறும் பட்ஜெட்டில் பணம் ஒதுக்கப்பட்டு செலவு செய்யப்படுகிறது. அப்படிச் செலவு செய்யப்படும் பணத்தைக்கொண்டு, ஊருக்கு அருகாமை யிலேயே மரங்களை வளர்க்க முயற்சி செய்வதைவிட, ஊருக்கு அப்பால தூரமான இடங்களில் உள்ள காட்டுப் பகுதிகளில் மரம் வளர்க்க முயற்சி செய்வது நல்லது. அப்படிப்பட்ட காட்டுப் பிரதேசங்கள் மரம் வளர்க்கத் தகுதியாக இருக்கின்றனவா, மழை சரியாகப் பெய்கின்றதா, மரம் வளர நல்ல சூழ்நிலை இருக்கிறதா என்று பார்த்து, இந்த 29 லட்ச ரூபாயையும் செலவு செய்ய வேண்டுமென்று கனம் போலீஸ் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

அடுத்தபடியாக, கூட்டுறவு இலாகா என்னுடைய கவனத்தைக் கவர்ந் தது. எங்கள் ஜில்லாவில், எனக்குத் தெரிந்த அளவில் அந்த இலாகா சரியாக நடைபெறுகிறது என்று என்னால் கூறமுடியவில்லை. இதைப் பல தடவை கூட்டுறவு இலாகா அமைச்சரிடம் நான் கூறியிருக்கிறேன். கூட்டுறவு இலாகா துருப்பிடித்திருக்கிறது. கூட்டுறவு சம்பந்தமான சட்ட

[Sri N. R. Thiagarajan] [7th March 1958

திட்டங்களை மாற்றியமைத்தாகவேண்டும் என்று முதல் அமைச்சர் அவர்களே பல இடங்களில் கூறியிருக்கிறார். இந்த இலாகாவின் சட்ட திட்டங்களைத் திருத்தியமைக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

நெய்வேலித் திட்டத்திற்காக 60 கோடி ரூபாய் செலவாகும் என்று திட்டமிட்டு, அதில் ஏழு கோடி ரூபாய் மத்திய சர்க்கார் பட்ஜெட்டில் இந்த ஆண்டு ஒதுக்கப்பட்டிருக்கிறதைப்பற்றி நான் வாஸ்தவத்திலேயே சந்தோஷப் படுகிறேன். நெய்வேலி என்னுடைய ஜில்லாவில் இல்லை. அது என்னுடைய நாடும் அல்ல. அப்படியானல் நான் எந்த நாட்டைச் சேர்ந்தவன் என்று கேட்கிறீர்களா ? நான் பாண்டிய நாட்டுக்காரன். நான் சரித்திரம் படிக்க வில்லை என்று ஒரு முறை ஒரு பத்திரிகையிலே எழுதப்பட்டிருந்தது. நான் சரித்திரம் நன்ருகப் படித்திருக்கிறேன். தேவிகுளம், பீர்மேடு சென்று பார்த்தால், பாண்டி நாட்டுக்காரர்கள் வந்திருக்கிருர்கள் என்று எங்களைக் கூறுவது வழக்கம். நாங்கள் பாண்டி நாட்டுக்காரர்கள். நெய் வேலியில் 60 கோடி ரூபாய் செலவில் திட்டம் தீட்டி, அதற்காக இவ்வாண்டு ஏழு கோடி ரூபாய் மத்திய சர்க்கார் பட்ஜெட்டில் ஒதுக்கியிருப்பதைக் கண்டு, அண்டை அயலார் நன்ருக வாழட்டும் என்பதற்காக பாண்டிய நாட்டுக் காரனுகிய நான் வாழ்த்துகிறேன்.

அடுத்தாற்போல், கைத்தறியைப்பற்றி எனது நண்பர்கள் பலர் பேசினுர்கள். நானும் அடிக்கடி சட்டசபையில் பேசியிருக்கிறேன். நான் கட்டிக் கொண்டிருப்பது கைத்தறித் துணி. கைத்தறிக்காகப் பேசுகிற மற்றவர்களும், என்னைப்போல் கைத்தறித் துணி கட்டிக்கொண்டால் நன்ருக இருக்கும். சொல்லுதல் யார்க்கும் எளிது, ஆனல், சொல்லிய வண்ணம் செய்வது அரிது. கைத்தறிக்காக கண்ணீர் வடிப்பவர்கள் கர்ளுடிக் மில் துணி கட்டிக்கொண்டிருந்தால், எப்படி கைத்தறியாளர்கள் முன்னேற முடியும் ? அமெரிக்கன் ஸ்லாக் ஷர்ட் அணிந்துகொண்டிருக்கும் ஆசைத் தம்பிமார் தலையசைப்பதைப் பார்க்கும்போது எனக்கு வெட்கமாக இருக்கிறது. கைத்தறித் துணி கட்டவேண்டுமென்று பிறருக்கு கூறுவதற்கு முன்பாக, தானும் கட்டிக்கொள்வது நலம் என்று கூறுகின்றேன். அப்படிச் செய்தால், தமிழகத்தில் தேங்கிக் கிடக்கும் இரண்டரை கோடி கஜம் கைத்தறித் துணி 'ஸ்டாக்' இல்லாமல் தீர்ந்துபோய்விடும். கைத்தறியாளர்களுக்கு உதவி செய்யவேண்டும் என்பதிலே எல்லாக் கட்சிக் காரர்களிடையேயும் யாதொரு விதமான அபிப்பிராய பேதமும் கிடையாது. எல்லோரும் கைத்தறித் துணியையே கட்டுவார்களானுல், நிச்சயமாக ஸ்டாக் மிச்சம் இருக்கவே இருக்காது. ஆகவே, எதிர்க்கட்சி நண்பர்களும் கைத்தறி கட்டவேண்டும். கச்சேரிகளிலும் இத்திட்டங்களை வரவேற்ருக வேண்டும்.

மருத்துவம், சுகாதாரம் என்ற இனத்திலே எனக்கு மிக்க குறை இருக்கிறது. திருத்தியமைக்கப்பட்ட சென்னையில் ஆறுயிரம் டாக்டர்கள் இருக்கிருர்கள். பத்தாயிரம் ஜனத்தொகைக்கு ஒரு டாக்டர் வீதம் போட்டாலும் மூவாயிரம் ஆஸ்பத்திரிகள் தமிழ்நாட்டுக்குத் தேவை. ஒவ்வொரு டாக்டரையும் ஒவ்வொரு ஆஸ்பத்திரிக்கு போட்டால், மூவாயிரம் டாக்டர்கள் தேவை. ஆனல் டெலிபோன் கையிடைப் பார்த்தால், சென்னை நகரத்திலேயே மூவாயிரம் டாக்டர்களுக்கு அதிகமாக இருப்பதைப் பார்க்கலாம். எந்தப் பக்கத்தைப் பார்த்தாலும், அதில் டாக்டருடைய பெயர்தான். இப்படி ஆயிரக்கணக்கான டாக்டர்கள் சென்னை நகரத்தில் கூடிக் குலாவிக் கொண்டிருக்கிருர்கள். ஏதேதோ சட்ட திட்டகள் செய்கிறோம். இவர்களுக்காக ஒரு சட்டம் செய்து, கூட்டமாக ஒரே இடத்தில் டாக்டர்கள் இல்லாமல், கிராமங்களுக்கு அவர்களை அனுப்புவதற்கு ஏதாவது திட்டம் வகுத்தால் நலமாக இருக்கும் என்று சுகாதார அமைச்சர் அவர்களிடம் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

பின்தங்கிய மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப் வழங்குவதற்காக மத்திய சர்க்காரிடமிருந்து நமக்கு 28 லட்ச ரூபாய் வந்துகொண்டிருந்தது இந்த ஆண்டு நிறுத்தப்பட்டுவிட்டதால், அனேக மாணவர்கள் ஸ்காலர்ஷிப் கிடைக்

7th March 1958] [Sri N. R. Thiagarajan]

காமல் கஷ்டப்படுவதாக என்னுடைய ஜில்லாவிலிருந்து எனக்கு 22 கடிதங்களுக்குமேல் வந்திருக்கின்றன. திடீரென்று நிறுத்திவிட்டதால் பல மாணவர்கள் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, தயவுசெய்து மீண்டும் மத்திய சர்க்காரிடமிருந்து அந்தத் தொகையைப் பெற்று, ஸ்காலர்ஷிப் கொடுக்க வகை செய்யவேண்டும். மத்திய சர்க்கார் தொகை கொடுக்கவில்லையென்றால், சென்னை சர்க்காராவது தொகை ஒதுக்கி, அந்த மாணவர்களுக்குத் தொடர்ந்து உதவியளிக்க வேண்டுமென்று சம்பந்தப்பட்ட அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

ரயில்வே பாதை அளவு அடிப்படையில் மத்திய சர்க்காரிடம் இருந்து நமக்கு 64 லட்சம் ரூபாய் கிடைக்குமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ரயில்வே பாதை அளவைக் கணக்கிட்டு தொகை கொடுப்பதைவிட, ரயில் போகும் தூரத்தைக் கணக்கிட்டால்—அதிக ரயில்கள் நம் பக்கத்தில் போவதால்—நமக்கு அதிக வருமானம் வரலாம் என்று நினைக்கிறேன். அதையும் பரிசீலனை செய்யும்படி நான் நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

என்.ஜி.ஓ.-க்களுக்காக மத்திய சர்க்கார் பட்ஜெட்டிலே 30 லட்சம் ரூபாய் நமக்குக் கொடுத்திருக்கிறார்கள் என்று நிதி நிலை அறிக்கையிலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால், மத்திய சர்க்காருடைய பட்ஜெட்டைப் பார்த்தால், ஆறு கோடி ரூபாய் ஒதுக்கியிருப்பதாகப் பார்த்தேன். ஜனத்தொகை விகிதாசார அடிப்படையில் நமக்கு 50 லட்சம் ரூபாய் கிடைக்கவேண்டும். ஆகவே, பாக்கி தொகையையும் மத்திய சர்க்காரிடமிருந்து கேட்டு வாங்கி, பெரிய நகரங்களில் வசிக்கும் என்.ஜி.ஓ.-க்களுக்குக் காவது பத்து, பதினைந்து அல்லது இருபத்தைந்து ரூபாயாவது அதிகமாகக் கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன். நாம் தினமொன்றுக்கு $12\frac{1}{2}$ ரூபாய் வாங்கும்போதே நமக்குச் செலவுக்குப் போதாமல் இருக்கும்போது, 100 முதல் 150 ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டு பெரிய நகரங்களில் வாழ்வதற்கு முடியாது. சிறிய தாலூகாக்களில் வேண்டுமானால் இந்தத் தொகையைக் கொண்டு ஒருவாறு வாழ முடியும். ஆனால், பெரிய நகரங்களிலே வாழ்வது சிரமமாக இருக்கும் என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆகவே, மத்திய சர்க்காரிடமிருந்து நமக்கு நியாயமாகக் கிடைக்கவேண்டிய 50 லட்சம் ரூபாயைப் பெறுவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

டீசல் எண்ணெய் மீது வரி விதிக்கும்போது, விவசாயிகளுக்கு மாத்திரம் ஏதேனும் சலுகை காட்ட வேண்டுமென்று கேட்டுக்கொள்வதோடு, சினிமாவுக்கு வரியை உயர்த்துவதையும் நான் வரவேற்கிறேன். சினிமாவுக்கு விதித்திருக்கும் வரி போதாது. படம் வெளியிடும்போது, நமது ராஜ்யத்திலிருந்து வெளியிடும் படங்களுக்கு சர்ட்டிபிகேட் வழங்குவதற்கு முன்பாக, ஒரு அடிக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை வசூலிக்கலாம். ஒரு அடிக்கு குறைந்தது ஐந்து ரூபாயாவது வசூலித்தால், 20 ஆயிரம் அடிக்கு ஒரு லட்சம் ரூபாய் வரி விதிக்கலாமா என்பதை யோசனை செய்து பார்க்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

கடைசியாக, விவசாய வருமான வரிக்கு வருகிறேன். வரி விதிப்பை நான் எதிர்க்கவில்லை. இதனால் நமக்குக் கஷ்டம் வருமோ என்ற பயம்தான் ஏற்படுகிறது. "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின்செல்பவர்" என்று வள்ளுவப் பெருந்தகை கூறினார். "உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர் பழுதுண்டு வேறோர் பணிக்கு" என்று ஔவையார் பாடியிருக்கிறார். ஒருகாலத்தில் உழுதுண்டு வாழ்பவர்கள் வாழ்பவர்களாகக் கருதப்பட்டார்கள். இப்பொழுது அவர்கள் தொழுதுண்டு பின்செல்பவர்களாகிவிடக்கூடிய நிலை ஏற்படுமோ என்று ஐயுறுகிறேன். அத்தகைய நிலை ஏற்படாவண்ணம் விவசாய வருமான வரியை மாற்றியமைக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

அது மட்டுமல்ல. உதாரணமாக நம் நாட்டிலே, கிராம முன்சீப், கர்ணம் முறையை மாற்றியமைக்க வேண்டுமென்று இருபது ஆண்டுகளாகப் பிரசாரம் செய்து வந்திருக்கிறேன். அந்த முறையை மாற்றியமைத்து

[Sri N. R. Thiagarajan] [7th March 1958

விட்டால் வருமானம் பாதிக்கவே பாதிக்காது என்பது என்னுடைய அபிப்பிராயம். இதையும் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனக்கு இந்த நேரத்தைக் கொடுத்த தலைவர் அவர்களுக்கு என்னுடைய வந்தனத்தைத் தெரிவித்துக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்ளுகின்றேன். ஜெய் ஹிந்த். (கனம் அங்கத்தினர் ஸ்ரீ எ. வி. பி. ஆசைத்தம்பி எழுந்தார்.)

**MR. SPEAKER :** உங்களைப்பற்றி ஒன்றும் சொல்லவே இல்லை. பொதுவாகத்தான் சொன்னார். உங்கள் பெயரை அவர் எடுக்கவில்லை.

**SRI A. V P. ASAITHAMBI :** அவர் என்னைக் குறிப்பிடவில்லையென்றால் நான் விட்டுவிடுகிறேன்.

**SRI N. R. THIAGARAJAN :** " என் ஆசைத் தம்பிமார்கள் " என்று நான் கூறினேன்.

3-40 p.m. **DR. E. P. MATHURAM :** கனம் சபாநாயகர் அவர்களே, எனக்குப் பேச வாய்ப்புக் கொடுத்ததற்காக நான் உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்களால் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிற நிதி நிலை அறிக்கையை பற்றாக்குறையானது என்று சொல்வதற்கு நியாயம் இல்லை. ஆனால் அவர்கள் 105 லட்சம் ரூபாய் குறைவு ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னார்கள். அதைச் சரிக்கட்ட வரிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. சரியானபடி பார்க்கப்போனால் இது பற்றாக்குறை பட்ஜெட்டாகத் தயாரித்திருக்க வேண்டியது இல்லை. ஏனென்றால், அநேக முக்கியமான காரியங்கள் இந்த ஆண்டில் செய்யப்படாது ஓரளவு செய்யப்பட்டு செய்யாத நிலையில் இருந்துகொண்டிருக்கிறது. அதற்கு நிதி அமைச்சர் அவர்கள் சில காரணங்களைக் காட்டி சமாதானம் சொல்லியிருக்கிறார்கள். அப்படி இருக்கும்போது அதற்குரிய பணத்திலுள்ள மிச்சம் உபரியாக வந்து சேரப்போகிறது. அதேசமயத்தில் மத்திய சர்க்காருக்குக் கொடுக்கவேண்டிய கடன் தொகைக்கான வட்டியில்—கமிஷனுடைய சிபார்சுப்படி 60 லட்சம் ரூபாய் குறைக்கப்பட்டு நமக்கு வந்து சேர இருக்கிறது. மத்திய சர்க்கார் கமிஷனுடைய சிபார்சை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டியிருக்கும். இவர்கள் முதலிலேயே கடனுக்கு வட்டி கிடையாது என்று சொல்லியிருந்தால் இப்போது அவர்கள் வட்டியில் கொஞ்சம் குறைத்துக்கொள்ளக்கூடிய நிலைமைக்காவது வந்திருப்பார்கள். எப்படியிருந்தாலும் நமது நிதி அமைச்சர் அவர்கள் இந்தப் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தி அவர்களிடத்திலிருந்து 60 லட்சம் ரூபாயையும் வாங்கிவிட வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அப்புறமும் பற்றாக்குறை விழுந்து வருவாயை அதிகப்படுத்த வேண்டும் என்கிற நிலைமை ஏற்பட்டால் வரி விதிப்பு பற்றி யோசிக்கலாம். வரி விதிப்பது என்றால் அது சம்பந்தப்பட்டவர்களுக்கு ஓரளவு மனம் கஷ்டத்தான்படுகிறது. பொதுவாகப் பார்க்கும்போது வரி விதிப்பு அவசியம்தான். குறிப்பாக நிலத்தின்மீது வருமான வரி விதிப்பது என்று யோசிக்கிற காலத்தில் ரொம்ப குறைந்த நிலம் வைத்துக்கொண்டிருக்கிற சிறு நிலச்சுவாந்தார்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் வகையில் ஐயாயிரம் ரூபாய்க்கு மேல் வருமானம் உள்ளவர்களுக்கு வரி விதிக்கும்படி ஏற்பாடு செய்யலாம். அப்படி மூவாயிரத்திலிருந்து ஐயாயிரமாகவோ, ஆறாயிரமாகவோ மாற்றி அமைத்தால் சிறு நிலச்சுவாந்தார்களுக்கு பாதுகாப்பாக இருக்கும். அது நியாயமாகவும் ஆகும். இதர துறைகளில் இருந்து வரும் வருமானத்தையும் சேர்த்து இந்த வருமானத்தோடு கூட்டி வரி விதிப்பது என்பது சரியான கருத்தல்ல. அதனால் இத்துறையில் ஊக்கம் குன்றி விவசாய உற்பத்தி வெகுவாகப் பாதிக்கும் நிலைமை உண்டாகலாம். இதோடு பலருக்கு மன நோவு வேறு உண்டாகிறது. ஆகவே இது இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து கணக்கிடுவதையும் மாற்றி தனித்தனியாக அந்த அந்த இனங்களுக்கு வரி விதிப்பது என்ற சலுகையையும் காட்டவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். அப்படிச் செய்தால் அது நாட்டுக்கு நலம் விளைவிப்பதாக இருக்கும்.

அடுத்தபடியாக நான் மிகவும் முக்கியமான ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். நான் திருச்சி நகரசபைத் தலைவன். அங்கு இப்போது திடீரென்று ஏற்பட்ட ஒரு நிலைமையின் காரணமாக குடிதண்ணீர் கஷ்டம் மிகவும் அதிகமாக ஏற்பட்டுவிட்டது. அறுபது வருஷத்திற்கு முன்னால் 75,000 ஜனங்களுக்கு குடிதண்ணீர் எப்படி இருந்ததோ அதே நிலைமை இன்றைக்கும் உண்டாக்கப்பட்டு இருந்து வருகிறது. அறுபது வருஷத்திற்கு முன்னால் போடப்பட்ட குழாய்கள் இருபது வருஷங்களுக்குத்தான் சேவை செய்யக்கூடிய சக்தி உடைய குழாய்கள். இன்றைக்கு 60 வருஷம் சேவை செய்தவைகள் ஓட்டை விழுந்து மண் அடைத்துக்கொண்டுவிட்டது. ஏற்கனவே இவை திடீரென்று விழுந்து போகலாம் என எண்ணியே அவைகளைச் செப்பனிட பல திட்டங்களைப் போட்டோம். சர்க்காரிடம் கடன் கேட்டோம். அப்போது சர்க்கார், கொடுக்கமுடியவில்லை என்று சொல்லிவிட்டார்கள். எங்கள் நகரசபை செலவையே கொஞ்சம் வேறு இனங்களில் குறைத்துக்கொண்டு இந்த வருஷத்திய பட்ஜெட்டில் குழாய்களுக்கு ரிப்பேருக்கு இரண்டு லட்சம் ரூபாயும், மெகானிகல் பில்டர்சுக்காக ஐந்து லட்சம் ரூபாயும் ஒதுக்கியிருக்கிறோம். அதற்குள் திடீரென்று குழாய்கள் விழுந்துபோய் விட்டன. ஒரு மணி நேரத்திற்கு ஒரு லட்சத்து எண்பதினாயிரம் காலன் தண்ணீர் இறைத்தவைகள் இன்றைக்கு ஒரு லட்சம் நாற்பது ஆயிரம்கூட எடுப்பதில்லை. நகரப் பகுதிகளில் தண்ணீர் கஷ்டம் அதிகமாக இருக்கிறது. தூரத்திலுள்ள இடங்களுக்கு தண்ணீர் போவதில்லை. போகவேண்டுமென்றாலும் வால்யூம் அதிகரிக்கவேண்டும். அப்போதுதான் ப்ரஷர் இருக்கும். திடீரென்று எங்களுக்கு ஏற்பட்ட கஷ்டத்தை சர்க்கார் உணர்ந்து ஸ்டேட் ஆப் எமர்ஜன்ஸி என்கிற முறைப்படியாவது உடனடியாக ரெட்டேபிஸ முறை இல்லாது பண உதவி கடனாகவாவது கொடுக்கவேண்டும். நாங்கள் ஒதுக்கியிருக்கும் தொகை போக மேற்கொண்டு பத்து லட்சமாவது வேண்டும். இன்றைக்கு மூன்று லட்சம் ஜனங்கள் கஷ்டப்படுகிறார்கள். மேலும் கோடைகாலம் வேறு வருகிறது. ஆற்றுக்கு அடியில் பதினெட்டு அடியின் கீழ் உள்ள குழாய்களை ரிப்பேர் செய்யவேண்டுமாதலால் உடனடியாகக் கொடுத்தால்தான் இந்தக் கோடை காலத்திலேயே அதை ரிப்பேர் செய்துவிடமுடியும். இல்லாவிட்டால் தண்ணீர் வந்துவிடும். அப்புறம் அடுத்த ஆண்டுதான். அதற்குள் ஜனங்களுக்கு ஏற்படும் கஷ்டம் எவ்வளவு என்று சொல்ல முடியாது. ஆற்றுத் தண்ணீரை அப்படியே குடிதண்ணீர் குழாயில் அனுப்பிவிட முடியாது. துரதிருஷ்டவசமாக எங்கள் நகரத்தில் வடபகுதி சாக்கடைத் தண்ணீர் அப்படியே காவேரியாற்றில் போய் விழுகிறது. தெற்கே உய்யக்கொண்டான் ஆற்றில் உள்ள நதியிலோ திருச்சி ஹெட்குவார்ட்டர்ஸ் ஆஸ்பத்திரி சாக்கடைத் தண்ணீர் முழுவதும் விழுகிறது. திருச்சி நகரத்திற்குப் பக்கத்திலுள்ள கிராமங்களில் அடிக்கடி காலரா வந்தது. அதன் காரணமாக திருச்சியில் அது பரவாமல் தடுப்பதற்காகவேண்டி மெகானிகல் பில்டர்ஸ் அமைக்கப்பட்டது. அதையும் சீரமைக்கவேண்டிய அவசியம் இருப்பதனால் இன்றைக்கு எங்கள் நகர சபைக்குத் தேவையான பணத்தை உடனடியாக சர்க்கார் கொடுத்து உதவவேண்டும். பப்ளிக் டிபார்ட்மெண்டு சாங்ஷன், டெக்னிகல் சாங்ஷன் என்றெல்லாம் அப்போது எதிர்பார்த்துக் கொண்டிருப்பதற்கில்லை. காலதாமதம் ஏற்படக்கூடாது.

இது உடனடியாக கவனிக்கப்பட வேண்டிய விஷயம். அவசரமாகக் கவனிக்கவேண்டிய விஷயம். இந்த ஏப்ரல், மே மாதத்திற்குள்ளாகவே காரியங்கள் செய்யப்படவேண்டியிருப்பதனால் சர்க்கார் உடனடியாக செய்து எங்களுக்குத் தேவையான தொகையையும் கொடுக்க வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

இது விஷயமாக மேல் அதிகாரிகளிடம் சென்று பேசினேன். மெக்கானிக்கல் பில்ட்டர்ஸ் " பிட் " பண்ண இரண்டு வருட காலமாவது ஆகும் என்று சொன்னார்கள். சமீபத்தில் சென்னையில் மெக்கானிக்கல் பில்ட்டெர்ஸ் அமைத்திருக்கிறார்கள். அவர்களை அங்கு அனுப்பி வைத்து அதைச் செய்தால் அந்த வேலையைச் சீக்கிரம் முடிக்கலாம். அதை பத்து மாதத்திற்குள் முடிக்கலாம். அதை சீக்கிரம் செய்து கொடுத்தால் திருச்சி நகர மக்களின் அன்பை நீங்கள் பெற முடியும். ஆகவே நான் திரும்பத்

திரும்ப பணிவுடன் சொல்லிக்கொள்கிறேன், அதை அவசியம் சீக்கிரம் செய்து கொடுக்கவேண்டும். இன்னும் ஒன்றிரண்டு காரியங்கள் இருக்கின்றன. திருச்சியில் ஒரு ஸ்டேடியம் மிகவும் அவசியம். அங்கு ஐந்து காலேஜ்கள் இருக்கின்றன. அங்கு, பிள்ளைகளுக்கு விளையாட வசதியான இடமில்லை. திருச்சி நகரசபை ஓரளவு உதவி செய்ய முன்வந்தும், அதற்கு சர்க்கார் அனுசரணையாக இல்லாததால், அதற்கு வேண்டிய நிலம் கிடைக்காததால் அது முடியாமல் இருக்கிறது. அதற்கு வேண்டிய உதவி செய்யும்படி நான் மிகவும் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, திருச்சி நகரத்தைப் பொறுத்தவரையில், எங்கு பார்த்தாலும், வீடுகளின் சுவர்களில் எல்லாம் எழுத்துக்கள். கண்டபடியான அட்வர்டைஸ்மென்ட்ஸ். அதற்கு என்று ஒரு பில் வருகிறது என்று சொன்னார்கள், அது வரக்காணோம். ஆபாசமாக இருக்கிறது. எங்கு பார்த்தாலும் பீடி மயமாயிருக்கிறது. தயவுசெய்து அதற்கு ஒரு சட்டம் கொண்டு வந்து ஊரின் அழகைக் கெடுக்காது இருக்கவேண்டும். திரும்பத் திரும்ப வெள்ளை அடிக்க சந்தர்ப்பம் கொடுக்காத நிலை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, டிரங்க் ரோடுகளில் போகும் லாரிகள். வெளிச்சம் ஒரு பக்கம். Glaring headlights களில் இருக்கும் எதிர் வெளிச்சம் ஆதலால் கண் கூச்சத்தினால் மற்ற கார்களுக்குப் போக இடைஞ்சலாக இருக்கிறது, அதனால் ஆக்ஸிடன்ட்ஸ் ஏற்படுகிறது. லாரி டிரைவர்களின் "நெக்லிஜென்ஸினால்" ஆக்ஸிடன்ட்ஸ் ஏற்படுகிறது. ஸ்பீட் லிமிட்டைத் தாண்டி ஓட்டுவதால் ஆக்ஸிடன்ட்ஸ் ஏற்படுகிறது. பின்னால் உள்ள கார்களை கவனிக்காது அதன் ரிப்ளக்டர்கள். அந்த ரிப்ளக்டர்கள் மடக்கி வைக்கப்படுகிறது. டெஸ்டின் போதுதான் இது நீட்டப்படும். பின் வரும் கார்களும் தெரியாது. ஹார்ன் அடித்தாலும் கேட்காது. லாரிகளோ பழைய லாரிகளாக இருக்கின்றன. ஆகவே, லாரிகளினால் உயிர்களுக்கு ஆபத்து ஏற்படுவதோடு பொருள் சேதமும் அதிகம். இதையெல்லாம் அந்த இலாக்காக்காரர்கள் கவனிக்க வேண்டும். (பெல்) டிரங்க் ரோடில் 25 மைலிற்கு ஒரு செக்கிங் இருந்தால் நன்றாக இருக்கும். அவைகளையெல்லாம் கவனிக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டு எனக்கு பேச சந்தர்ப்பம் அளித்த தலைவர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : ஸ்ரீ டி. பி. எழுமலை அவர்கள் ஏழு நிமிஷந்தான் பேசலாம். 4 மணிக்கு மந்திரியவர்கள் பேசப் போகிறார்கள்.

**Sri T. P. ELUMALAI** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஆண்டு நிதியமைச்சர் அவர்கள் கொண்டு வந்துள்ள வரவுசெலவுத் திட்டத்தை ஆதரித்து நான் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இந்த வரவு செலவுத் திட்டமானது, உண்மையிலேயே ஏழை மக்களின் வாழ்க்கை நிலையை முன்னேற்றுவதற்கு உகந்த முறையில் அமைந்திருப்பதை நாம் எல்லோரும் கண்கூடாகப் பார்க்கின்றோம். இருந்தாலும் மாற்றுக் கட்சியில் இருக்கின்றவர்கள் அவர்களின் கட்சி வளர்ச்சிக்காக வேண்டி ஏதாவது சொல்ல வேண்டுமென்ற காரணத்திற்காக இரண்டொரு வார்த்தைகள் குறையாக சொல்வதைத்தான் நாம் பார்க்கிறோம். தவிர, குறிப்பாக, ஹரிஜன மக்களுக்கும், மீனவ மக்களுக்கும் சிறந்த முறையில் பல திட்டங்களைப் போட்டு அவர்களின் வாழ்க்கை நிலையை முன்னணிக்கு கொண்டுவருகிற ஒரு நிலையை நாம் நன்கு பார்த்துவருகிறோம். குறிப்பாக எனது பகுதியில் இருக்கிற மீனவர்களுக்கு ஆயிரம் ஆயிரமாக பணம் ஒதுக்கி அவர்கள் அவர்களது தொழிலை நல்ல முறையில் நடத்துவதற்கு வேண்டி அதற்குறிய சாதனங்கள் பலவற்றை வாங்கிக்கொடுப்பதை பார்க்கிறோம். அது மட்டுமல்ல. ஹரிஜனங்களுக்கும் வீடு கட்டிக் கொடுக்கும் திட்டமானது, என் தொகுதியில் பல பகுதிகளிலும் வீடுகள் கட்டிக் கொடுக்கப்படும் காட்சியை நான் கண்டிருக்கிறேன். நாட்டில் வசதியுள்ளவர்களின்மேல் ஓரளவு வரி போட்டு ஏழை மக்களுக்கு வேண்டியதைச் செய்து கொடுக்கிறார்கள். அந்த நிலையைத்தான் நிதியமைச்சர் அவர்கள் தமது அறிக்கையில் நமக்கு கொடுத்திருக்கிறார்கள். டீஸல் ஆயிலுக்கும், பொழுது போக்குகிற ஒரு நிலையில் இருக்கிறவர்களுக்கும் வரி போட்டிருக்

7th March 1958] [Sri T. P. Elumalai]

கிறார்கள். சினிமாவிற்கு வரி போட்டதற்காக நாம் எல்லோரும் நிதியமைச்சர் அவர்களைப் பாராட்ட வேண்டும். பாராட்டும் நிலையையும் நாம் இந்த சபையில் காண்கிறோம். மாற்றுக் கட்சியில் இருக்கிறவர்களில் ஓரளவு சினிமாத் துறையில் பங்கு கொண்டிருக்கிறவர்களும் அதைப் பாராட்டும் நிலையைப் பார்க்கிறோம். அதைப் பார்க்கும் போது சினிமாத் தொழில் முழுவதையும் தேசியமயமாக்கும் ஒரு நிலையைக் கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அந்த நிலை ஏற்படுத்த நமது சர்க்கார் வேண்டியது செய்வார்கள் என்ற நம்பிக்கையும் எனக்கு இருக்கிறது. சர்க்கார் ஒரு வேளை நினைப்பார்கள். அப்படி தேசிய மயமாக்கிவிட்டால் கதை எழுதுபவர்கள் இல்லாது போய் விடுவார்களோ என்று கலங்க வேண்டாம். கதை எழுதும் நண்பர்கள் நமது சட்ட சபையில் இருக்கிறார்கள். மதிப்பிற்குரிய அண்ணா அவர்கள் இருக்கிறார்கள். அவர்கள், நமக்கு அந்த உதவியைச் செய்வார்கள் என்ற நம்பிக்கையும் எனக்கு இருக்கிறது. அப்படிப்பட்டவர்கள் நம்மிடையே இருக்கும்போது (நாம்) என் சினிமாத் தொழிலை தேசியமயமாக்கக்கூடாது. சினிமாவை தேசியமயமாக்க வேண்டும் என்றும் நான் மீண்டும் வற்புறுத்தி கேட்டுக்கொள்கிறேன். இதனால் மற்ற இனங்களில் நாம் அதிக வரி போட வேண்டாம். ஆகவே நான் இந்த சந்தர்ப்பத்தில் சொல்ல ஆசைப்படுவது என்னவென்றால் சினிமாத் தொழிலை தேசியமயமாக்கிவிட்டால் சினிமாவின் தரம் உயர்வதோடு அதில் இருந்து கிடைக்கும் பணமும் நம் சர்க்காருக்கு வரும். திராவிட முன்னேற்றக் கழகக்காரர்கள் சொல்கிறார்கள், வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்று. நான் பேப்பரிலே பார்த்தேன், தெற்குக்கும் ஓரளவு வழி செய்யவேண்டுமென்று வடக்கே இருக்கிறவர்கள் வழி வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள். திருவொற்றியூரில் ஒரு சிமெண்ட் பாக்டரி ஆரம்பிக்கப் போவதாக நான் பேப்பரில் பார்த்தேன். அதைப் பார்த்து பெருமகிழ்ச்சி அடைந்தேன். நம் மாகாண சர்க்கார் கேட்டிருப்பார்களா என்று எண்ணுகின்றோம். ஆனால் திருவொற்றியூரில் அது வரும் என்று நான் நினைக்கவில்லை. ஆனால், எங்கெங்கு தொழிற்சாதனங்கள் இருக்குமோ, அத்தொழிற்சாலை எங்கு ஆரம்பிக்க வேண்டும் என்ற அவசியம் இருக்குமோ அங்கு ஆரம்பிக்கப்படுகின்றது. இந்த அபிவிருத்தி வேலைகளுக்கு முட்டுக்கட்டை போடுகிறவர்கள் எதிர்க்கட்சிக்காரர்கள்தான் என்று நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். குறிப்பாக அதற்கு ஒரு உதாரணம் சொல்கிறேன். செங்கல்பட்டு ஜில்லாவில் ஒரு சர்க்கரை ஆலை ஆரம்பிக்க வேண்டுமென்று ஒரு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அது இதுவரையில் நடக்கவில்லை. அதற்குக் காரணம், என்னவென்றால் நம்மதிப்பிற்குறிய எதிர்கட்சித் தலைவர் அவர்களுடைய ஆதிக்கத்தால்தான். சோத்துப்பாக்கம் என்ற கிராமத்தில் ஆலைக்கு வேண்டிய சாதனங்கள் இருக்கிறதா என்று ஆராய்ச்சி நடந்தது ஒரு வருடமாக. அந்த ஆலைக்கு மிகவும் அவசியம் தண்ணீர்தான். மேற்படி இடத்தில் 150 அடி வரையில் அங்கு தண்ணீர் இருக்கிறதா என்று ஆராய்ச்சி செய்யப்பட்டது. நூற்று ஐம்பது அடிக்கு கீழும் பாறையாகத்தான் இருக்கிறது. ஆகவே, அந்த இடத்தை கைவிட்டு விட்டு பட்டாலம் என்ற கிராமத்தை எடுத்துக் கொண்டார்கள். அங்கு போதுமான வசதியிருக்கிறது, உடனே ஆரம்பிக்கலாம். ஆனால் எதிர்கட்சித் தலைவர் அவர்கள் அங்கு வேண்டாமென்று தள்ளி போட்டுக்கொண்டு வருகின்றார். மேலும் வேறு இடத்தில் போட முயற்சியும் செய்கிறார்கள்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, the whole matter is *sub judice*. They have not yet decided whether it should be located in Chothupakkam or in any other place.

THE HON. SRI C. SUBRAMANIAM : Has the matter gone to a court of law?

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : No. But the matter is still under consideration.

[7th March 1958

THE HON. SRI C. SUBRAMANIAM: Then it cannot be said to be *sub judice*?

MR. SPEAKER: The hon. Member may refer to a matter under examination. The only thing is that he cannot refer to a matter which is before a court.

4 p.m. SRI T. P. ELUMALAI: இந்த சந்தர்ப்பத்தில் பட்டாலம் என்ற கிராமத்தில் ஏற்படுத்துவதற்காக ஆராய்ச்சி நடந்து கொண்டிருந்தது. அங்கு ஏற்படுத்துவதற்கு எவ்வளவோ வசதிகள் இருந்தும் அதை ஆரம்பிப்பதற்கு நமது எதிர் கட்சித் தலைவர் அவர்கள் அனுமதி கொடுக்கவில்லை. ஆராய்ச்சி அரைகுறையாக இருக்கும்போது அதை தண்டலம் என்ற கிராமத்திற்கு இழுத்துக் கொண்டு போய் விட்டார்கள். தண்டலம் என்ற கிராமத்திற்கு தாண்டியே விட்டார். இப்போது அங்கு என்ன நடக்கிறது என்று தெரியவில்லை. அதை இன்னும் எப்படி செய்யப்போகிறார்கள் என்று இப்போது சொல்ல முடியாது. அவர் நினைத்திருந்தால் லாயக்கான பட்டாலம் என்ற கிராமத்திலேயே இந்த வருடத்தில் அதை தொடர்ந்து நடத்தியிருக்க முடியும். இதை ஏன் இவ்விதம் செய்கிறார்கள் என்றால், இந்த திட்டத்தை கொண்டு விவசாயிகளுக்கு இந்த சர்க்கார் நன்மை செய்து விட்டால் ஓரளவு தனக்கிருக்கின்ற செல்வாக்கு குறைந்து போய் விடுமே என்றுள்ள அச்சத்தினால்தான் இவற்றை எல்லாம் கனம் எதிர் கட்சித் தலைவர் அவர்கள் நடத்துகிறார்கள். இவ்விதம் எதிர்க்கட்சியிலுள்ளவர்களுக்கு எல்லா வசதிகளையும் நமது சர்க்கார் கொடுத்திருக்கிறது. ஆகவே நான் எதிர்க்கட்சிக்காரர்களை கேட்டுக்கொள்கிறேன். நல்ல திட்டங்கள் வரும்போது அதை வரவேற்கக்கூடிய மனப்பான்மை உங்களிடம் வரவேண்டும். அதிலும் முக்கியமாக திராவிட முன்னேற்ற கழக நண்பர்கள் இதற்கு முனைந்து முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நம் நாட்டில் ஓரளவு சத்தியத்திற்கும் கடவுளுக்கும் நம்பிக்கை இருந்து வந்ததை நாம் பார்த்தோம். இன்றைக்கு தேசம் பூராவும் பேச்சை நம்பித்தான் இருக்கிறது. சொன்ன வார்த்தைக்கு நம்பிக்கை இருக்கவேண்டும். தி. மு. க. நண்பர்கள் ஏழைக்காக பாடுபடுகிறோம்என்று சொல்லுகிறார்கள். ஆனால் இன்றைக்கு அவ்விதம் நடக்கிறார்களா என்பது சந்தேகம்தான். ஆகவே ஏழை மக்களுக்கு செய்யப்படுகின்ற அபிவிருத்தி காரியங்களில் அவர்கள் ஒத்துழைக்க முனைந்து நிற்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஏழைகளுக்காக செய்யப்படுகின்ற காரியங்களை பார்த்துப் பணம் படைத்த பணக்காரர்கள் பெருமூச்சு விடுகிறார்கள். அதை மாற்றி ஏழைகள்பால் நின்று ஆதரித்து அவர்களுக்கு நன்மை செய்ய எல்லா கட்சி நண்பர்களும் முன்னுக்கு வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்த வரவு செலவு திட்டத்தின் மீது நடைபெறுகின்ற விவாதத்தில் ஏழு நிமிடம் பேச எனக்கும் வாய்ப்பு தந்ததற்காக என் நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் சபாநாயகர் அவர்களே, உணவுப் பிரச்னையைப்பற்றி, உணவு உற்பத்தியின் நிலையைப்பற்றியும் இந்த விவாதத்தில் கலந்து கொண்ட சில கனம் அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். அவர்கள் குறிப்பிட்ட கருத்துக்களுக்கு மட்டும் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். மேலும் என் சம்பந்தப்பட்ட இலாகாக்கள் விஷயமாக தெரிவிக்கப்பட்ட கருத்துக்கள் பற்றி நான் இப்போது குறிப்பிடவில்லை. நான் அவைகளைப்பற்றி கவனம் செலுத்த வில்லை என்று கனம் அங்கத்தினர்கள் எடுத்துக்கொள்ளக்கூடாது. அவைகளைப்பற்றிய மான்ய விவாதங்கள் வரும்போது எனக்கு பேசுவதற்கு அவகாசம் இருக்கும். அந்த சமயத்தில் அவைகளைப்பற்றி பேசிக்கொள்கிறேன். இந்த சமயத்தில் இந்த மன்றத்தின் காலத்தை வீணாக்க வேண்டாம் என்று கருதி ஒரு சில விஷயங்களை மட்டும் இப்போது சொல்ல விரும்புகிறேன். பல கனம் அங்கத்தினர்கள் நியாய விலை கடைகள் மார்ச் முதல் தேதியிலிருந்து எடுக்கப்படுவதைப்பற்றி குறிப்பிட்டு

பேசினார்கள். அவ்வாறு எடுப்பது தவறு, நியாயவிலை கடைகள் அவசியமாக தொடர்ந்து நடைபெற வேண்டும், அது நடைபெறவில்லையென்றால் ஏழை மக்கள் பாதிக்கப்படுவார்கள் என்ற கருத்தை எல்லாம் வெளியிட்டார்கள். ஆனால் நான் சொல்ல விரும்புவது என்னவென்றால் நியாயவிலை கடைகளை மார்ச் முதல் தேதியிலிருந்து எடுத்து விடுவது என்றுதான் சர்க்கார் முடிவு செய்திருக்கிறது. ஆனால் இதைப்பற்றி இம்மாதிரிப்பட்ட கருத்தை வெளியிடுகின்றேன் என்றால் கனம் அங்கத்தினர்கள் அதை தவறாக எடுத்துக் கொள்ளக்கூடாது. இப்போதுள்ள நிலையில் நியாயவிலை கடைகளை எடுக்கக்கூடாது என்ற கருத்து இந்த சட்டமன்றத்தில்தான் தெரிவிக்கப்படுகிறது. இதற்கு வெளியே இந்த கருத்தை நான் கேட்பதில்லை கேட்கவுமில்லை என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். நான் இதற்கு முன்பே தெரிவித்திருக்கிறேன். நியாயவிலை கடைகள் அவசியமில்லையென்றால் அதற்காக நியாயவிலை கடைகள் தொடர்ந்து நடைபெற வேண்டும் என்று கூறுவது சரியல்ல. இந்த ராஜ்யத்திலுள்ள இரண்டு ஜில்லாக்களில், சேலம் ஒன்று, வடார்க்காடு ஒன்று. இந்த இரண்டு ஜில்லாக்களிலும் பெரிய ஜீவநதிகள் பாயவில்லை, மழையும் இரண்டு ஜில்லாக்களிலும் குறைவாகத்தான் இருந்தது. இருந்தாலும் இந்த இரண்டு ஜில்லாக்களிலும் இதுவரையில் நியாயவிலை கடைகள் ஏற்படுத்தவில்லை. அங்கு நியாயவிலை கடைகளை ஏற்படுத்துவதற்கு அங்குள்ள கலெக்டர் அவர்களுக்கு அதிகாரம் இருந்த போதிலும் அதற்கேற்ற பல வசதிகள் செய்து கொடுக்கப்பட்டிருந்தும் நியாயவிலைக் கடைகள் இல்லாமலே இதுவரை நடந்து வந்தது. அதிலிருந்து நியாயவிலை கடைகளுக்கு அவசியம் ஏற்படவில்லை என்பது மாத்திரமல்ல, அவசியமிருக்கிறது என்று தெரிவிக்கப்படவுமில்லை என்பதிலிருந்து அங்கு அவசியமில்லை என்பது நன்கு புலனாகும். அது மட்டுமல்ல, வேண்டுமென்று தெரிவிக்காதது கலெக்டர் அவர்களுடைய தவறு என்று வேண்டுமானால் சொல்லலாம். ஆனால் நான் நேரே போய் பார்த்து விசாரித்து தெரிந்து கொண்டிருக்கிறேன், நியாயவிலை கடை இல்லாததினால் ஏழைகள் பாதிக்கப்பட்டதாக தெரியவில்லை. நியாயவிலை கடைகள் தொடர்ந்து இருக்கின்ற மற்ற ஜில்லாக்களிலும் நான் சுற்றிப்பார்த்து விசாரித்து பார்த்ததில் இந்த இடங்களில் எல்லாம் நியாயவிலை கடைகள் அவசியம் இல்லை என்பதுதான். என் அபிப்பிராயம் மாத்திரமல்ல நேரில் போய் பார்த்தால் அது அவசியமில்லை என்பது புலனாகிறது. நியாயவிலை கடைகள் இல்லாமல் யாரும் பாதிக்கப்படமாட்டார்கள், விலையும் அனேகமாக குறைந்துகொண்டே வருகின்றன. அதனால் நியாயவிலை கடைகள் அவசியமில்லை என்று தான் எனக்கு புலப்பட்டிருக்கின்றது. சென்னை நகரத்தை எடுத்துக்கொண்டால் சென்ற சில மாதங்களாக நியாயவிலை கடைகளுக்கு அளிக்கப்படுகின்ற அரிசி மத்திய அரசாங்கத்தின் ஸ்டாக்கிலிருந்துதான் குறைந்த விலைக்கு அளிக்கப்பட்டு வந்தது. அரிசி குறைந்த விலைக்கு கொடுக்கப்பட்டு வந்தது. சென்னை நகரத்தை பொறுத்த வரையில் சில மாதங்களாக நல்ல உயர்ந்த நைஸான அமெரிக்கன் அரிசியை கொடுத்து வந்தார்கள். அந்த அமெரிக்கன் அரிசிக்கு சாதாரணமாக நியாயவிலை கடைகளில் அதன் விலையில் உத்தேசம் 10 நயா பைசா ஒரு மதராஸ் படிக்கு கூடுதலாக இருந்து வந்தது. அதாவது படி ஒன்றுக்கு 14 அணா ஆகும். இவ்விதம் 14 அணாவுக்கு விற்கப்பட்டு வந்தது. ஆனால் அதே சமயத்தில் சாதாரண கடைகளிலும் 14 அணாவுக்கு சாதாரணமான அரிசி கிடைக்கும். ஆகவே நியாயவிலை கடைகள் இப்போது அவசியமில்லை என்ற கருத்துத்தான் சர்க்காரிடத்தில் இருக்கின்றது. இதை வைத்துக்கொண்டு தான் சர்க்கார் இதை எடுத்துவிடுவது என்று அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. எப்போதும் அரிசி கிடைக்கவில்லையென்றால் அதற்கென்று ஒரு சலுகை கொடுக்க வேண்டியதுதான். ஆனால் இதற்கென்று எப்போதும் கடை வைத்திருக்கவேண்டும், இதற்கென்று நிபந்தனை இருக்கவேண்டும், இதற்கென்று ஒரு நிர்ப்பந்தம் இருக்கவேண்டும் என்று நினைத்தால் அது ஒரு கண்ட்ரோல் முறையை ஏற்படுத்துவது போல்தான் இருக்கும். ஆனால் கண்ட்ரோல் வேண்டாம் என்று எல்லோரும் விரும்புகிறார்கள். ஆனால் அவசியப்படுகிற சமயத்தில் கண்ட்ரோல் முறையையும் கொண்டு வரவேண்டியதுதான். அதற்கு

அரசாங்கம் தயங்காது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனல் இப்போது அவசியமில்லாத ஒரு நிபந்தனை அல்லது நிர்ப்பந்தமான முறையை ஏற்படுத்தினல் இந்த சலுகையை கொண்டுதான் வாழ வேண்டியிருக்கிறது. அது மாத்திரமல்ல எவ்வளவு தான் கஷ்டப்பட்டு உழைத்தாலும் இந்த மாதிரியுள்ள சலுகையை கொண்டுதான் வாழ வேண்டியிருக்கிறது என்ற ஒரு நிலை இருக்க வேண்டும் என்று யாரும் விரும்ப மாட்டார்கள் என்று நான் கருதுகிறேன். ஆகவே நியாயவிலை கடைகளை இப்போது எடுப்பது என்று அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. நாட்டில் இருக்கின்ற நிலவரத்தை உணர்ந்து தான் அரசாங்கம் இந்த முடிவை எடுத்திருக்கின்றது. எந்த சமயத்தில் நியாயவிலை கடைகள் வேண்டும் என்று தோன்றுகிறதோ, எந்த சமயத்தில் விலை அதிகமாக போகிறது, அதன் மூலம் மக்களுக்கு அரிசி சுலபமாக கிடைக்கவில்லை என்ற நிலை ஏற்படுகிறதோ—அந்த நிலை வராது என்று நம்புகிறேன்—அந்த சமயத்தில் அவசியம் ஏற்பட்டால் இந்த மாதிரி நியாயவிலை கடைகளை வைத்துக் கொள்ளுவதற்கு அரசாங்கம் முன்வரும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். முன்பு இருந்த நியாயவிலை கடைகளை படிப் படியாக குறைத்து இப்போது சம்பா அறுவடையான பிறகு எடுத்து விட்டால் பாதகமில்லை என்றுள்ள கருத்தில் தான் எல்லா ஜில்லாக்களி லும் இந்த நியாயவிலை கடைகளை எடுத்துவிடுவது என்று முடிவு செய்தி ருக்கிறது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். ஆனல் போதிய அள வில் அரிசி கிடைப்பதில்லை என்று சில அங்கத்தினர்கள் கருதுவதாக எனக்குப்பட்டது. அவ்வாறு ஒன்றுமில்லை. விலை அதிகமாக இருந்த போதிலும் அரிசி இல்லை என்ற பற்ருக்குறை ஏற்படவில்லை. அரிசி போதிய அளவு கிடைத்துக் கொண்டிருக்கிறது. அரிசியின் விலை அதிக மாக இருந்தது. குறைந்த விலைக்கு வாங்கக் கூடியவர்களுக்கு இந்த நியாயவிலை கடைகளால் நிவாரணம் ஏற்பட்டிருந்தது. ஆனல் இந்த சமயத்தில் அரிசி இல்லை என்ற நிலைமை ஏற்படவில்லை. ஆனல் சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். தமிழ் நாட்டிலிருந்து அரிசி கேரள நாட்டுக்கு சென்று விட்டதே அதை நமக்கு தடுக்க முடியவில்லையே என்றும், அதை தடுக்க அரசாங்கம் தவறிவிட்டது என்றுமுள்ள கருத்தில் சில அங்கத்தினர்கள் தெரிவித்தார்கள். சென்னை ராஜ்யத்திலிருந்து அரிசி கேரள ராஜ்யத்திற்குச் சென்றது உண்மை. அதிகம் சென்றிருக்கிறது. போன வருஷத்தில் சென்றதைக் கணக்குப்போட்டுப் பார்த்தால் 2½ லட்சம் டன் சென்றிருக்கிறது. ஆனல் அதற்கு பதிலாக ஆந்திர ராஜ்யத்தி லிருந்து நமக்கு வந்தது குறைவுதான். வழக்கமாக வருவது கூட
4-10 p.m. வரவில்லை. குறைவாகத்தான் வந்திருக்கிறது. அதோடு இந்த நியாய விலை கடைகளிலெல்லாம் விநியோகிக்கப்பட்டதைப் பார்த்தால் இந்த வருஷத்திற்கு ஒரு லட்சம் டன்தான் ஆகிறது. இந்த லட்சம் டன்னும் மத்திய சர்க்கார் ஸ்டாக்கிலிருந்து விநியோகிக்கப்பட்டிருக்கிறது. இரண் டரை லட்சம் டன் அரிசியைக் கேரள ராஜ்யத்திற்கு அனுப்பியும் பற்ருக் குறை ஏற்படவில்லை. ஆகவே உற்பத்திப் பெருகிக்கொண்டு வருகிறது. எத்தனையோ இடையூறுகள் இருந்தபோதிலும் உற்பத்திப் பெருகிக் கொண்டுதான் வருகிறது. மற்றென்று, இங்கு விளையும் அரிசி ஓரளவு பக்கத்தில் இருக்கும் ராஜ்யங்களுக்கு விற்கப்படுவதால் பாதகமில்லை. அதைத்தான் விவரித்துச் சொன்னேன். என் பாதகமில்லையென்று சொல் கிறேனென்றல், நாம் உற்பத்தி செய்கிற அரிசியை விற்றுத்தான் ஆக வேண்டும். நாம் உண்ணவேண்டியதுதான். ஓரளவு உண்ணலாம். அதற்காக அளவுக்கு மீறி உண்ணக்கூடாது.

SRI A. V. P. ASAITHAMBI : கனம் அமைச்சர் அவர்கள் நிறைய அரிசி இருக்கிறது என்று சொல்கிருர்கள். அப்படியிருந்தும் ரயில்வே ஸ்டேஷன்களில் அளவுச் சாப்பாடு போடுகிருர்களே, அப்படிப் போட வேண்டிய அவசியம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஹோட்டல் பிரச்னை வேறு. ஹோட்டலில் போடக்கூடிய சாப்பாடு போதாது என்று சொன்னல், அதை நான் கவனிக்கிறேன். (ஒரு குரல் : அதை சென்ட்ரல் கவர்ன்மென்ட்

7th March 1958] [Sri M. Bhaktavatsalam]

செய்ய வேண்டிய விஷயம்) ஸெண்ட்ரல் கவர்ன்மெண்ட் இல்லை. நாமே செய்யலாம். (ஒரு குரல் : ரயில்வே ரெஸ்டாரெண்ட்) ரயில்வேயைக்கூட நான் கவனிக்கக்கூடும். சாப்பாடு போதவில்லை என்று புகார் சொன்னால், அதை நான் கவனிக்கிறேன்.

SRI A. V. P. ASAITHAMBI : அளவுச் சாப்பாடு 10 அணு, அதற்கு மேல் வேண்டுமானால் 12 அணு என்று வைத்திருக்கிறார்கள்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விலையைப்பற்றியது வேறு விஷயம். அளவு போதவில்லை. நாங்கள் ரயிலில் போகிறோம். எங்களுக்கு இப்போது கொடுப்பது போதவில்லை என்று சொன்னால், அதை கவனிக்கமுடியும். பொதுவாகச் சொல்ல வேண்டுமானால் வெறும் அரிசியை மட்டும், அரிசி சாதமாக வயிறு புடைக்கச் சாப்பிடுவது நல்லதல்ல. மற்றவைகளையும் சேர்த்துச் சாப்பிட வேண்டும். வெறும் அரிசியை மட்டும் சாப்பிடக்கூடாது. அதுவும் மில் அரிசியைச் சாப்பிடுவதால் பிரயோசனம் இல்லை. (ஒரு குரல் : நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள்) நான் இரவு கோதுமைதான் சாப்பிடுகிறேன். அரிசியோடு கூட காய்கறிகள், கீரைகள், பழங்கள் இவைகளையெல்லாம் சாப்பிடவேண்டும். பழங்கள் என்றால் பணக்காரர்கள்தான் சாப்பிட முடியும் என்ற எண்ணம் கூடாது. நாமே தயாரித்து, நாமே விளைவித்துக்கொள்ள முடியும். உற்பத்தி செய்து கொள்ள முடியும். ஒருவருக்கு அரிசி எவ்வளவு வேண்டுமென்று ஒரு அளவு வைத்திருக்கிறோம். அதாவது ஒரு ஆளுக்கு 16 அவுன்ஸ் அரிசி தேவை என்று கணக்கிட்டிருக்கிறோம். அதற்கு வேண்டிய அளவு உற்பத்தி செய்வதில் கவனம் செலுத்தி வருகிறோம். அப்படி 16 அவுன்ஸ் என்றால், ஆண்களுக்கும் 16 அவுன்ஸ், பெண்களுக்கும் 16 அவுன்ஸ், பெண்கள் அதிகம் சாப்பிடுகிறார்களோ என்னவோ எனக்குத் தெரியாது, அவர்களைத்தான் கேட்கவேண்டும். குழந்தைகளுக்கும் 16 அவுன்ஸ் என்று சராசரி 16 அவுன்ஸ் என்று வைத்திருக்கிறோம். குழந்தைகள் குறைவாகத்தான் சாப்பிடுவார்கள். அப்படி 16 அவுன்ஸ் வீதம் வேண்டிய அளவு உணவு உற்பத்தி செய்வதில் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. உணவுக்காகப் பிறர் யாரையும் எதிர்பார்க்கக்கூடாது, அமெரிக்க அரிசியை எதிர்பார்க்கக்கூடாது, கவலை இல்லாமல் நமக்கு வேண்டிய உணவுப் பொருள்களை நாமே உற்பத்தி செய்து கொள்ள வேண்டும். வேறு நாட்டிலிருந்து அரிசி வருமா, வராதா என்ற கவலை இருக்கக்கூடாது. அது மட்டுமல்ல. நான் முன்பே சொன்னேன். வெறும் அரிசியோடு கூட ஓரளவு கோதுமையையும் சேர்த்துக் கொள்வது நலமென்று சொன்னேன். அப்படிச் சேர்த்துக் கொண்டால் நல்லது என்று சொன்னேன். கோதுமை சத்துள்ளது. சில அங்கத்தினர்கள் தவறான கருத்துக்கொண்டிருக்கலாம், அதாவது கோதுமை வடநாட்டிலிருந்து வருகிறதே என்று. வட நாட்டிலும் பற்றாக்குறை இருக்கிறது. கோதுமை சென்னையில் சுலபமாகக் கிடைக்கிறது. அதோடு இறக்குமதி செய்வது கூட சுலபமாக இருக்கின்றது. விலையும் குறைவு. கோதுமையை விட அரிசியின் விலை 2 அணு கூடுதலாக இருக்கிறது. நான் சமீபத்தில் ஒரு சிறைக்குச் சென்று பார்த்தபோது அங்குள்ள சில அரசியல் கைதிகள் சொன்னார்கள். சிறைகளில் பாதி அரிசியும் பாதி கேழ்வரகும் உணவாகக் கொடுக்கப்படுகிறது. கேழ்வரகு நல்லது என்று கொடுக்கப்படுகிறது. அந்த அரசியல் கைதிகள் சொன்னார்கள் "கேழ்வரகு கொடுக்கிறார்களே, அது இங்கு இருப்பவர்களுக்குப் பிடிக்கவில்லை" என்று. கேழ்வரகு நல்லதுதானே என்று நான் சொன்னேன். அவர்கள் கேழ்வரகு பிடிக்கவில்லை, கோதுமை கொடுங்கள் ஆட்சேபணையில்லை என்று சொன்னார்கள். ஆகவே சிறையில் கூட அரசியல் கைதிகளுக்கும் மற்றவர்களுக்கும் கேழ்வரகு, சோளம் வேண்டாமென்றால் கோதுமை கொடுங்கள் என்று உத்திரவு போட்டிருக்கிறோம். அரிசியை உற்பத்தி செய்கிறோம். நான் இப்போது சொல்ல வந்தது விவசாயம் கட்டுபடியாக வேண்டுமானால், உற்பத்திப் பெருக வேண்டும். உற்பத்தி பெருகினால் அந்த பொருள்களை விற்கவேண்டும். விற்பதற்கு மறுப்பதென்றால், தமிழ் நாட்டு அரிசி தமிழ் நாட்டிலேயே இருக்கவேண்டும். இங்கிருந்து வெளியேயும் போகக்கூடாது, வெளியி

[Sri M. Bhaktavatsalam] [7th March 1958

லிருந்தும் இங்கே வரக்கூடாது என்று சொல்லி விட்டால்—சென்னை அங்கத்தினர்களுக்குத் தெரியும் இங்கே எந்த அரிசி சாப்பிடுகிறார்கள் என்று. நான் சொல்வதைத் தவறாக எடுத்துக் கொள்ளக்கூடாது. சென்னையில் உள்ளவர்களுக்கு நெல்லூர் அரிசிப் பழக்கம். நெல்லூர் அரிசி எங்கிருந்து வருகிறது, அது ஆந்திர நாட்டிலிருந்து வரவேண்டும், இங்கிருந்தும் போகவேண்டாம், அங்கிருந்தும் வரவேண்டாமென்றால் சௌகரியப்படாது. என்னிடம் தஞ்சை ஜில்லா உற்பத்தியாளர்கள் கவலை தெரிவித்தார்கள். இம்மாதிரி தஞ்சை ஜில்லாவிலிருந்து கேரள நாட்டிற்கு அனுப்பக்கூடாது என்று போட்டு விட்டீர்களே—நான் சொல்வதைத் தவறாக எடுத்துக் கொள்ளக்கூடாது—எங்கள் குறுவை அரிசியை வேறு யாரும் சாப்பிடமாட்டார்களே, கேரள நாட்டில்தானே சாப்பிடுவார்கள், அப்படியானால் எங்கள் குறுவையை என்ன செய்வது, குறுவையை விட்டு விட்டு வேறு ஏதாவதுதான் பயிரிடவேண்டுமென்று சொன்னார்கள். நான் குறிப்பிடுவதெல்லாம் கூடியவரையில் கட்டுப்பாடு இல்லாமல் போகட்டும், வரட்டும். பிரமாதமான அளவுக்கு வியாபாரிகள் ஸ்பெகுலேட் செய்து வெளி நாட்டுக்கு எடுத்துப் போய் அதனால் பற்றாக்குறையோ, விலை உயர்வோ ஏற்படுமானால் அரசாங்கம் நடவடிக்கை எடுக்கத் தவறாது. இவ்வாறு கேரள ராஜ்ய வியாபாரிகள் ஸ்பெகுலேட் செய்து தஞ்சையிலிருந்து வாங்கி ட்ரான்ஸ்போர்ட் செய்வதோடு கேரள அரசாங்கமே ஒரு அதிகாரியைப் போட்டு வாங்க முற்பட்டார்கள். வியாபாரிகள் வாங்குவதை நிறுத்தி விட்டு வாங்கட்டும். ஒன்றரை லட்சம் டன் எடுத்துப் போங்கள், நாங்கள் தயார் என்று சொன்னேன். ஸ்பெகுலேட் செய்து வியாபாரிகள் வாங்குவதும், கேரள அரசாங்கம் ஒரு அதிகாரியைப் போட்டு வாங்குவதும் சரியல்ல என்று மத்திய சர்க்கார் மூலமாக கேரள சர்க்காருக்கு எடுத்துச் சொல்லி அதை இப்போது நிறுத்திவிட்டார்கள். மொத்தத்தில் நம் உற்பத்தி பெருகி வருகிறது. 1956–57-ல் 2 லட்சத்து 3 ஆயிரம் டன் வரையில் உற்பத்தி அதிகப்பட்டிருக்கிறது. இந்த 1957–58-ம் ஆண்டுக்கு 3 லட்சத்து 65 ஆயிரம் டன் அதிகம் உற்பத்தி ஆகியிருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 7 லட்சத்து 11 ஆயிரம் டன் இன்னும் உற்பத்தியாகுமென்று எதிர்பார்க்கிறோம். மொத்தத்தில் 12 லட்சத்து 82 ஆயிரம் டன் பெருக்குவது என்று போட்டிருக்கிறோம். இப்போது 5 லட்சத்து 68 ஆயிரம் டன் வரையில் உற்பத்தி இந்த ஆண்டிலே பெருகும் என்று எதிர்பார்க்கிறோம். மழை சில இடங்களில் இந்த ஆண்டு குறைவு. வட ஆற்காடு, செங்கல்பட்டு ஜில்லாக்களில் மழை குறைவு. தஞ்சையில் மழை அதிகமாகப் பெய்து பயிர்கள் பாதிக்கப்பட்டது. இம்மாதிரி எதிர்பார்த்த அளவு பெருகாமல் இருக்கலாம். திட்டப்படி உற்பத்தி பெருகும் என்று எதிர்பார்க்கிறோம். இந்தப் புள்ளி விவரங்களையெல்லாம் எங்கிருந்து சேகரித்தீர்கள், அதெல்லாம் தப்பு, அதில் நம்பிக்கையில்லை என்று சொல்லலாம். அப்படிச் சொன்னால் அதை மறுக்க முடியாது. நாங்கள் சொல்வது சரி, நம்புங்கள் என்று சொல்ல முடியாது. ஆனால் ஒன்று குறிப்பிடுகிறேன். இரண்டரை லட்சம் டன் கேரளாவிற்குப் போயிருக்கிறது. ஆந்திராவிலிருந்து அதிகம் வரவில்லை. கன்னியாகுமரியிலிருந்து கேரளாவிற்கு 18,000 டன் போயிருக்கிறது. கனம் அங்கத்தினர் அவர்கள் பெருமைப்பட்டுக் கொள்வார்கள். ஏனென்றால் எப்போதும் கேரளா, கேரளா என்று பேசுபவர்கள் அவர்கள். பதினெட்டாயிரம் டன் போயிருக்கிறது. அங்கு நன்றாக விளைந்திருக்கிறது. இப்படியிருந்தும் இங்கு ஒன்றும் குறைவில்லை. கன்னியாகுமரியில் குறைவில்லை, திருநெல்வேலியில் குறைவில்லை, தமிழ் நாட்டில் குறைவில்லை. இப்படி அரிசி அதிகம் போயும் பற்றாக்குறை ஏற்படவில்லை என்றால், அது உற்பத்திப் பெருகி வருகிறது என்பதைத்தான் எடுத்துக் காட்டுகிறது. இப்பொழுது விலைவாசியைப் பற்றிச் சொன்னார்கள்.
4–20 p.m. இன்னொரு விஷயத்தைப்பற்றியும் கனம் அங்கத்தினர் கரையாளர் அவர்கள் பொதுவாகச் சொன்னார்கள். அதாவது உணவுதான்ய விசாரணைக் கமிட்டி சில இடங்களிலே பதுக்கல் இருப்பதாகச் சொல்லியிருக்கிறது என்று சொன்னார்கள். நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்தமட்டில், பதுக்கல் அதிகமாக இல்லை. பொதுவாகச் சில இடங்களில் இருக்கலாம்.

7th March 1958] [Sri M. Bhaktavatsalam]

அவர்கள் எல்லா ராஜ்யங்களையும் பார்வையிட்டுச் சொன்னது. இந்த ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் அப்படி ஒன்றும் பதுக்கல் இல்லை விலைவாசி உயர்ந்துகொண்டே போகிறது என்று சொன்னார்கள். இப்பொழுது கொஞ்சம் விலைச்சரிவு ஏற்பட்டிருக்கிறது. விலை குறைந்துகொண்டு வருகிறது. இது சமீபத்திலே எங்களுக்கு வந்த ரிப்போர்ட்டின்படி. இதற்கென்று நிபுணர்கள், நிர்வாகிகள், மற்றவர்கள் கொண்ட ஒரு சிறிய கமிட்டி இருக்கிறது. இந்த விலைவாசி எப்படியிருக்கிறது என்பதைப்பற்றி வராவாரம் நாங்கள் கவனித்துக்கொண்டுதான் வருகிறோம். புள்ளி விவரங்கள் தரப்படுகின்றன. இரண்டு, மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் அந்த முறை தொடங்கப்பட்டது. அப்பொழுது விலை குறைந்து போயிற்று. இந்த மன்றத்திலேகூட அதைப்பற்றி எதிர்க் கட்சியிலுள்ள பல அங்கத்தினர்கள் கவலை தெரிவித்தார்கள். அப்போதிருந்தே இந்தக் கமிட்டி கவனம் செலுத்திக்கொண்டுதான் வருகிறது. முன்பு அறிவிக்கப்பட்ட புள்ளிவிவரங்களிலிருந்து 4 பாயிண்டு சரிவு ஏற்பட்டிருக்கிறதென்று நேற்றைய அறிக்கையில் எங்களுக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. விலை அதிகமாக இருந்தது. இப்பொழுது கொஞ்சம் குறைந்து கொண்டு வருகிறது. போதிய அளவு விலை குறைந்துவிட்டதாகக் கூறவில்லை. நாங்கள் அதைப் பற்றித் திருப்திபடவில்லை. இன்னும் விலை குறைய வேண்டும் என்பது தான் எங்களுடைய முயற்சி.

ஆனால் இங்கே பேசிய கனம் அங்கத்தினர் ஸ்ரீ பழனிசாமி அவர்கள் ஒரு தொடர்ந்த வாக்கியத்திலே, விலை அதிகமாக இருக்கிறது, அரிசி எங்கேயோ போகிறது என்று சொன்னார்கள். அதே சமயத்தில் விலை குறைகிறது, விலைக் குறைவைத்தடுக்க முயற்சி எடுக்கவேண்டுமென்றும் சொன்னார்கள். அளவுக்கு மேல் விலை குறைந்தால் விவசாயிகளுக்குக் கட்டாது. இது அரசாங்கத்தின் கவனத்தில் இருக்கிறது. எப்பொழுது அந்த நிலைமை ஏற்படுகிறதோ, அப்பொழுது அரசாங்கமே வேண்டுமானால் அரிசியை நியாயமான விலைக்கு வாங்கி, விலைச் சரிவை ஒட்டி விவசாயிகள் பாதிக்கப்படுவதைத் தடுக்கும். அந்த நிலைமை இப்பொழுது ஏற்படவில்லை. விலை அதிகமாக ஏறுவதும், அதிகமாகக் கீழே போவதும் எப்படி ஒரே சமயத்தில் நடக்கமுடியும் ? விலை உயர்வை எப்படித் தடுப்பது, குறைந்தால் எவ்வளவு குறைந்து வருகிறது, எவ்வளவு குறையவேண்டும் என்பதில் கவனம் செலுத்தி வருகிறோம். இரண்டையும் சேர்த்துச் சொல்வதில் பயன் இல்லை.

கும்பகோணத்தில் இரண்டாவது ஸார்ட் அரிசி விலையைப் பற்றிச் சில புள்ளி விவரங்கள் தருகிறேன். **1952**-ல் விலை கண்ட்ரோல் இருந்தது. அப்பொழுது விலை ரூ. **13·85**. பிறகு விலை கண்ட்ரோல் போய்விட்டது. **1953**-ல் ரூ. **22**-லிருந்து **24·50** வரையில் விலை இருந்தது. **1954**-லிலே ரூ. **16**-லிருந்து **20·5** வரையில் விலை இருந்தது. **1955**-லே ரூ. **13·75** லிருந்து **17·75** வரை விலையிருந்தது. அப்பொழுதுதான் விலை கொஞ்சம் குறைந்தது. அப்பொழுது கவலை ஏற்பட்டது. ஏற்றுமதி செய்வதற்குக்கூட ஏற்பாடு செய்தோம். விலை குறைந்துகொண்டே போகிறதே என்று கவலைப்பட்டார்கள். **1956**-ல் ரூ. **14·69**-லிருந்து **20·83** வரை உயர்ந்திருக்கிறது. இதெல்லாம் சராசரி ஒரு மணங்கின் விலை. **1957**-ல் **17·50** முதல் **19·83** வரையிருந்தது. **1958**-ல் ஜனவரி பிப்ரவரியில் **17·19**-லிருந்து **18·75** வரையில் இருந்தது. **1953**-லிருந்து சராசரி விலையைக் கணக்கிட்டுப் பார்த்தால் ரூ. **18·42** ஆகிறது. இந்த விலை இன்னும் குறையவேண்டும். விலை ஏறிக்கொண்டு போகிறது என்று சொல்லுவதற்கு இடமில்லை. விலை குறைந்துகொண்டுதான் வருகிறது. ஓரளவுக்குக் கீழே குறைந்தால் விவசாயிகள் பாதுகாக்கப்படவேண்டும். இப்பொழுதே உற்பத்தி செய்கிறவர்கள் கவலைப்படுகிறார்கள். இன்றைய நிலையிலே சென்னையிலே இருக்கிற விலைவாசியை எடுத்துக் கொள்வோம். மற்ற ராஜ்யங்களின் விலைவாசியையும் எடுத்துக்கொள்வோம். அதைப்பற்றித்தான் அதிகமாக அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். இன்றைய நிலையிலே நம் ராஜ்யத்தில் கும்பகோணம் விலையை எடுத்துக் கொண்டால், மணங்கு ரூ. **18·29** விலை ஆகிறது. பீகாரில் இன்றைய விலை ரூ. **22·25**. பம்பாயில் ரூ. **22**.

[Sri M. Bhaktavatsalam] [7th March 1958

கேரளத்திலே விலை ரூ. 19. உத்திரப் பிரதேசத்தில் ரூ. 20. மேற்கு வங்காளத்தில் ரூ. 24. கனம் அங்கத்தினர் கரையாளர் அவர்கள், பொதுவான நிலைமையை ஒட்டி விலை ஏறிக்கொண்டு அதிகமாக இருக்கிறது என்று சொல்லுவது அவ்வளவு சரியல்ல. இந்த மாதிரி மற்ற இடங்களில் இருப்பதைப் பார்த்தால் இங்கே விலை கவலை கொடுக்கக் கூடிய அளவில் இல்லை. இருந்தாலும் விலை குறையவேண்டுமென்பதை ஒப்புக் கொள்கிறேன். விலையைக் குறைப்பது எவ்வாறு ? மற்ற முயற்சிகளோடு, உற்பத்தியைப் பெருக்குவதுதான் முக்கியமாக விலையைக் குறைக்கக் கூடியது. பெரிய விவசாயிகள், சிறிய விவசாயிகள் எல்லோருக்கும் கவலை பல விதத்தில் ஏற்படுகிறது. நேரடியாகவும் மறைமுகமாகவும் தெரிவிக்கிறார்கள். எந்தவிதமான பாதகம் ஏற்படுமோ, என்ன வரிகொடுக்கவேண்டியிருக்குமோ, குத்தகையில் எவ்வளவு பங்கு கொடுக்க வேண்டியிருக்குமோ என்றெல்லாம் கவலைப்படுகிறார்கள். நிரந்தரமான பரிகாரம் எது ஏற்பட்டாலும், ஒரு நிவாரணத்தை அளிக்கக்கூடிய பரிகாரம் உற்பத்தியை பெருக்குவதுதான். உற்பத்தியைப் பெருக்கினால் இதை சமாளிக்கலாம். ஆகவே அரசாங்கம் விவசாய நிலைமையிலே கவனம் செலுத்தி உற்பத்தியைப் பெருக்கி வருகிறது. உற்பத்தி செய்கிறவர்கள் நிலத்தின் சொந்தக்காரர்களாய் இருந்தாலும் சரி, குத்தகைகாரர்களாயிருந்தாலும் சரி, பயிரிடுகிறவர்கள் உற்பத்திப் பெருக்கத்தினால்தான் பலன் அடைகிறார்கள். எங்களுக்கு என்ன சலுகைகள் கொடுக்கிறார்கள் என்று எதிர்ப்பது அவ்வளவு சரியல்ல.

கனம் அங்கத்தினர் ஸ்ரீமதி அனந்தநாயகி அவர்கள் பேசினார்கள். கொஞ்ச காலமாக அவர்கள் இந்த நில விஷயத்தில் எல்லாம் அக்கரை எடுத்துக்கொண்டு, அதைப் பரிசீலனை செய்து பேசுவதைப் பாராட்டுகிறேன். விவசாயம் பெருகவேண்டுமானால் பெண்கள் அதிகமாக அக்கரை எடுத்துக் கொள்ளவேண்டும். நம் நாட்டிலே பெண்கள் முதன்மையிலே நின்று சிறந்த வகையிலே விவசாயம் செய்கின்ற பண்பு உண்டு. கனம் அங்கத்தினர் சென்னை நகரைச் சேர்ந்தவராய் இருந்தாலும், கொஞ்சகாலமாக வெளியூர்களிலே குடிபுகுந்து இன்று விவசாயத்திலே அக்கரை கொண்டு இருப்பதையும், மகிழ்ச்சியுடன் அவர்கள் பேசியதையும் கேட்டேன். ஜப்பானிய முறைப்படி சாகுபடி செய்வதற்கு உதவி அளிக்கவேண்டுமென்று சொன்னார்கள். உதவி அளிக்கவேண்டுமென்று சொன்னால், என்ன உதவி அளிப்பது ? விவசாய இலாகாவினர் விவசாயிகளுக்கு வழி சொல்லுகிறார்கள். உற்பத்திப்பெருக்கினால் பலன் அடைகிறவர்கள் உற்பத்தி செய்கிறவர்கள். உள்ளூர் உரம், ரசாயன உரம், பசுந்தழை உரம், குப்பை உரம் எல்லாம் விவசாயிகளுக்குக் கிடைப்பதற்கு ஓரளவு வசதி அளிக்கிறோம், சலுகை அளிக்கிறோம், உதவி அளிக்கிறோம்.

இன்னும் பல அங்கத்தினர்கள் நீர்ப்பாசனத் திட்டங்களைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். குறிப்பாக, கனம் அங்கத்தினர் வேதரத்னம் பிள்ளை அவர்கள், தஞ்சை ஜில்லாவில் ஏராளமாக நிலம் இருக்கிறது, அந்த நிலத்திற்கு தண்ணீர்ப் பாசனம் இருந்தால் இன்னும் அதிகமாக விவசாயம் செய்யலாம் என்று சொன்னார்கள். கவனம் செலுத்தப்பட்டுத் தான் வருகிறது. சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றுவதில் அதிகமாக கவனம் செலுத்தவேண்டியதே. வருகிற ஆண்டிலே அதற்காக ரூ. 80 லட்சம். எவ்வளவு அதிகமாக ஒதுக்கமுடியுமோ, அவ்வளவு கிடைக்கும். இதுவரையிலும் எவ்வளவு அளிக்கப்பட்டிருக்கிறதோ அதற்கு மேலும், பிளானிங் கமிஷன் அளித்ததற்கு மேலும் சிறிய பாசனத் 4–30 p.m. திட்டங்களுக்காக பணம் அளிக்கிறோம். இப்பொழுது பற்றுக்குறை, உணவு பற்றுக்குறை அல்ல. எஞ்சினியர்கள் பற்றுக்குறைதான். பல எஞ்சினியர்களின் மூலமாக சிறிய நீர்ப்பாசன திட்டங்களை நிறைவேற்றி வைக்கப் பார்க்கிறோம்.

சில அங்கத்தினர்கள் பொதுவாக தங்களுடைய தொகுதியில் நிலம் தரிசாக கிடப்பதாகவும், தண்ணீர் வசதி செய்து கொடுத்தால், அந்த நிலங்களை சாகுபடிக்கு கொண்டு வந்து உணவு உற்பத்தியைப் பெருக்கலாம் என்றும் சொன்னார்கள். சிறிய நீர்ப்பாசன திட்டங்களில் நாம்

7th March 1958] [Sri M. Bhaktavatsalam]

மிகுந்த கவனம் செலுத்திக்கொண்டு வருகிறோம். ஜமீன் பிரதேசத்தில் முன்பு கவனிக்காமல் இருந்து வந்த கண்மாய், ஏரிகள், குளங்கள் எல்லாம் இப்பொழுது பழுது பார்க்கப்பட்டு சரி செய்யப்பட்டு வருகின்றன. ஸ்ரீ வேதரத்னம் பிள்ளை சில நீர்ப்பாசன திட்டங்களைப்பற்றிச் சொன்னார். இப்பொழுது 3 திட்டங்கள் உருவாக்கப்பட்டு சீக்கிரமே அவைகள் ஸாங்ஷன் செய்யக்கூடிய நிலையில் இருக்கின்றன.

1. வளவனூர் திட்டம்.—இதனால் 650 ஏகராவிற்கு நீர்பாசனம் கிடைக்கும். புது வகையில் நீர்ப்பாசனம் ஏற்படுத்தப்படும். இவ்விடத்தில் நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் வழங்கப்படும்.

2. கண்டபரிசனூர் வடிகால் திட்டம்.—இதனால் 2,372 ஏகரா நிலம் பிரயோசனப்படும்.

3. தென்னடார் திட்டம்.—இத்திட்டத்தினால் 1,040 ஏகராவுக்கு பாசனம் கிடைக்கும். இம்மூன்று திட்டங்களும், பரிசீலனை செய்யப்பட்டு சீக்கிரமே நிறைவேற்றப்படும்.

கன்னியாகுமரி ஜில்லாவைப்பற்றி சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். சில நாட்களுக்கு முன் நான் கன்னியாகுமரி ஜில்லாவிற்கு சென்றிருந்தேன். முன்பு புகார் சொன்னவர்கள் கூட இப்பொழுது விவசாய அபிவிருத்தியைப் பொறுத்தவரை திருப்தி தெரிவித்தார்கள். முன்பு திருவாங்கூர் ராஜ்யத்தில் இருந்தபொழுது ஏற்பட்ட அபிவிருத்தியை விட தற்பொழுது அதிக அபிவிருத்தி ஏற்பட்டதாக அங்குள்ள மக்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். இன்னும் பல சிறிய நீர்ப்பாசன திட்டங்கள் ஏற்பட்டால் கனம் அங்கத்தினர்கள் கூட மகிழ்ச்சி அடைவார்கள் என்பதில் ஐயமில்லை. அந்த வகையிலே நாம் இப்பொழுது தீவிரமாக கவனம் செலுத்திக்கொண்டு வருகிறோம். இந்த விவசாய அபிவிருத்தியைப் பொருத்தமட்டில் மக்கள் வேண்டிய ஒத்துழைப்பை தயங்காமல் அளித்து வருகிறார்கள். அதே ஒத்துழைப்பும், அக்கரையும், விழிப்பும் கனம் அங்கத்தினர்கள் காட்டுவார்கள் என்று நான் நம்புகிறேன்.

**Sri N. K. PALANISAMI :** ஆன் எ பாயின்ட் ஆப் எக்ஸ்பிளனேஷன். கனம் மந்திரி அவர்கள் மொத்தக் குறியீட்டில் 4 புள்ளிகள் குறைந்திருப்பதாகச் சொன்னார்கள். 1956-ம் வருஷத்தில் அறுவடையானபோது விலைவாசிகள் குறைந்ததா என்பதைப் பார்க்கவேண்டும். விலைவாசிகளை கட்டுப்படுத்த சர்க்கார் குறைந்த பட்ச விலை அதிக பட்ச விலை என்று சொல்லுகிறார்கள். இதற்காகத்தான் 10 ஏக்கர் நஞ்சை 25 ஏகர் புஞ்சைக்கு மேல் இருக்கக்கூடாது என்று சொல்கிறார்கள். உணவுப் பொருளை புரொக்யூர் செய்து வெளி இடங்களுக்கு அனுப்பியதால் விலைவாசி உயர்வு ஏற்பட்டது என்று நான் சொல்லவில்லை.

***Sri S. PAKKIRISAMI PILLAI :** கனம் சபாநாயகர் அவர்களே, வரவு செலவு திட்ட அறிக்கையை கனம் நிதி மந்திரி அவர்கள் சிறந்த செந்தமிழில், எல்லோருக்கும் புரியும்படியாக அதை ஆக்கி, இயற்றிய பிரசங்கம் எல்லோரும் மகிழ்ச்சி அடையும்படியான நிலையிலேயே இருந்தது. ஆங்கில மொழியைத் தவிர்த்து தமிழ் மொழியை எல்லா இடங்களிலேயும் உபயோகிக்கும்படியான ஒரு வாய்ப்பு செய்ததற்கு, அந்த மாதிரியான பணியிலே ஈடுபட்டுள்ளவர்களுக்கு நம்முடைய பாராட்டுதல்களைத் தெரிவிக்க கடமைப்பட்டிருக்கிறோம். (இப்பொழுது உதவி சபாநாயகர் தலைமை வகித்தார்). இம்மாதிரி தமிழ் மொழி துரிதமாக பரவுவதற்கு, எல்லா அரசாங்க அலுவல்களும் தமிழிலேயே நடப்பதற்கு என்ன வழி இருக்கிறது. அது சீக்கிரம் பரவுவதற்கு ஆக்கினை மட்டும் போட்டால் போதுமா அல்லது பயமுறுத்தல் மூலமாகவோ முடியுமா என்பதை எல்லாம் பரிசிலிக்க வேண்டும். உடனடியாக இதில் ஆர்வம் கொள்ள சர்க்கார் சிப்பந்திகளிடையே ஊக்கம் பிறக்கும்படியான அளவுக்கு நாம் முதலில் ஏற்பாடு செய்யவேண்டும். அதற்கு சம்பளத்தைக் கூட்டிக் கொடுத்தால் அம்மாதிரியான ஒரு உணர்ச்சி ஏற்படும். இம்மாதிரிதான் ஆங்கில ஆட்சியிலும்

கூட கூடுதலான சம்பளத்தைக் கொடுத்து ஊக்கத்தை உண்டு பண்ணினர்கள். அம்மாதிரி செய்தால் அலுவலகங்களில் வேலை செய்பவர்களும் தயாராக இருப்பார்கள் என்று நான் நினைக்கிறேன். இப்பொழுது கூட நமக்குத் தெரியும். ஷார்ட்ஹாண்ட் அலவன்ஸ் கொடுக்கப்படுகிறது. அதற்காக தற்பொழுது 25 ரூபாய் கொடுக்கப்படுகிறது. அதே தொகையோ அல்லது அதற்கு மேற்பட்டோ நாம் கொடுத்தோமானுல் தமிழ் ஊக்கம் பரவுவதற்கும், சுறுசுறுப்பாக நமது சிப்பந்திகள் இதில் அக்கரை காட்டுவதற்கும் வழி ஏற்படும். ஆகையால் இதை அரசாங்கம் மேற்கொண்டு பரிசீலித்து நடத்த வேண்டும் என்று சம்மந்தப்பட்டவர்களை நான் கேட்டுக்கொள்கிறேன். வரிச்சுமை ஏற்கனவே பொறுக்க முடியாத அளவுக்கு எல்லா ஏழைகள் மேல் இருந்து கொண்டிருக்கிறது என்பது நமக்குத் தெரியும். எந்த வரி போட்டாலும் கடைசியில் ஏழைகள் தலை மேல் தான் அந்த வரியைத் தாங்கும்படியான நிலை இருக்கிறது. பணக்காரர்கள் எப்படியாவது அவர்களுடைய வருவாயைகுறைத்துக்கொள்ளாமல் பார்த்துக்கொண்டு விடுகிறார்கள். ஏழைகள்தான் பலவிதமான கஷ்டங்களுக்கும் உள்ளாகிறார்கள். ஆகையால்தான் முதலாளித்துவ சமுதாயத்திற்கான ஆட்சி என்று சொல்லத் தோன்றுகிறது.

இப்பொழுது தமாஷா வரி போடப்பட்டிருக்கிறது. சினிமாவுக்கு ஏழைகள்தான் அதிகமாகப் போகிறார்கள் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. இந்த தமாஷா வரியை முதலிலேயே போட்டிருந்தால் அதைப்பற்றி யாரும் அக்கறை எடுத்துக் கொண்டிருக்கமாட்டார்கள். ஏழைகள் இப்பொழுதுதான் கொஞ்சம் முன்னேறியிருக்கிறார்கள். கொஞ்சம் கொஞ்சமாக நாகரீகம் வளர வளர, சினிமாவுக்குப் போக ஆரம்பித்திருக்கிறார்கள். இந்த ஏழை மக்களிடத்திலிருந்து பணம் வசூல் செய்யலாம் என்ற எண்ணத்தினாலேயே இப்பொழுது இந்த சினிமா வரி போடப்பட்டிருக்கிறது. பணம் பெறுவதற்கு என்ற குறிக்கோளே தவிர, ஏழைகளின் கஷ்டத்தைப் போக்குவதற்கு எந்த விதமான திட்டத்தையும் காணோம்.

இதே மாதிரிதான் இப்பொழுது விவசாய வருமான வரி போட்டிருக்கிறார்கள். மூவாயிரம் ரூபாய்க்கு மேல் விவசாய வருமான வரி போட வேண்டும் என்று அதற்காக பிரசாரமும் செய்து கொண்டிருக்கிறார்கள். அதே சமயத்தில் ஏழை விவசாயிகளின் கஷ்டங்களைக் குறைப்பதற்கு எந்தவிதமான திட்டமும் கொண்டுவரப்படவில்லை.

4-40 p.m.

சாதாரணமாக எல்லோருக்கும் தெரியும், அரசாங்கம் புள்ளிக்கணக்கு எடுத்திருக்கிறார்கள், $6\frac{1}{4}$ ஏக்கருக்குக் குறைவாக வைத்திருக்கிற விவசாயிகள் தங்களுடைய வாழ்க்கையை சரிக்கட்டுவதற்கு முடியாமல் இருக்கிறார்கள். அவர்களுக்குக் கிடைக்கக்கூடிய வருமானம் போதாமல் இருக்கிறது. அவர்கள் இப்பொழுது கொடுத்து வரக்கூடிய வரிக்கு மேல் அவர்களால் கொடுக்க முடியாது. ஆகவே $6\frac{1}{4}$ ஏக்கர் வரையில் நிலம் வைத்திருக்கக்கூடிய எந்த விவசாயிக்கும் எந்த விதத்திலும் வரி இருக்கக் கூடாது, அவர்களுக்கு எந்தவிதமான வரியிலிருந்தும் விலக்கு கொடுக்க வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறார்கள். அம்மாதிரியான ஓர் திட்டத்தை இந்த அரசாங்கம் ஏன் கொண்டுவரவில்லை என்பது என்னுடைய கேள்வி. ஆகவே விவசாயிகளுக்கு வருமான வரி போடும்போது அதே சமயத்தில் சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கு வரி விதி விலக்கு கொடுக்க ஏற்பாடு செய்திருந்தால் உண்மையிலேயே ஒரு பெரிய சமுதாய பொருளாதார சீர்திருத்தம் செய்ததாக இருந்திருக்கும்.

நாட்டில் இருக்கக்கூடிய மக்களுக்கும் நகரத்தில் இருக்கக்கூடிய மக்களுக்கும் பெருத்த வித்தியாசம் இருக்கிறது. அந்த வித்தியாசம் வருமான வித்தியாசமாக இருக்குமேயானுல் அதைப் போக்கவேண்டும். அதற்கு கிராமங்களில் இருக்கும்படியான, கிராமங்களில் விளையும்படியான, கிராமங்களில் உற்பத்தியாகும்படியான, அந்த விளை பொருள்களையோ அல்லது சாமான்களையோ அவைகளின் கொள்முதல் தரத்தை உயர்த்தி விலையை அதிகமாக்கப்பட வேண்டும். கிராமங்களில் உற்பத்தியாகும் பொருள்களை நடுவே இருக்கக்கூடிய கிராமங்களில் தரகர்கள் ஏமாற்றி

சுரண்டி வாங்கிக் கொண்டு வந்து நகரங்களில் அதிகப்படியான விலைக்கு விற்று கொழுத்த லாபமடைந்து வருகிறார்கள். அந்த மாதிரியான நிலைமையைத் தவிர்க்க வேண்டும். கிராமங்களில் அதிகப்படியான விலைக்கு வாங்கி நகரங்களில் எவ்வளவு விலைக்கு விற்கப்படுகிறதோ அந்த விலைக்கு கொஞ்சம் போக்குவரத்துச் செலவுக்கான செலவை மாத்திரம் குறைத்துக்கொண்டு இங்கு குறைவான விலைக்கு விற்றுவந்தால் கிராமத்தில் உற்பத்தி செய்யக் கூடியவர்களுக்கு வருமானம் அதிகமாக கிடைப்பதோடு நகரங்களில் வாழக் கூடிய மக்களுக்கும் குறைவான விலைக்குக் கிடைக்கும். அப்படி குறைவான விலைக்கு இங்கே விற்பதற்கு ஏற்பாடு செய்தால் கிராமங்களிலுள்ளவர்களுடைய நிலையை மேலே தூக்கி வைப்பதற்கும், அவர்களுடைய வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கும் ஒரு வழி செய்வதாக ஆகும். இம்மாதிரியான ஒரு கட்டுப்பாடான திட்டத்தை ஏற்படுத்தினால்தான் கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் உள்ள வித்தியாசத்தைப் போக்குவதற்கு இடம் ஏற்படும். அதைப் போக்காவிட்டால் இந்த வேலையில்லா திண்டாட்டம் பெருகிக்கொண்டுதானிருக்கும். அதனால்தான் கிராமத்திலுள்ள மக்கள் நகரங்களுக்கு வந்து பல வேலைகளில் ஈடுபட்டு வருகிறார்கள். அதன் மூலம் பல கஷ்டங்களுக்கு உள்ளாகிறார்கள். அப்படி பல கஷ்டங்களுக்கு மத்தியில் பாடுபட்டு சம்பாதிக்கும்படியான நிலைமையில் கிராம ஏழைகள் இருப்பதை நாம் பார்க்கிறோம். அதனால் கிராமங்களிலுள்ள மக்களின் வாழ்க்கைத்தரம் உயருவதற்கு வழிவகை செய்தாக வேண்டும். அதைச் செய்வதற்கு என்ன திட்டம் இருக்கிறது என்று கேட்டால் ஒன்றும் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். நம் எல்லோருக்கும் தெரியும் நகரங்களில் இருக்கக்கூடிய சாதாரண தொழிலாளியும், சிப்பந்தியும் ரூ. 100-க்குக் குறைவாக சம்பாதிக்கும்படியான நிலையில் இருக்கிறார்கள். அப்படி ஆயிரக்கணக்கானவர்கள் இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களிடமிருந்தும் குறைந்த பட்சம் 20 அல்லது 25 சத விகிதம் பெருவாரியாக ரூபாய் வரியாக வசூலிக்கப்படுகிறது. அதனால் 100 ரூபாய் அதற்குக் குறைந்த அளவில் சம்பாதிக்கக்கூடியவர்களும் கடனாளிகளாக இல்லாமல் இருக்க முடியாது. அப்படி ஒவ்வொருவரும் கடன்பட்டு, பல தொல்லைகளுக்குள்ளாகி கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பதை நாம் பார்க்கிறோம். அந்தக் கஷ்டங்களிலிருந்து நிவர்த்தி அடைவதற்காகத்தான் அவர்கள் தொழிலாளர்களாக இருந்தால் தங்களுக்கு போனஸ் வேண்டும் என்றும் மற்றவர்களாக இருந்தால் தங்களுக்கு வருமானம் உயர்த்திக் கொடுக்க வழி வேண்டும் என்றும் கேட்கிறார்கள். அப்படி அவர்கள் கேட்டாலும்கூட இப்பொழுதுள்ள சட்டங்கள் அவர்களுக்குக் குறுக்கே நிற்கிறது. நியாயமாகவும் சட்ட ரீதியாகவும் அவர்கள் வேலை நிறுத்தம் செய்ய முடியாமல் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட சட்டங்களையும் அரசாங்கம் அவர்களுக்குப் போட்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட சட்டங்கள் இருப்பதால்தான் அவர்கள் எந்த விதமான முயற்சிகள் எடுத்துக்கொண்டாலும் அவர்களால் வெற்றியடைய முடியவில்லை. வெற்றி பெறவும் முடியாது. பெருத்த முதலாளிகளும் தொழிலாளர்கள் பக்கம் இல்லாமல் இருக்கிறார்கள். அரசாங்கத்தின் பாதுகாப்பின் கீழ் பின்னால் முதலாளிகள் இருக்கிறார்கள். சட்ட நுணுக்க கோரிக்கைகளை அவர்கள் அறிந்து கொண்டிருப்பதால்தான் தொழிலாளர்கள் அதிகப்படியான சம்பளமோ அல்லது போனஸோ கேட்டாலும் கூட ஒரு நயா பைசாவோ அல்லது ஒரு தம்படியோ அவர்களுக்கு அதிகமாகக் கொடுக்க முற்படுவது இல்லை. அவர்கள் சண்டை போட்டு கன்சிலியேஷன் கோர்ட்டுகள் மூலமாக வாங்குவதாக இருந்தாலும் அதுவும் அவர்களுக்கு கஷ்டமாக இருக்கிறது. அப்படி வாங்குவதும் துர்லபம் என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரியும். இந்த அரசாங்கத்தின் வழியாக தங்களுக்கு ஒரு நன்மையும் கிடைக்காது என்று அவர்களுக்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது. தங்களுக்கு அரசாங்கத்தினுடைய ஆதரவும் கிடைக்காது என்பது நன்றாகத் தெரியும். ஏனென்றால் அரசாங்கத்தை நடத்துகிறவர்கள் முதலாளித்துவ மனப்பான்மையில் இருக்கிறார்கள். அடித்தளத்தில் இருக்கக்கூடியவர்களுக்கு அரசாங்கத்தினிடமிருந்து எந்த விதமான வசதியும் கிடைக்காது என்று அவர்கள் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் ஆட்சியில் இருக்கும்வரையில் நமக்கு

[Sri S. Pakkirisami Pillai] [7th March 1958

பயம் கிடையாது என்று முதலாளிகள் எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். சாதாரணமாக முதலாளிகள் எந்த விதத்திலும் இதன் காரணமாக தொழிலாளர்களுக்கு விட்டுக்கொடுப்பது என்பது கிடையாது. எந்தவித மான போராட்டத்தை தொழிலாளர்கள் நடத்தினாலும் அந்தப் போராட் டத்தை எதிர்க்கும் மனப்பான்மையில் இருப்பார்களே தவிர நியாய வழிக்கு இணங்கி வருவது கிடையாது. கோர்ட்டுக்குப் போனாலும் அங்குள்ள அதி காரிகளும் பழைய மனப்பான்மையிலேயே இருப்பதனால் அங்கேயும் தங் களுக்கு சாதகமாக நியாயவழியில் இருக்க மாட்டார்கள் என்பதும் தொழி லாளர்களுக்குத் தெரியும். அந்த மனப்பான்மையில் கோர்ட்டார்களும் இருப்பதால் தான் தொழிலாளர்களுக்கு கோர்ட்டுக்குப் போனாலும் அவர் களுக்கு சம்பளமும் போனஸும் கூடிய விஷயங்களில் நியாயம் கிடைப்ப தில்லை என்பதை இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நமக்கு எல்லோருக்கும் தெரியும் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வித வரும்படி இருக்கிறது என்பது. மந்திரிகளுக்கு எவ்வளவு சம்பளம் கொடுக்க வேண்டும் என்பதும், சிப்பந்திகளுக்கு எவ்வளவு சம்பளம் கொடுக்க வேண்டும் என்பதும், இப்படி ஒவ்வொருவருக்கும் எவ்வளவு சம்பளம் பெறவேண்டும் என்றும் வரையறுத்து வைக்கப்பட்டிருக்கிறது. அதைப்போலவே தொழிலாளர்களுக்கும் அப்படி வரையறுத்து வைக் கப்பட்டிருக்கிறது. ஆனால் முதலாளிகளுக்கு அப்படி வரையறுக்கப்பட வில்லை. அவர்களுக்கு சம்பளம் கிடையாது. அவர்களுடைய வரும்படியை நிர்ணயம் செய்யவில்லை. ஏஜென்சி கமிஷனில் கொள்ளை அடித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். அதைக் கட்டுப்படுத்த எந்த விதமான திட்டமும் கிடையாது. தொழிலாளர்கள் கட்டுப்பாட்டின் கீழ் அதை காண் பித்து அதற்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று சொன்னால் யாரும் அதற்கு அரசாங்க அதிகாரிகள் கூட இருந்து உதவி செய்வதற்கும் முன்வர முடியவில்லை. இப்பொழுது ஏஜென்சி கமிஷனர்களும், மானே ஜிங் டைரெக்டர்களும், மற்றும் பெரிய டைரெக்டர்களும் பணக்கார் களாகிக்கொண்டு வருகிறார்கள். லட்சாதிபதியாகவும் கோடீஸ்வரர் களாகவும் ஆகிக்கொண்டு வருகிறார்கள். ஆனால் ஏழை தொழிலாளி ஏழையாகிக் கொண்டுதான் வருகிறான். கனம் கரையாளர் சொன்ன மாதிரி இதை அரசாங்கம் கட்டுப்படுத்தமாட்டோம் என்று சொல்லு கிறார்கள். இவர்களைக் கட்டுப்படுத்துவதற்கும் ஒரு அனுகூலமாக உதவி செய்வதற்கும் தயாராக இல்லை. இந்த நிலைமையில் ஏழைதொழிலாளர் கள் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஏழைகள் மத்தியில் இருந்து கொண்டு அவர்களுடைய நிலைமையைப் பார்த்தால், அவர்களுடைய கஷ் டங்கள் நன்றாகத் தெரியவரும். அவர்களுடைய நிலைமையை பார்த்து வருகிறவர்களுக்குத்தான் அவர்களுடைய கஷ்டங்களைத் தெரிந்து கொள்ள லாம். நண்பர் கனம் அமைச்சர் வெங்கட்டராமன் அவர்களுக்கு முற் போக்கு எண்ணம் இருக்கிறது. நல்ல வழியில் தொழிலாளர்கள் முன் னேற்றம் அடைய வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு இருந்தாலும் கூட முதலாளிகளுடைய அமைப்பை அவரால் மாற்ற முடியவில்லை. அது எல்லோருக்கும் நன்றாகத்தெரியும். அம்மாதிரியான நிலைமையில்தான் மற்றவர்களும் இருக்கிறார்கள். தேர்தல் காலங்களில் முதலாளிகளிட மிருந்து அரசாங்க அதிகாரத்தில் இருக்கிற கட்சியாளர்கள் பணம் வாங்கிய தன் காரணத்தால்தான் அவர்களுடைய அமைப்பை மாற்றிஅமைக்கப் முடியவில்லை. பெரிய பெரிய முதலாளிகளிடமிருந்து காங்கிரஸ் கட்சிக் காரர்கள் தேர்தல் காலத்தில் பணம் வாங்கியதால்தான் முதலாளிகளுக்கு இப்படிப்பட்ட தைரியம் ஏற்பட்டிருக்கிறது. நாம் சமீபத்தில் பார்த்தோம் எச். டி. முந்தரா ஊழல் விஷயத்தில் நமக்கு எவ்வளவோ தெரிந்திருக் கிறது. அதைப்பற்றி திறந்த வெளியில் எவ்வளவோ சொல்லியிருக்கிறார் கள். இதை நாம் பார்த்திருக்கிறோம். முந்திரா விஷயத்தில் திறந்த

4-50 p.m. வெளியிலே சொல்லியிருக்கிறார்கள். அதே மாதிரி நம்முடைய தமிழ் நாட்டிலேயே இப்படி பல வழிகளிலே பணக்காரர்களுடைய தயவின் பேரிலே, அவர்களுடைய ஆக்கினையின் கீழே ஆட்சி இருந்துகொண்டிருக் கிறது. இவர்கள் மூலமாக ஏழைத் தொழிலாளர்களுக்கு ஏதாவது நன்மை கிடைக்குமா என்பது சந்தேகமாகத்தான் இருக்கிறது.

7th March 1958] [Sri S. Pakkirisami Pillai]

மற்ற விஷயங்களிலேயும் தொழிலாளர்களை எப்படி நினைத்துக்கொண்டு இருக்கிறார்களோ அதே மனப்பான்மையில்தான் அவர்களுக்காக வேலை செய்யும் லேபர் டிபார்ட்மெண்ட் சிப்பந்திகள் அலுவலகத்திலேயிருக்கும் அரசாங்கம் நடத்திக்கொண்டிருக்கிறது. லேபர் ஆபீசரோ கன்ஸிலியேஷன் ஆபீசரோ லேபர் கமிஷனர் ஆபீசரோ எங்கேயிருந்தாலும் அந்த இடங்களிலே போய் தங்குவதற்கு போதுமான வசதி இல்லை. அங்கே வேலை செய்யும் சிப்பந்திகளுக்குப் போதுமான வசதி இன்னும் ஏற்படுத்தி வைக்கவில்லை. மற்ற இடங்களிலேயிருக்கும் சௌகரியங்கள் லேபர் டிபார்ட்மெண்ட் அலுவலகங்களிலே ஏற்படுத்தி வைக்கப்படவில்லையென்பது தான் எனது குறை. அந்தக் குறையை எப்பொழுது அரசாங்கத்தார் நிவர்த்திப் பார்கள் என்று நான் சொல்வதற்கில்லை.

இன்னொன்று நான் குறிப்பிட விரும்புகிறேன். சென்னையிலே குடிசைப் பிரதேசத்தை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்று மதராஸ் ஸிட்டி ஸ்லம் இம்ப்ருவ்மெண்ட் சட்டம் என்பதை கொண்டுவந்தார்கள். ஆனால் அதன் கீழ் இதுவரை ஒரு குடிசைப் பிராந்தியத்தையாவது ஆர்ஜிதம் செய்து அதை அபிவிருத்தி செய்ததாக காணவே காணோம். சென்னையில் ஆறு குடிசைப் பிரதேசங்களை இந்த வருஷத்திலே எடுத்துக்கொள்வோம் என்று சொன்னார்கள். இதுவரையில் எந்த அபிவிருத்தியும் காணோம். ஆனால் சில குடிசைப் பிரதேசங்களிலே ஹரிஜனங்கள் அல்லாத இதர ஜாதி இந்துக்கள் கூட மிக ஏழ்மையான நிலைமையிலே இருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய பணத்தை ஒரு கூட்டுறவு நாணய சங்கத்தின் மூலமாகவோ அல்லது வேறு வழியாகவோ போட்டு தாங்கள் வசிக்கும் இடத்தை வாங்குவதற்கு உதவி செய்யுங்கள் என்று கேட்டாலும் அதற்கும் இந்த அரசாங்கத்தார் முன் வரவில்லை. இதைப்பற்றி அடிக்கடி நான் இங்கே சொல்வதோடு கூட அரசாங்கத்திற்கும் எழுதியிருக்கிறேன். ஆனால் இதுவரை அரசாங்கம் கவனம் செலுத்தினபாடில்லை யென்பது என்னுடைய குறை.

கடைசியாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். நம் நாட்டிலே, முக்கியமாக நகரத்திலே எங்கிருந்தோ சில போலீஸ் சப் இன்ஸ்பெக்டர்கள் சில ஸ்டேஷன்களிலே சமீப காலத்தில் போடப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் மூலமாக பல பயங்கரமான செயல்கள் நாட்டிலேயும், நகரத்திலேயும் நடந்துகொண்டிருப்பதை நாம் பார்க்கிறோம். எனக்குத் தெரியும். பிரிட்டிஷ் ஆட்சியிலே எப்படி சித்திரவதைகள் செய்யப்பட்டனவோ, நம்மவர்கள் காங்கிரஸ் இயக்கத்தில் ஈடுபட்டபோது எவ்வளவு அவமானத்திற்கும் சித்திரவதைக்கும் உள்ளாக்கப்பட்டனரோ, அந்த அனுபவத்தையெல்லாம் நாம் எப்படி தெரிந்துகொண்டு இருக்கிறோமோ அதை இப்பொழுதும் நம் ஏழை வாலிபர்கள், வேலையில்லாத வாலிபர்கள் அனுபவிக்க வேண்டிய நிலைமையில் இருப்பதைப் பார்க்கிறோம். ஏழைகள் தங்களுடைய சட்டப் பிரயோகத்திற்கு இலக்காக வைத்துக் கொண்டு, அவர்களை கூட்டிக் கொண்டு போய், வெவ்வேறு வழிகளிலே கேஸ் ஜோடனை செய்வதற்கு பயன்படுத்திக் கொண்டு இருக்கிறார்கள். சில சமயங்களில், சிறிய கேஸ்களாக இருந்தாலும், பெரிய கேஸ்களாக இருந்தாலும் லாடம் போடுவது, மார்பால் நகர்ந்து தரையை நக்கும்படியாக செய்வது, மலஜலத்தை குடிக்கும்படியாகச் செய்வது, இம்மாதிரியான உபத்திரவங்களை இன்னும் இந்த நாகரிக காலத்திலே, சுதந்திர நாட்டிலே செய்யக்கூடிய மனப்பான்மை கொண்ட போலீஸ் சிப்பந்திகள் இருக்கிறார்கள் என்று சொன்னால் அது உண்மையிலேயே வெட்கப்படக்கூடிய விஷயமாகும். முதலியார் அவர்கள் சொன்னதுபோல் எல்லோருக்கும் பயத்தை உண்டாக்கக்கூடிய முறையிலே கீழ்த்தர உத்தியோகங்களில் இருக்கும் போலீஸ் சிப்பந்திகள் அக்கிரமமாக நடந்துகொள்ளும் மனப்பான்மையை போக்க நாம் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். அம்மாதிரி மனப்பான்மை சில உத்தியோகஸ்தர்கள் மனதிலே வளர்ந்திருக்கின்றது. அதைப் போக்குவதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டு இருக்கிறார்கள்? அம்மாதிரியான நிலையிலே அதைப் போக்குவதற்கு பகிரங்கமாக அவர்களைக் கண்டிப்பது கூடாது என்று பெரிய உத்தியோகஸ்தர்கள் பயந்தால்,

நகரம் எப்படிப் போகுமோ என்ற நிலைமையிலே அவர்கள் செல்லு கிருர்கள். அப்படி பயப்பட வேண்டிய அவசியம் இல்லை. பெரிய உத்தியோகஸ்தர்கள், நல்ல மனதுள்ளவர்கள், கீழ்த்தர சிப்பந்திகள் அம்மாதிரி நிலையிலே போனுல் உடனடியாக காப்பாற்ருமல் தண்டனைக்கு உட்படுத்துவதற்கான அந்த தைர்யம் தான் அவர்களுக்கு இருக்கவேண்டும். அதை செய்வதற்கு உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படி இல்லையேல் போலீஸாருடைய ஒரு ஆட்சி வருவதற்கு, போலீசாருடைய தயவினுல்தான் இந்த ஆட்சியை நடத்துவதற்கு எதிர் பார்த்துக் கொண்டிருக்கிருர்களா. நாளை என்ன ஆகுமோ, போலீஸார் ஒத்துழைப்பு இருந்தால்தான் நம்மால் ஆட்சி நடத்த முடியும் என்ற எண்ணம் அவர்கள் மத்தியில் இருக்கிறது என்ற அபிப்பிராயத்தை மற்றவர்கள் சொல்லுகிற மாதிரி நடந்துக் கொள்ளக்கூடாது. உடனடியாக இந்தவித மனப்பான்மையை போக்குவதற்கு அரசாங்கத்தார் முன்வந்து நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படி இல்லையேல், நம்முடைய நாடு எப்படி போகுமோ என்று நான் இப்பொழுது சொல்லத் தயாராக இல்லை.

காந்தியம் மறைந்துகொண்டிருக்கிறது. விநோபா போன்ற பெரும் தலைவர்கள் நம் நாட்டிலே இருக்கிறதால்தான் காந்தீயம் முழுதும்மறையாமல் இருந்து கொண்டிருக்கிறது. அது கடைசியிலே மறைந்தால் வேறு வழியிலேதான் போகும் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக் கொள்ளுகிறேன்.

* Sri P. S. CHINNADURAI : மதிப்பிற்குரிய சட்ட மன்ற துணைத் தலைவர் அவர்களே, இந்த சபை முன்பு சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் 1958–59-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையை இந்த ஆண்டும் கூட பரிதாபத்திற்குரிய முறையிலே கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கிருர் என்று நான் உண்மையிலேயே அனுதாபப் படத்தான் செய்கிறேன். இவ்வாறு நான் கூறுவது, உண்மையிலேயே சோஷலிச சித்தாந்தத்திலே அவருக்குள்ள நம்பிக்கையை வளர்க்கவேண்டுமென்ற ஆவலினுலேதான் அதை அவர்களுடைய கவனத்திற்கு கொண்டு வருவதில் தூண்டுதலாக இருக்கவேண்டும் என்பதினுலேயே நான் இவ்வாறு கூற விரும்புகிறேன்.

நம்முடைய வாழ் நாளிலேயே சோஷலிசத்தை அடைய வேண்டுமென்ற அந்த சோஷலிசத்தை கனம் நிதி அமைச்சர் அவர்கள் தம்முடைய பட்ஜெட் உரையிலே சேர்த்துக்கொண்டிருக்கிருர். அவருக்குக் கூட, ஒரு சோஷலிச பட்ஜெட்டை சமர்பிக்க வேண்டுமென்ற ஆவல் இருக்கத்தான் செய்கிறது என்பதை இது தெளிவு படுத்துகிறது. அவருக்கு இந்த ஆசை இருந்தபோதிலும் ஒரு சோஷலிச பட்ஜெட்டை இந்த சபை முன்பாக அவரால் இந்த ஆண்டில் சமர்ப்பிக்க முடியவில்லையே என்பதை பார்க்கும்போது உண்மையிலேயே மகாபாரதத்திலே படித்த ஒரு சிறு சம்பவம்தான் நினைவுக்கு வருகிறது. அசுவத்தாமனுக்கு நல்ல பசும் பால் கொடுப்பதற்குத்தான் அசுவத்தாமனின் தாயார் விரும்பினுள். நல்ல மாடு இல்லாத குறையினுலே, மாடு வாங்குவதற்கு முடியாத குறையினுலே மாவைத் தண்ணீரில் கரைத்து, பால் என்று சொல்லி கொடுத்த சம்பவம் நினைவுக்கு வருகிறது. குழந்தை அசுவத்தாமனுக்கு மாவு கரைக்கப்பட்ட தண்ணீரை எப்படி பால் என்று குடிக்கச் செய்தார்களோ அது போல் இந்த சபை முன்னுல் சமர்ப்பிக்கப்பட்ட பட்ஜெட்டை, சோஷலிச் பட்ஜெட் என்று என்னுல் ஏற்றுக்கொள்வதற்கு முடியாது என்று நான் இங்கே குறிப்பாக சொல்லுவதற்கு விரும்புகிறேன். சோஷலிஸ்ட் பட்ஜெட் ஒன்றைச் சமர்ப்பிக்க வேண்டுமென்று அவருக்கு இருக்கிற
5 p.m. விருப்பம் உண்மையிலேயே பூர்த்தி அடைய வேண்டும். அவருடைய வாழ் நாளுக்குள் அல்ல. அவர் இங்கு அமைச்சராக இருக்கும் வாழ் நாளுக்குள்ளேயே பூர்த்தி அடையவேண்டும். அப்போதுதான் மகிழ்ச்சி ஏற்படும் என்று சொல்ல விரும்புகிறேன்.

இந்த பட்ஜெட் உரையிலே கனம் நிதி அமைச்சர் அவர்கள் விலைவாசிகள் 35 சத விகிதம் உயர்ந்திருப்பதாகப் புள்ளிவிவரங்கள் மூலம் குறிப்பிட்டிருக்கிருர்கள். விலைவாசிகளினுல் ஏற்பட்டுள்ள கொடுமைகளை

7th March 1958] [Sri P. S. Chinnadurai]

இந்த ராஜ்யத்திலுள்ள மக்கள் எல்லோரும் அனுபவித்துக்கொண்டு வருகிறார்கள். விலைவாசிகள் உயர்ந்துவிட்டது என்று அமைச்சர் கூறும்போது உணவுப்பண்டங்களின் விலை அதனால் எப்படி உயர்ந்துவிட்டது, ராஜ்ய மக்களுடைய கஷ்டங்களைக் குறைக்க என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்பதுபற்றி ஒன்றும் அவருடைய உரையில் காணப்படவில்லை. இன்றைய தினம் விவசாயிகள் தங்களால் உற்பத்திசெய்யக்கூடிய பொருள்களுக்கு உரிய விலையைப் பெறுவதற்கு இயலாமல் போனது மாத்திரம் அல்ல. இந்த ராஜ்யத்தில் அன்றாடம் உழைத்து அந்த ஊதியத்தைக் கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டிய நிலைமையில் இருக்கிற தொழிலாளர்கள், சர்க்கார் சிப்பந்திகள், நடுத்தர மக்கள் இவர்கள் எல்லோரும் விலைவாசி ஏற்றத்தினால் மிகவும் துன்பம் அடைந்திருக்கிறார்கள். அந்தத் துன்பத்தைப் போக்குவதற்கு இந்த அரசாங்கம் எதுவும் செய்யவில்லை என்று நான் இந்தச் சபை முன்பாக மீண்டும் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

இந்த பட்ஜெட் உரையில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். நம் நாட்டிலே சராசரி உற்பத்தி அளவானது முன்னைவிட இப்போது அதிகரித்திருக்கிறது என்பதாக. அதிகரித்திருக்கிறது என்று நாம் நம்மையே இன்று நாடு இருக்கும் நிலைமையில் திருப்தி செய்து கொண்டுவிட்டால் மேற்கொண்டு முன்னேறுவதற்கு இயலாத நிலைமை ஏற்பட்டுவிடும். உணவுப் பண்டங்களை அதிகமாக உற்பத்தி செய்யவேண்டுமானால் நிலச்சீர்திருத்தம் மிகவும் இன்றியமையாதது என்று இந்தச் சபை முன்பாக பலதரப்பினரும் எடுத்துக் கூறிவருகிறார்கள். உள்ளதை உள்ளவாறு எடுத்துக் கொள்கிற நிதி அமைச்சர் அவர்கள் அந்த உண்மையை ஒப்புக்கொண்டு எதற்கு என்ன வழிவகை செய்யப்பட்டிருக்கிறது என்பதைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை. அதற்குப் பதிலாக, வெறும் கண் துடைப்பு என்ற முறையில் விவசாய வருமான வரியை விதிக்கிறோம் என்ற ஏற்பாட்டைச் செய்திருக்கிறார்கள். இவைகளை எல்லாம் வைத்துக்கொண்டு ஒரு சோஷலிஸ்டு பட்ஜெட்டைத் தயாரித்துவிட்டோம் என்று கூறிக் கொள்வது சரியாகாது என்பதற்கு இன்னும் ஒரு உதாரணம் கூறுவேன்.

சமீபத்தில் ப்ளாக் டெவலப்மெண்டு ஏரியாவில் உள்ள ஒரு கிராமத்திற்கு நான் சென்றபோது ஒரு பலகையில் கிராமத்திற்கு வெளியே எழுதப்பட்டிருந்தவைகளைப் படித்தேன். அதில் நிலச்சீர்திருத்தம் என்று எழுதப்பட்டிருந்தது. இது என்ன என்று கேட்டபோது மண் அரிப்புத் திட்டத்திற்கு அங்கே வகை செய்யப்பட்டிருக்கிறது என்றார்கள். மண் அரிப்புத் திட்ட வேலைக்குப் பெயர் நிலச்சீர்திருத்தம் என்று அங்கே எழுதப்பட்டிருந்ததைக் காட்டி அதுதான் நிலச்சீர்திருத்தம் என்று சொல்வது எப்படியோ அதுபோல் இப்போது கொண்டுவரப்பட்டிருக்கிற விவசாய வருமான வரியைப் பார்த்து இதனால் நிலச்சீர்திருத்தத்திற்கான அஸ்திவாரம் அமைக்கப்பட்டுவிட்டதாகவோ, பெரும்பான்மையான பெருநிலச்சுவாந்தார்கள் இதனால் தங்கள் நிலங்களைக் குறைத்துக்கொள்ள முன் வந்துவிடுவார்கள் என்பதாகவோ, நில உடைமைக்கு ஒரு வகையில் வரம்பு கட்டி விடலாம் என்பதாகவோ எண்ணம் கொண்டிருப்பார்களானால் அதை நாங்கள் ஒத்துக்கொள்ள முடியாமல் இருக்கிறோம்.

சோஷயலிஸ்டு இயக்கமானது பல ஆண்டுகளாக விவசாய வருமான வரியைக் கொண்டு வரவேண்டும் என்பதாகச் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறது. ஆனால் அதே நேரத்தில் விவசாய வருமான வரியை விதிக்கும்போதே ஏற்கனவே நிலவரி என்று போடப்பட்டு வந்ததை அடியோடு ரத்து செய்துவிட வேண்டுமென்று வற்புறுத்தி வந்திருக்கிறது. ஆனால் இன்று நிலவரியை ரத்து செய்யாமல் அதற்குப் பதிலாக அடிஷனல் சர்சார்ஜ் என்பதை ரத்து செய்துவிட்டு விவசாய வருமான வரியைக்கொண்டு வந்திருக்கிறார்கள். இது சரியானது அல்ல என்று இந்தச் சமயத்தில் கூறிக்கொள்ள விரும்புகிறேன். உண்மையில் இந்த நாட்டில் பெரும்பான்மையாக இருக்கிற விவசாய மக்களுடைய குறைகளை கவனித்து அந்தக் குறைகளை நிவர்த்திப்பதற்கு ஏற்ற முறையில் இந்த பட்ஜெட் தயாரிக்கப்

[Sri P. S. Chinnadurai] [7th March 1958

படவில்லை என்று நான் பல உதாரணங்களுடன் இங்கே எடுத்துக்கூற முடியும். விவசாயிகளுக்குக் கொடுக்கின்ற கடன் அளவு முந்தைய பட்ஜெட்டைக் காட்டிலும் இந்த பட்ஜெட்டில் குறைக்கப்படுகிறது. இதற்கு என்ன காரணம் என்பதை நிதி அமைச்சர் அவர்கள் விளக்கிக் கூற வேண்டியிருக்கும். அதோடு சிறிய நீர்ப்பாசனம் திட்டங்களுக்காக ஒதுக்கி யிருக்கிற தொகையில் கூட ஒரு பகுதி குறைக்கப்பட்டிருக்கிறது. அதற்கு என்ன காரணம் என்பதைப் பற்றியும் கனம் அமைச்சரவர்கள் கூற வேண்டியதாக இருக்குமென்று சொல்ல விரும்புகிறேன்.

மேலும் விவசாயிகள் உற்பத்தி செய்கின்ற பண்டங்களை விற்பனை செய்வதற்குரிய மார்க்கெட்டிங் ஸ்கீம் அதற்கான செலவுகளைக் கூட இந்த ஆண்டில் குறைத்திருக்கிறார்கள். இன்றைய தினம் விவசாயிகள் உற்பத்தி செய்கிற பொருள்களுக்கு சரியான மார்க்கெட் வசதி கிடையாது. அவர் களுடைய பொருள்களுக்கு உரிய விலையும் கிடைக்கவில்லை. இதனால் பெரும் பாலான பேர்கள் பாதிக்கப்படுகிறார்கள் என்ற கூக்குரல் கிராமவாசிகளின் பக்கத்தில் எழுகிறது. இந்தச் சமயத்தில் மார்க்கெட்டிங் ஸ்கீமுக்கு அதிகப் படியான தொகை ஒதுக்குவதற்குப் பதிலாக அதைக் குறைத்திருக்கிறார்கள். இத்தகைய ஒரு தீங்கான நிலைமையை ஏன் உண்டாக்கியிருக்கிறார்கள் என்று சொல்லவில்லை. அதற்கும் சரியான விளக்கத்தை கனம் நிதி அமைச்சர் அவர்கள் கூறவேண்டியிருக்கும்.

மின்சார இலாகா சம்பந்தமாக ''பவர் கட்டு'' பற்றி, அடிக்கடி சொல்லப் பட்டுவந்தபோதிலும் அது விஷயமும் சரியாகப் பரிசீலனை செய்யப்பட வில்லை. இந்தியாவிலேயே மின்சாரம் சம்பந்தமாக நம் ராஜ்யம்தான் அதிகமாக முன்னேறியிருக்கிறது என்கிற பெருமையை நிலைநாட்டிக் கொள்ளவேண்டுமானால், மின்சார வெட்டுக்கு இனிமேல் அவசியம் நேராத வாறு நாம் செய்தாகவேண்டிய பொறுப்பு நமக்கு இருக்கிறதென்று சொல்ல விரும்புகிறேன். நாம் எத்தனையோ திட்டமிட்டுத்தான் செய் கிறோம் என்றாலும் மின்சார விநியோக விஷயத்தில் இன்னும் பல குறைகள் இருந்துகொண்டுதான் இருக்கின்றன. மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் சிறப்புத் தோன்றலாமே தவிர உள்ளே நுழைந்து பார்த்தால் மின்சார இலாகாவில் இருக்கக்கூடிய ஊழல்கள், மின்சார இலாகா ஊழியர்களுக்கு நீண்டநெடுங்காலமாக இருந்துவருகிற குறைபாடுகள் இன்னமும் நீக்கப்படாமலேயே இருந்துகொண்டிருக்கின்றன என்பதை நாம் ஒப்புக்கொண்டாகவேண்டும். இப்போது புதிதாக பலருக்கு மின்சார சப்ளை செய்யப்பட்டுவருகிறது. இருந்தாலும் ஏற்கனவே விவசாயிகள் செலுத்தியிருக்கிற அட்வான்சு செக்யூரிடி தொகையோடு மீண்டும் ஒரு அடிஷனல் டெபாஸிட் கட்ட வேண்டும் என்பதாக வற்புறுத்தப்படுகிறது. இந்த அதிகப்படியான டெபாஸிட் தொகை கட்டும்படியாகச் சொல்வதற்கு எவ்விதமான நியாயமும் இல்லை என்பதாகப் பல விண்ணப்பங்கள் போட்டபோதிலும், அதற்கு யாதொரு பதிலும் இல்லாத நிலைமையில் மின்சார இலாகாவானது நிர்வகிக்கப்பட்டுவருகிறது. அது இந்த மின்சார இலாகாவுக்கோ, இந்த அரசாங்கத்திற்கோ பெருமை அளிக்காது என்று இந்த நேரத்தில் கூற விரும்புகிறேன்.

மேலும் மின்சார இலாகா தொழிலாளர்களுடைய குறைகளைக் குறித் தும் நான் எடுத்துக் காட்ட கடமைப்பட்டிருக்கிறேன். மின்சார இலாகாவில் வேலை செய்கின்ற தொழிலாளர்களுக்கு இந்த அரசாங்கம் கொடுக்கின்ற சம்பளம் மிகவும் குறைவானது. விலைவாசிகள் இன்றைய தினம் ஏறு முகமாக இருக்கிறது என்பதை இந்த அரசாங்கம் ஒப்புக்கொள்கிறது. அந்த ஏற்றமானது முன்பு இருந்ததைக் காட்டிலும் 35 சத விகிதம் அதிகப் பட்டிருக்கிறது என்றும் ஒப்புக்கொள்கிறது. இந்த நிலைமையில் அந்த ஊழியர்களுடைய சம்பளத்தை மட்டும் கொஞ்சமாவது உயர்த்திக் கொடுப் பதற்கு இந்த அரசாங்கம் சரியான ஏற்பாடு எதுவும் செய்யவில்லை. தனிப்பட்டோர் தொழிற்சாலையில் இருக்கும் ஊழியர்கள் இதே காரியத்தைச் செய்வதற்காக என்ன ஊதியம் பெறுகிறார்களோ அதையும் விடக் குறை வாகவே சர்க்கார் இலாகாவில் வேலை செய்கிறவர்கள் பெறுகிறார்கள் என்பது மிகவும் வெட்கப்பட வேண்டிய விஷயமாகும். இப்படிப்பட்ட

மிகவும் இழிவான நிலையில், அவர்களுடைய சர்வீஸையும் நிரந்தரமாக்காமல் பலகாலமாக வைத்திருப்பதும் அதுவும் 40 ஆயிரம் தொழிலாளர்களை வைத்திருப்பது சரியானது அல்ல என்று இந்த நேரத்தில் கூற விரும்புகிறேன்.

மேலும் சுமார் இரண்டரை கோடி ரூபாய் மதிப்புள்ள கைத்தறி ஜவுளி தேங்கிக் கிடப்பதாக இங்கு அறிவிக்கப்படுகிறது. இதனைக் குறித்து அரசாங்கத்திற்கு சரியான ஒரு பொறுப்பும் கடமையும் இல்லையா ? மத்திய அரசாங்கம் இந்த கைத்தறி ஜவுளிக்குக் கொடுத்து வந்த ரிபேட் தொகையைக் குறைத்து விட்டார்களே? அதை எதிர்த்து, சண்டை போட்டு அந்த ரிபேட் தொகையைக் குறைக்காமல் பெறுவதற்கு இந்த அரசாங்கத்தால் முடியவில்லையா ? அந்த ரிபேட் தொகையை திரும்பப் பெறுவதற்கும், கைத்தறி ஜவுளி தேக்கமாக இருப்பதை குறைப்பதற்கும் உரிய ஒரு முயற்சியையும் கையாள இந்த அரசாங்கத்தால் முடியவில்லையா என்பதைப்பற்றி பட்ஜெட் உரையில் ஒன்றும் தெரிவிக்கப்படவில்லை. பொதுவாக ஏதோ கைத்தறிக்கு ஆபத்து வந்து விட்டதைப் போல், அது எதேச்சையாக நேர்ந்து விட்டது போல் குறிப்பிடப் பட்டிருக்கிறதே தவிர அதற்குள்ள பரிகாரம் குறித்து ஒன்றும் சொல்லப்படவில்லை. இனி என்ன செய்யப்போகிறீர்கள் என்று இது வரையிலும் அறிவிக்கப்படவில்லை. நிதியமைச்சர் அவர்கள் இதற்கு ஒரு விளக்கம் அவரது பதிலில் கொடுக்க வேண்டும் என்று விரும்புகிறேன். அதோடு, கிராமப்புறங்களில் விவசாயிகளுக்கு உதவிபடுகிற முறையில் சிறு கைத்தொழில்கள் ஆரம்பிக்கவேண்டுமென்று பன்முறை இங்கு வற்புறுத்தப்பட்டிருக்கிறது. சிறு தொழில்களை ஊக்குவிக்க இந்த அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்திருக்கிறது என்று பார்த்தால் பட்ஜெட்டில் சிறு கைத்தொழில்களுக்கான தேவையை, அதற்காக முந்திய ஆண்டு எவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டதோ அதைவிட குறைவான அளவுதான் இவ்வாண்டு பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று தெரிகிறது. முந்திய ஆண்டு ஒதுக்கப்பட்டதுகூட பூர்ணமாக செலவழிக்கப்படவில்லை. ஒதுக்கப்பட்ட தொகையில் முக்கால் பங்குகூட செலவழிக்கப்படவில்லை. ஏன் அப்படி செலவழிக்க முடியாமல் போய்விட்டது என்பதற்கான காரணங்கள் பட்ஜெட் மெமராண்டத்தில் சொல்லப்படவில்லை. இந்த ஆண்டு ஒதுக்கியிருக்கிற பணமும் குறைவானதுதான். இதைக் காட்டிலும் அதிகப்படியான பணத்தை ஒதுக்கி கிராமப்புறங்களில் உள்ள வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்கு ஏன் இந்த அரசாங்கம் சரியான ஏற்பாடுகள் செய்யக்கூடாது என்பது குறித்தும் அமைச்சர் அவர்கள் தமது பதிலில் விளக்கிக்கூற வேண்டுமென்று நான் விரும்புகிறேன். கோவை சர்க்கா என்று புதிதாக 16 கதிர் கொண்ட சர்க்கா ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது. அதற்காக ஒரு பயிற்சி முகாம் கூட அமைக்கப்பட்டது, சென்ற ஆண்டில் என்று நினைக்கிறேன். அது என்னவாயிற்று ? அது வெற்றிகரமாக இருக்குமா, அந்த சர்க்காவை பரவலாக விநியோகம் செய்வதற்கு இந்த அரசாங்கம் ஏற்பாடு செய்யக்கூடியதாக ஒரு திட்டம் இருக்கிறதா இல்லையா என்று பட்ஜெட் உரையில் எதுவும் காணப்படவில்லை. அந்தச் சர்க்காவானது பரவலாக விநியோகம் செய்யப்படுமானால், அதன் மூலம் கிராமப்புறங்களில் உள்ளவர்களுக்கு போதுமான வேலை கிடைக்கும் குறிப்பாக, அதனால் பெண்களுக்கு அதிகமாக வேலை கிடைப்பதற்கு வகை இருக்கிறது என்று கூறப்படுகிறது. அது குறித்து இந்த அரசாங்கம் நடவடிக்கை ஒன்றும் எடுத்துக் கொள்ளவில்லை. அதற்குரிய முறையில் அதற்காக பணம் ஒதுக்கப்படவில்லை என்று நான் இங்கு சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இதைப் பார்க்கும்போது, சிறு கைத்தொழில்கள் வளர்ச்சி அடைவதற்கு போதிய உற்சாகம் கொடுக்க இந்த அரசாங்கம் தவறி விட்டது. சிறு கைத்தொழில்கள் வளர்ச்சி அடைந்தால் ஒழிய பரவலாக இந்தத் தொழில் கிராமப் புறங்களில் வளர்க்கப்பட்டால் ஒழிய, வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவது என்பது அரிதாகவே முடியும். ஆகவே, வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவது வரையில் மக்களின் வாங்கும் சக்தி அதிகரிப்பதற்கு இயலாது. அப்படி வாங்கும் சக்தி அதிகரிக்காத நிலையில் நாட்டில் இருக்கிற தரித்திர நிலை இன்னும் அதிகமாக வளரத்தான் செய்யும். ஆகவே, சிறு கைத்தொழில்கள் வளர்க் 5–10 p.m.

கப்படுதவற்கு அரசாங்கம் போதிய நிதி ஒதுக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். பெரும் தொழில்கள் சம்பந்தமாகவும் அரசாங்கத்தின் கொள்கை தனியார் துறையைத்தான் ஆதரிப்பதாக இருக்கிறது என்பதை நான் வருத்தத்தோடு குறிப்பிட விரும்புகிறேன். சோஷியலிச தத்துவத்தை ஏற்றுக்கொண்டிருக்கிற இந்த அரசாங்கம் படிப்படியாக தனியார் துறையைக் கரைத்து பொதுத்துறையை வளர்ப்பதற்குப் பதிலாக, சோஷியலிஸத் தத்துவத்தை அமலாக்கப் போகிறோம் என்று சொல்கிற அதே நேரத்தில் தனியார் துறையை வளர்ப்பதற்கு அதிக ஊக்கம் காட்டுகிறார்கள் என்பதைப் பார்க்கும்போது மிகுந்த வருத்தம் ஏற்படுகிறது. அலுமினியத் தொழிற்சாலை ஒன்று தமிழகத்தில் ஆரம்பிக்கப்படும் என்று சொல்லப்பட்டது. இப்பொழுதும், அது ஆரம்பிக்கப்படும் என்று சூசகமாக குறிப்பிடப்பட்டிருக்கிறது, பட்ஜெட் உரையில். ஆனால் யாரால் என்று மாத்திரம் சொல்லப்படவில்லை. பத்திரிகைச் செய்திகளில் இருந்தும், அமைச்சர்களின் அறிக்கைகளில் இருந்தும் நான் அறிவது என்னவென்றால், இந்த அலுமினியம் தொழிற்சாலையை ஆரம்பிக்கும் பொறுப்பு தனியார் துறைக்கு விட்டுவிடப்படும் என்று அறிகிறோம். அப்படி இப்படிப்பட்ட பெரிய அலுமினியம் தொழிற்சாலையை ஆரம்பிக்கும் பொறுப்பு தனியார் துறைக்கு விடப்படுவது என்று சொன்னால், அது சோஷியலிஸத்திற்கு வழி வகுப்பதாகாது என்று குறிப்பிட விரும்புகிறேன். எழரைக் கோடி ரூபாய் செலவில், மூலதனக் கொண்ட ரயான் தொழிற்சாலை ஒன்று ஆரம்பிக்கப்படுவது குறித்து பட்ஜெட் உரையில் காணப்படுகிறது. அதற்குரிய நிதி வசதியை வெளி நாடுகளில் இருந்து பெறுவதற்கு சில தனிப்பட்ட முதலாளிகள் வெற்றி கண்டிருப்பதாகவும் இந்த பட்ஜெட் உரையில் நான் காண்கிறேன். அது, யாருடைய திறமையைக் காட்டுகிறது. இந்த நாட்டின் பொருளாதாரத்தின் பேரில் முதலாளித்துவத்திற்கு இருக்கிற செல்வாக்கை, பிடிப்பைத்தான் அது வெளிப்படுத்துகிறதே தவிர இந்த சர்க்காருக்கோ அல்லது மத்திய சர்க்காருக்கோ இந்த நாட்டின் பொருளாதார நிலையில் இருக்கும் பிடிப்பை வெளிப்படுத்துவதாக இல்லை. அரசாங்கத்தின் சார்பில் வெளிநாடுகளுக்குப்போய் கடன் வாங்க முடிகிறது திரும்புகிற நேரத்தில் தனியார் சிலருக்கு கடன் வாங்க முடியும் என்றால் அது கண்டு சோஷியலிஸத்துவத்தில் நம்பிக்கை உடையவர்களால் மகிழ்ச்சி அடையமுடியாது. ரெயான் தொழிற்சாலை ஒன்று நம் நாட்டில் ஆரம்பிக்கப்படுகிறது என்று மகிழ்ச்சி அடைந்தாலும் அது தனிப்பட்டவர்களால் ஆரம்பிக்கப்படுகிறது என்பது கண்டு வருந்தத்தான் தோன்றுகிறது. அது அரசாங்கத்தினால் ஆரம்பிக்கப்படுமானால் அப்பொழுதுதான் நாம் உண்மையில் மகிழ்ச்சி அடைய முடியும் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதற்கெல்லாம் பணத்திற்கு எங்கே போவது என்று கேட்கக்கூடும். சிறு சேமிப்புத் திட்டம் இந்த வருடம் கொண்டுவரப் பட்டிருக்கிறது. அது தீவிர்மாக்கப்பட்டும் வருகிறது. அதன் மூலம் சுமார் பன்னிரண்டு கோடி ரூபாய் வசூல் செய்ய அரசாங்கம் திட்டமிட்டிருப்பதாக நான் அறிகிறேன். அதில் இப்பொழுதே பாதிப் பணம் வசூல் ஆகி இருக்கிறது என்றும் கேள்விப்படுகிறேன். தொழில் துறையில், பொதுத் துறையில் அரசாங்கம் அதிக அக்கரைக் காட்டுகிறது என்று மக்களுக்கு தெரிந்தால், அதில் மக்கள் நம்பிக்கை வைப்பார்களேயானால் அவர்கள் இக்காரியங்களில் தாமாகவே பணம் போட முன் வருவார்கள். அரசாங்கமே இத்தொழில்களை எடுத்துச் செய்ய முன் வந்தால், அரசாங்கம் ஆரம்பிக்கும் கார்ப்பரேஷனில் மக்கள் தாமாகவே முன் வந்து பங்கு போட்டு அதன் மூலம் தொழில் வளம் பெறச் செய்ய மக்கள் வேலை செய்ய முன் வருவார்கள் என்று நான் உறுதியாக கூற முடியும். வேண்டுவதெல்லாம், முயற்சிதான். அது தான் இங்கு குறைவாக இருக்கிறது. அது எதிர்காலத்தில் அதிகமாக இருக்கும் என்று தெரிவிப்பதற்கான முறையிலே கூட நிதியமைச்சர் அவர்களின் பட்ஜெட் உரையில் எதுவும் இல்லாதது குறித்து நான் மிகவும் வேதனைப்படுகிறேன். புதுவரிகளில், எந்த வரி போடப்பட்ட போதிலும் அது பொதுவாக அது மக்கள் தலையில்தான் வீழ்கிறது, இறுதியாக என்பதை நாம் வைத்துப் பார்த்தால் இப்பொழுது கேளிக்கைகளுக்காக வரி சம்மந்தப்பட்ட வரையில் மீண்டும் கிராம மக்கள்தான் பாதிக்கப்படும்

7th March 1958] [Sri P. S. Chinnadurai]

நிலை ஏற்படுகிறது. இது வரையில் டூரிங் சினிமாவிற்கு தமாஷா வரி கிடையாது. இப்பொழுது அது போடப்படுகிறது. நகரங்களில் உள்ள தியேட்டர்களையும், கிராமங்களில் உள்ள டூரிங் சினிமாக்களையும் ஒப்பிட்டுப் பாருங்கள். நகரங்களில் உள்ள தியேட்டர்களில் உள்ள வசதிகள் கிராமங்களில் உள்ள டூரிங் சினிமாக்களில் கிடையாது. இங்கு தரை என்று சொன்னால் பெஞ்சில் உட்காரலாம். அங்கு தரை என்று சொன்னால் மண்ணில்தான் உட்கார வேண்டும். நகரத்தில் போடும் படங்கள் கிராமங்களுக்கு ஒரு வருடம் சென்ற பின்தான் வருகிறது. கிராம வாசிகளுக்கு புதிதாக ஒரு படம் வந்தால் அதை உடனே பார்க்க முடியாது. மழை பெய்தால் தண்ணீர் ஓடும். காற்றின் இரைச்சலும் இருக்கும்.

இந்த நிலைமையில் டூரிங் சினிமாக்களில் போய் சினிமா பார்ப்பது கஷ்டமான காரியமாக இருக்கிறது. அவர்களும் இந்த வரியை கொடுக்க வேண்டியிருக்கிறது. அவர்களுக்கும் இந்த வரியை போடுவது அவ்வளவு அதுசரியல்ல என்பதை எடுத்துக்கூற விரும்புகிறேன். ஆகவே, இந்த வரியை கிராமங்களிலுள்ள டூரிங் சினிமாக்களுக்கு விஸ்தரிக்கக்கூடாது என்பதை உறுதியாக எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். எதுவானாலும் சரி, கிராமங்களுக்குத்தான் சலுகை என்ற நிலை வரவேண்டும். நகரங்களின் வளர்ச்சிக்கு கிராமங்கள் உதவியிருக்கின்றன. இனிமேல் கிராமங்களின் 5-20 p.m.
நிலை மாறவேண்டும். இனிமேல் நகரங்கள் தான் கிராமங்களுக்கு உதவி புரியவேண்டும். கல்வி வசதி கொடுப்பது, ரோடுகள் வசதி, தண்ணீர் வசதி, இம்மாதிரிப்பட்ட எந்த வசதிகளை எடுத்துக்கொண்டாலும், இன்றைக்கு நவீன வசதிகள் என்று சொல்லப்படுகின்ற, மனித வாழ்க்கைக்கு அவசியமாயிருக்கின்ற வசதிகள் கூட கிராமங்களில் போதுமான அளவில் இல்லை. கிராமங்களில் வசதிகள் ஏற்படவேண்டும் என்கின்ற எண்ணத்தை ஏற்றுக்கொண்டு அதை கருத்தில் கொண்டுதான் இந்த பட்ஜெட் தயாரிக்கப்பட்டிருக்கவேண்டும். ஆனால் கிராமங்களின் பேரில் வரியை சுமத்துகின்ற நிலைமையைத்தான் காணுகின்றோம். அடுத்ததாக வீடு கட்டுவதற்குரிய திட்டத்தை எடுத்துக்கொண்டால் இவை பூர்த்தியாக இன்னும் எத்தனை தலைமுறையாகும் என்று தெரியவில்லை. அது ஒருபுறமிருக்க உடனடியாக வீடில்லாதவர்களுக்கு வீடு கட்டுவதற்கு ஐந்து செண்டு காலி நிலமாவது கொடுக்க இந்த அரசாங்கம் முன்வரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இன்னும் சமூக பாதுகாப்புக்காக இந்த அரசாங்கம் எத்தனையோ திட்டங்களை போடுகிறது. அவற்றில் இந்த அரசாங்கம் குறைந்த பட்சம் ஒரு திட்டத்தையாவது கொண்டு வந்து நிறைவேற்றினால் நலமாக இருக்கும். அதாவது வயோதிகர்களுக்கு பென்ஷன் கொடுப்பது என்கின்ற ஒரு திட்டம் இருக்கின்றது. இப்போது அரசாங்கத்தில் 55-வது வயது வரை வேலை செய்தால் பென்ஷன் கொடுக்கிறார்கள். அது போல் நாட்டில் 55 அல்லது 60 வயது வந்தவர்களுக்கு வேலையில்லாமல் இருப்பார்களானால் அவர்களுக்கு சர்க்கார் மூலமாக பென்ஷன் கொடுப்பதற்கு வழி செய்ய வேண்டும். அவ்விதம் கொடுப்பதாயிருந்தால் சமூகத்தில் அது ஒரு பாதுகாப்பாக இருக்கும் என்பதைச் சொல்லிக் கொள்கிறேன். அடுத்ததாக இந்த பட்ஜெட் உரையில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்திய சர்க்காரில் நிதி அமைச்சராக இருந்த திருவாளர் டி. டி. கே. அவர்களுக்குப் புகழ் மாலை சூட்டியிருக்கிறார்கள். இதற்கு அவசியம் இருக்கின்றதா என்பதுதான் என்னுடைய கேள்வி. கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கு திரு. டி. டி. கே. அவர்களிடம் மதிப்பு இருக்குமானால் தாராளமாக தனிப்பட்ட முறையில் தெரிவித்துக் கொள்ளட்டும். நாம் அதை ஆட்சேபித்திருக்க மாட்டோம். ஆனால் இந்த சபையை கட்டுப்படுத்தும் முறையில் அவருடைய பெயரை இதில் புகுத்தி புகழ்மாலையை சூட்டியிருக்கிறார்கள். இந்த சபைதான் இதற்கு முன்னால் ஏகமனதாக கைத்தறிக்கு கரை போட்ட வேஷ்டியும் கலர் சேலையும் ஒதுக்க வேண்டும் என்று தீர்மானம் போட்டு மத்திய சர்க்காருக்கு அனுப்பின நேரத்தில் அங்கு காமர்ஸ் மினிஸ்டர் பதவியில் இருந்தவர் டி. டி. கே. அவர்கள் தான். அந்த சமயத்தில் தான் நம்முடைய தீர்மானம் புறக்கணிக்கப்பட்டது என்பதை இந்த சபையின் ஞாபகத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். அந்த முறையில் நடந்து கொண்ட டி. டி. கே. அவர்களுக்கு

இந்த சபையின் சார்பாக புகழ்மாலே சூட்டக்கூடிய நிலைமை வந்திருக்கின்றது என்பதை குறிப்பிட விரும்புகிறேன். ஆகவே, என்னைப் பொறுத்த வரையில் அந்த பாராட்டுரையில் எனக்கு பங்கெடுக்க இயலாது என்பதை குறிப்பிட விரும்புகிறேன். அதோடு இந்திய அரசாங்கத்தின் நிதி அமைச்சர் பதவியானது ஒவ்வொரு தடவையிலும் அது தோல்வியாக முடிந்து வந்திருக்கிறது. அந்த தோல்வி படலத்தில் ஒரு புதிய அத்தியாயத்தைச் சேர்ந்த டி. டி. கே. அவர்களுக்கு என்னுல் பாராட்டுரை வழங்க இயலாது என்பதைக் கூறிக்கொண்டு முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

**Sri M. KALYANASUNDARAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே ! நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்த நிதி நிலே அறிக்கையானது சாதாரண புள்ளி விவரங்களையும் கொண்ட சில கருத்துக்களை கொண்ட வெறும் கட்டுரை மட்டுமல்ல. அடுத்த 12 மாதங்களுக்கு நம்முடைய ராஜ்யத்தில் இருக்கக்கூடிய மக்களின் தலைவிதி எப்படி இருக்கப்போகின்றது என்பதை எடுத்துக் காட்டக்கூடியதாகும். இந்த நிதி நிலே அறிக்கையை நாம் நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பிக்கக்கூடிய ஒரு தனி அறிக்கையாக மட்டும் பரிசீலனை செய்ய முடியாது. நம்முடைய தேசத்தில் நம்முடைய ராஜ்யம் ஒரு அங்கம். **Planning Commission** னுடைய அறிக்கை, மத்திய சர்க்காரினுடைய நிதி நிலே அறிக்கை இவற்றிற்கெல்லாம் உட்பட்டு இருக்கும் நம்முடைய நிதி நிலே அறிக்கை சிறப்பாகவோ அல்லது அதற்கு தகுந்தாற்போல் பல குறைபாடுகளை உடையதாகவோ தான் இருக்க முடியும் என்பது என்னுடைய அபிப்பிராயம். அதையொட்டியுள்ள மொத்த கண்ணேட்டத்தில் தான் இந்த நிதி நிலே அறிக்கையில் கொடுக்கப்படுகின்ற யோசனைகளை பரிசீலிக்க விரும்புகின்றேன். அதில் இருக்கக்கூடிய நல்ல அம்சங்களை நான் பாராட்ட தயங்கமாட்டேன். அதே மாதிரி குறைகளை எடுத்துச்சொல்லும்போது அவைகளை அமைச்சர் அவர்கள், வருத்தப்படாமல் ஏற்றுக்கொள்ளவேண்டும். முதலில் வருவாயை சம்மந்தப்பட்ட மட்டில் நிதியமைச்சர் அவர்கள் சில புதிய வரிகளை கொண்டு வந்திருக்கின்றார்கள். அந்த புதிய வரிகளுக்கு நியாயமான காரணம் காட்டவேண்டுமென்றே, என்னவோ, செலவு இனங்களை அதிகமாக காட்டி, மற்ற இனங்களை குறைவாக காட்டி, இவைகளைக் கொண்டு சரிக்கட்ட முடியாமல் போய்விடும், ஆகையினுல் புதிய வரிகள் அவசியம் என்று சொல்லி புதிய வரிகளை கொண்டு வந்திருக்கிறார்கள். இந்த வரிகளை சம்மந்தப்பட்ட மட்டில் நியாயமான வரிகளை கொண்டு வருகின்ற சமயத்தில் எல்லாம் நாங்கள் அவைகளை ஆதரித்து வந்திருக்கின்றோம். இந்த வரிகளில் எது நியாயமாக இருக்கின்றனவோ அவைகளை ஆதரிக்க தயங்கமாட்டோம். இப்போது விவசாய வருமான வரியை எடுத்துக் கொள்வோம். இந்த நிதி நிலே அறிக்கையில் இருக்கக்கூடிய முக்கியமான ஒரு வரி இது. இது ஒரு புதிய விஷயமல்ல. 1952-ம் ஆண்டில் நடந்த பொது தேர்தலுக்குப் பிறகு சட்ட சபைக்கு நாங்கள் வந்ததிலிருந்து எங்கள் கட்சியின் சார்பால், விவசாய வருமான வரி தான் வேண்டும் என்றும், நிலவரி என்றுள்ள அமைப்பை மாற்றி அதை அடியோடு திருத்தி அமைக்கவேண்டுமென்றும் சந்தர்ப்பம் கிடைத்த பொழுதெல்லாம் நாங்கள் சுட்டிக் காட்டி வந்திருக்கிறோம். அப்போதெல்லாம் அதை அரசாங்கம் மறுத்துவிட்டது. அந்த சமயங்களில் எல்லாம் நிலச்சீர்திருத்தமே செய்யப்போகும்பொழுது இம்மாதிரியான மாற்றத்தை ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியமில்லே என்று சொல்லி விட்டு நிலச்சீர்திருத்தத்தைப்போல் முன்னேற்றமடைய செய்கின்ற உச்சவரம்பு கட்டுதல் போன்ற முறைகள் துரிதமாக நடைபெறும் என்று தெரிவித்துவிட்டு இப்பொழுது இந்த வரியை கொண்டு வர வேண்டியதின் அவசியமென்ன ? இதனுடைய அர்த்தமென்ன ? என்றுதான் நான் கேட்க விரும்புகிறேன். கொஞ்ச காலத்திற்குள் நிலத்திற்கு உச்ச வரம்பை கட்டி விவசாயிகளுக்கு நன்மையை செய்யக்கூடிய இந்த திட்டத்தை ஒத்தி போட வேண்டுமென்ற நோக்கம் எங்களுக்கு கிடையாது என்று சொன்னுர்கள். அதை நாங்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராய் இருக்கிறோம். ஆனல் இதற்கிடையில இந்த வரிகளின் அவசியமென்ன ? கவர்னர் அவர்களது உரை

7th March 1958] [Sri M. Kalyanasundaram]

யிலும் நில உடமைக்கு உச்சவரம்பு இப்போது கட்டப்போவதில்லை. ஆனால் இனிமேல் நிலம் வாங்குவதில் உச்ச வரம்பு கட்டப்படும் என்று சொல்லப்பட்டது. அதற்கிடையில் இந்த வரியும் கொண்டுவரப்பட்டிருக்கிறது. ஆகவே இவைகளை எல்லாம் சேர்த்துக்கூட்டிப் பார்க்கும்பொழுது நில உடமைக்கு வரம்பு கட்டக்கூடிய கொள்கை இனிமேல் கால வரையின்றி ஒத்திப்போடப்படுமா என்ற ஐயம் ஏற்பட்டால் அது தவறு என்று 5–30 p.m. நான் நினைக்கவில்லை. இன்னும் நம் முதல் அமைச்சர் அவர்கள் எழுதிய ஒரு கட்டுறையை அவருடைய கட்சிப் பிரசுரங்களுள் ஒன்றில் பார்த்தேன். நிலவுடமைக்கு உச்சவரம்பு கட்டுவது அவசியமல்ல என்று அவர்கள் கூறக் கூடிய காரணத்தால் அதை நான் ஊகிக்கவேண்டியிருக்கிறது. இதையெல்லாம் சேர்த்துப் பார்க்கும்போது இந்தக் கொள்கைக்கு ஆபத்து ஏற்படுமோ, நிலச்சீர்திருத்தம் பாதி வழியில் போய்க் கொண்டிருக்கிறதே, அதை அப்படியே பாதியில் விட்டு விட்டு, அப்படியே ஒத்திப் போடப்படுமோ என்ற யோசனை தோன்றுகிறது. இந்த வரி சம்மந்தப்பட்ட மட்டில், அதற்கு எதிர்ப்பு எங்கள் பக்கத்திலிருந்து வராது என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இதற்கு எதிர்ப்பெல்லாம் நிதி அமைச்சருடைய பக்க பலமாக அமைந்திருக்கும், அவருக்குப் பின்னால் இருப்பவர்களிடமிருந்துதான் மறை முகமாகப் பல எதிர்ப்புகள் வந்தது. இதற்கு எங்கள் பக்கத்திலிருந்து வரவேற்பு உண்டு என்று சொல்லிக்கொள்கிறேன். ஆனால் ஒரு விஷயம் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். நிதி அமைச்சர் அவர்கள், தன்னுடைய 6 வருஷப் பழக்கத்தில், இப்போது கொண்டு வரக்கூடியதில் 3,000 ரூபாய் என்று ஒரு அளவு காட்டியிருக்கிறார்கள். அதாவது 3,000 ரூபாய்க்கு மேல் வருமானம் வந்தால், அதற்கு வருமான வரி உண்டு. அவர்கள் கொண்டு வரக்கூடிய காலத்திலேயே 5,000, 6,000, 7,000 என்று சொன்னால், பிறகு சபையில் உயர்த்த வேண்டியிருக்கும், எதிர்கட்சிக்காரர்களுக்காகக் கொஞ்சம் உயர்த்த வேண்டியிருக்கும், தன் கட்சிக்காரர்கள் சொல்வதற்காக அவர்களுக்கும் சலுகை காட்ட வேண்டும், ஆகையினால் 3,000 என்று வைத்தால் பிற்பாடு 5,000 ஆக மாற்றிக் கொள்ளலாம் என்று தான் இப்போது 3,000 என்று போட்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். என்னைப் பொறுத்த வரையில் நியாயமான அளவுக்கு உயர்த்துவதாயிருந்தால் அப்படி உயர்த்துவதில் ஆட்சேபணை இல்லை. அதைப் பரிசீலனை செய்ய வேண்டும் என்பது என் அபிப்பிராயம். இந்த லிமிட் எந்த அளவுக்கு இருந்தால் சரியாக இருக்கும், எப்படியிருந்தால் நிலவுடமைக்காரர்களை பாதிக்காது, உணவுப் பொருள்கள் உற்பத்தியை பாதிக்காது என்று பார்த்து அதை உயர்த்த வேண்டும், அதைப் பரிசீலனை செய்ய வேண்டுமென்பது என் அபிப்பிராயம். இந்த வரியை அடிப்படையில் நான் வரவேற்கிறேன். இந்த வரியின் காரணமாக உற்பத்தி பாதிக்கப்பட்டு விடும் என்று சொல்வது வெறும் அர்த்தமற்ற கூச்சல். வசதி இருக்கக்கூடியவர்கள் சர்க்காருக்கு வரி கொடுக்க வேண்டியது அவசியம். விலைவாசி உயர்வு காரணமாக சிறு நில உடமைக்காரர்கள் அந்தப் பலனை அனுபவிக்கவில்லை, பெரிய நிலவுடமைக்காரர்கள்தான் ஒரு வருஷ காலமாக அதன் பயனை அனுபவித்து வந்திருக்கிறார்கள். ஏழை விவசாயிகள், சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் போன்றவர்களின் வருமானம் மிக அதிகமாகச் சுரண்டப்பட்டிருக்கிறது. இந்த வரி விதிப்பது நியாயம். அதனால் உற்பத்தி பாதிக்கப்படாது. உற்பத்தி செய்பவர்கள் நிலப் பிரபுக்கள் அல்ல. சாதாரண விவசாயிகள்தான் பாடுபடுகிறார்கள். அதனால் உற்பத்திக்கு ஆபத்து ஏற்பட்டு விடும் என்ற கூச்சலுக்கு நிதி அமைச்சர் அவர்கள் நிச்சயம் அஞ்ச மாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

அடுத்தபடியாக டீஸல் எண்ணைக்குப் போடக்கூடிய வரி. இதுவும் நியாயமான வரிதான் என்று நினைக்கிறேன். நான் இந்த யோசனையை ஆதரித்துப் பேசியிருக்கிறேன். அதாவது டிரான்ஸ்போர்ட் அட்வைஸரி கமிட்டியிலேயோ, வேறு சந்தர்ப்பத்திலேயோ இந்த யோசனையை முன்னமேயே சொல்லியிருக்கிறேன். பஸ் முதலாளிகள், பெரிய முதலாளிகளாயிருந்தாலும் சரி, சிறிய முதலாளிகளாயிருந்தாலும் சரி, அதிக லாபம் அடைகிறார்கள். இப்போது பெட்ரோல் காலன் ஒன்றுக்கு 3 ரூபாய்க்கு விற்கிறது. வெளி ஜில்லாக்களில் 3 ரூபாய் 2 அணா விற்கிறது என்று

நினைக்கிறேன். இந்த எண்ணெ காலன் 1 ரூபாய் 14 அணு, அல்லது 1 ரூபாய் 13 அணுவிற்கு விற்கிறது. ஒவ்வொரு காலனிலும் ஒரு ரூபாய்க்கு மேல் மிச்சம் இருக்கிறது. இதனால் பஸ் நிர்வாகச் செலவு மைல் ஒன்றுக்கு, சராசரி ஒவ்வொரு ஆபரேட்டருக்கும், ஒவ்வொரு மைலுக்கும், இந்த டீஸல் எண்ணெ உபயோகிப்பதால் 6 அணுவிலிருந்து 9 அணு வரையில் லாபம் இருக்கிறது என்று சொன்னால் அது மிகையாகாது என்பது என்னுடைய அபிப்பிராயம். சர்க்கார் புள்ளி விவரங்களில் கூட 3 அணு, 4 அணு மிச்சம் ஏற்படுகிறது. வெளியார் நடத்துகிறவர்களுக்கு ஒவ்வொரு மைலுக்கும் லாபம் ஏற்படுகிறது. ஒரு பகுதியை சர்க்காருக்குக் கொடுக்கலாம். சர்க்கார் கொடுக்கக் கூடிய கணக்குப் படி பார்த்தால் 1 காலனுக்கு 16 மைலுக்கு மேல் போகலாம். அதனால் இந்த வரி $1\frac{1}{2}$ நயா பைசா அதிகம். சிறிய ஆபரேட்டர்களும் சரி, பெரிய ஆப்பரேட்டர்களும் சரி உற்சாகத்தோடு கொடுக்கவேண்டும், இதில் எதிர்ப்பு இருக்கக்கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த வரி போட்ட பிறகும் 1 ரூபாய் நிச்சயம் வித்தியாசம் இருக்கிறது. ஒரு ரூபாய் ஒரு அணு, 1 ரூபாய் 2 அணு வித்தியாசம் இருக்கிறது. ஆகையால் தான் இந்த வரி நியாயமான வரி என்று சொல்கிறேன். யானையை எறும்பு கடித்த மாதிரி இருக்குமே யொழிய பெரிய ஆபத்து ஏற்பட நியாயமில்லை. (ஒரு குரல் : எங்கு கடித்த மாதிரி ?) காலில் கடித்த மாதிரி என்று வைத்துக் கொள்ளுங்கள்.

அடுத்தபடியாக, ஒரு விஷயத்தை சர்க்கார் கவனத்தில் வைக்க வேண்டும். விவசாயிகள் பம்ப் செட்டுகளை உபயோகித்து வருகிறார்கள். அதற்கு இந்த எண்ணெயைத்தான் உபயோகிக்கிறார்கள். அதற்கும் இந்த வரியை விதித்தால் உற்பத்திக்கு குந்தகம் விளையும் என்பது என்னுடைய அபிப்பிராயம். அதற்கு விதி விலக்கு கொடுக்க வேண்டும். இந்த பம்ப் செட்டுகளையெல்லாம் ரிஜிஸ்டர் செய்யச் சொல்லி அவர்கள் வாங்கக் கூடிய எண்ணெக்கு ரீபண்ட் கொடுக்க சர்க்கார் யோசனை பண்ணவேண்டும். அந்த யோசனையை சர்க்கார் மசோதா கொண்டு வந்து, அது செலக்ட் கமிட்டிக்குப் போகும், அப்போது இதை யோசிக்கலாம் என்று தெரிவித்துக்கொள்கிறேன். அவர்கள் உபயோகிக்கும் பம்ப் செட்டுகளுக்கு விதி விலக்கு கொடுக்க வேண்டும் என்பது என்னுடைய திடமான அபிப்பிராயம்.

அதற்கு அடுத்தபடியாக பொழுதுபோக்கு வரி. பொழுது போக்கு வரி போடுவது நியாயமா என்பது பற்றி இரண்டுவித அபிப்பிராயங்கள் இருக்கலாம். சர்க்காருக்கு வருமானம் வேண்டும். வரி போடும்போது அந்தத் தொழில் தாங்குமா என்று பார்க்கவேண்டும். இப்போது இந்தத் தொழிலைப் பொறுத்த வரையில் இது தாங்கும் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். பொழுது போக்குக்கு வரி போடுவதா என்று மனதுக்குக் கஷ்டமாக இருக்கிறது என்று சொல்லலாம். பொழுது போக்கு மக்களுக்கு தேவை. எட்டு மணி நேரம் வேலை செய்து அந்த 8 மணி நேரத்தில் இழந்த சக்தியை மீண்டும் பெற, உடலுக்கு உணவைப்போல மனதுக்குப் பொழுது போக்கு அவசியம். மக்கள் இழந்த சக்தியை மீண்டும் பெற பொழுது போக்கு மிக்க அவசியம். இப்போதுள்ள சினிமா அதைக் கொடுக்கிறதா என்பது வேறு விஷயம். அது அவசியம் என்ற கொள்கையை உடையவன் நான். இந்த வரியினால் பாதிக்கப்படக் கூடியவர்கள் சினிமாக் கொட்டகைக்காரர்கள்தான். கதை எழுதுபவர்களோ, அல்லது படம் பிடிப்பவர்களோ அல்ல. கொட்டகை நடத்துகிறவர்கள் தான் பாதிக்கப்படலாம். அதுவும் ஒரு சிறு அளவுக்குத்தான் 20 சத விகிதத்திலிருந்து 25 சத விகிதத்திற்கு மாற்றியிருக்கிறார்கள். ஆனால் டூரிங் சினிமாக்களுக்கு அவ்வளவு லாபம் கிடையாது. சில இடங்களில் கஷ்டப்படக் கூடிய நிலையில் இருக்கிறார்கள். அவர்களுக்கு நிலையான இடம் கிடையாது. இந்த வரியை வைத்துக்கொண்டாலும் ஷோ டாக்ஸிலிருந்தாவது விலக்கு கொடுப்பது அவசியம் என்று நினைக்கிறேன். அதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு மசோதா வரும்போது அந்தக் கருத்துக்களை விரிவாகச் சொல்லலாம் என்று சொல்லிக்கொண்டு நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கக் கூடிய புதிய வரிகளைப் பற்றி என் கருத்துக்களை இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.

இந்த வரிகள் போகட்டும். மற்றப்படி நம் நிதி நிலை அறிக்கையிலே நமக்குக் கிடைக்கும் வாக்குறுதிகள் என்ன என்பதைப் பார்க்க வேண்டும். நம்முடைய திறமையான விவசாய அமைச்சர் அவர்களுடைய திறமையின் கீழ் உணவு உற்பத்தி பெருகியிருக்கிறது. கிட்டத்தட்ட 1 வருஷத்திய கணக்கில் அவர்கள் பேசியதைப் பார்க்கும்போது இப்போது உற்பத்தி இரண்டு மடங்காக ஆகிவிட்டது என்று நினைக்கிறேன். முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பித்ததிலிருந்து இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட 3-வது வருஷத்தில் ஒப்பிட்டுப் பார்க்கும்போது உணவு உற்பத்தி 28 லட்சம் டன்னிலிருந்து கிட்டத் தட்ட 48 லட்சம் டன்னுக்கு வந்திருக்கிறது என்பது அவர்கள் கூறியது ஒரு ஆறுதலான உறுதிமொழியாக இருக்கிறது. அதை நான் ஒப்புக்கொள்கிறேன். உற்பத்தி பெருகியிருக்கிறது. அந்தப் புள்ளிவிவரம் கணக்குப் பிள்ளை தயாரித்ததா, அது சரியாக இருக்குமா, அதன் அஸ்திவாரம் சரியாக இருக்குமா என்று கொஞ்சம் கூட சந்தேகப் படவில்லை. உற்பத்தி அதிகமாயிருக்கிறது உண்மையாக இருக்குமென்று நம்புகிறேன். சிறிது ஏற்றத் தாழ்வுகள் இங்குமங்கும் இருக்கலாம். ஆனால் இவ்வளவு நீர்ப்பாசனத் திட்டங்கள் பூர்த்தியான பிறகும் உற்பத்தி 5–40 p.m. பெருகவில்லையென்று சொன்னால் நீர்ப்பாசனத் திட்டங்களுக்கே அவசிய மில்லை என்று சொல்லக்கூடும். பெருவாரியான திட்டங்கள் எல்லாம் பூர்த்தியாகிவிட்டன. ஆகவே, இத்தகைய உற்பத்திப் பெருக்கத்தை நாம் நிச்சயமாக எதிர் பார்க்கலாம் என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த உற்பத்தி பல இடைஞ்சல்களுக்கிடையே அதிகரித்திருக்கிறது. அம் மோனியம் சல்பேட் உரம் 1,40,000 டன்னுக்கு, 75,000 டன் தான் கிடைத்தது. இதில் விவசாயிகளுக்குப் போனது எவ்வளவு என்று நிச்சய மாகச் சொல்ல முடியாது. கள்ளச் சாரயத்திற்குப் போன மிச்சம் தான் விவசாயத்திற்குப் போய்ச் சேருகிறது. பல கஷ்டங்கள் விவசாயிகளுக்கு இருக்கின்றன. தக்காவிக் கடனுக்காக மனுப் போட்டால், மின்சாரம் வர காலத்திலே கடன் ஸாங்ஷன் ஆகி, $1\frac{1}{2}$ வருஷம் கழித்தும் கடன் கிடைப்பதில்லை. விவசாயத்திற்கு இரவு நேரங்களில் தான் மின்சாரம் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று வேறு உத்திரவு போட்டு விட்டார்கள். பல இடங்களில் மிராசுதாரர்களின் தொந்திரவு காரணமாக போலீசுக்குச் சென்று பல கஷ்டங்களை அனுபவித்தும் கூட, விவசாயிகள் கஷ்டப்பட்டு உழைத்திருக்கிறார்கள். உற்பத்தி பெருகித்தான் இருக்கிறது. ஆகவே, விவசாயிகள் பாராட்டுதலுக்குரியவர்கள் என்பது என்னுடைய அபிப்பிரா யம்.

அதே போல், மற்ற உற்பத்திகளை எடுத்துக் கொண்டாலும், உற்பத்தி பெருகித்தானிருக்கிறது என்பதை நான் சந்தேகிக்க விரும்பவில்லை. உற் பத்தி பெருகியிருப்பதனால் தான் இப்பொழுது ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. இதனால் ஏற்பட்ட விளைவுகளைப் பார்க்க வேண்டும்.

மழை மாரியைப்பற்றி நிதி அமைச்சர் கொடுத்த புள்ளி விவரங்களில் தவறு இருக்கிறது. இதை நன்றாகப் பரிசீலனை செய்ய வேண்டும். அவர்கள் கொடுத்திருக்கிற புள்ளி விவரங்களின் குறைபாட்டைக் காட்ட வேண்டியதற்காக நான் சொல்லவில்லை. சேலம் ஜில்லாவில், திருச்சி ஜில்லாவில் வட பகுதியில், கோயம்பத்தூர் ஜில்லாவில் ஒரு வருஷ காலமாக ஒரு அங்குல மழைகூடப் பெய்யவில்லை. சில பிரதேசங்களை ''வறண்ட பிரதேசங்கள்'' என்று declare செய்யவேண்டுமென்று கலெக் டர்கள் யோசனை அனுப்பியிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். அந்த அளவு மழை மாரி இருந்திருப்பதன் தகவலை பரிசீலனை செய்ய வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன். இப்பொழுது மற்ற விஷயங்கள் எப்படி யிருக்கிறதென்று பார்க்கலாம்.

பட்ஜெட்டின் அஸ்திவாரம் என்ன ? இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத் தில் மூன்றாவது ஆண்டு வரவிருக்கிறது. அந்த சமயத்தில் வந்திருக்கும் பட்ஜெட் இது. அதிலே நாம் பார்க்கக்கூடியது என்னவென்றால் 62 கோடி சொச்சம் வரவு, 63 கோடி சொச்சம் செலவு என்றிருக்கிறது. உணவு உற்பத்தி பெருகியிருக்கிறது, பல வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன, ஹரிஜனங்களுக்காக இவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது என்றெல் லாம் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வளவு பணம் செலவழித்ததில்

[Sri M. Kalyanasundaram] [7th March 1958

ரூபாய்க்கு 8 அணு ஆவது பொது மக்களுக்குப் போய்ச் சேர்ந்திருக்கும் என்பது எனது நம்பிக்கை. ரூபாய்க்கு 16 அணு போய்ச் சேராவிட்டாலும் ஒரு பாகமாவது போயிருக்கும். முன்னேற்றம் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் முன்னேற்றம் எத்தகைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தக் கூடிய பாதையில் எந்த அளவுக்குப் போயிருக்கிறதென்பதை அமைச்சரவர்கள் விருப்பு வெறுப்பு இல்லாமல் பார்க்க வேண்டும். இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் கொடுத்திருக்கக்கூடிய லட்சியங்களை, ஆங்கிலத்திலிருப்பதை, நான் தமிழிலே மொழி பெயர்த்துப் படிக்கிறேன். முன்பு தேசீய வருமானத்தைக் கணிசமான அளவு அதிகரித்து, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது ; கனரக இயந்திரத் தொழில்களை அபிவிருத்தி செய்யும் நோக்கத்துடன் தொழில் அபிவிருத்தி செய்ய வேண்டும். மூன்றுவது நோக்கம் என்னவென்றால், வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்கு வேண்டி, அதிக பட்ச ஜனங்களுக்கு வேலை கிடைக்கக் கூடிய வாய்ப்புகளை உண்டாக்குவது. நான்காவது, எல்லாவற்றையும் விட முக்கியமானது என்னவென்றால், சொத்து உடமையிலும், வருமானத்திலும் ஏற்றத்தாழ்வுகளைக் குறைத்து, பொருளாதார சக்தியை (economic power-ஐ) சமமாகப் பங்கிடுவது. அதாவது, நிலப் பிரபுக்களுக்கும், விவசாயிகளுக்கும், தொழிலாளிகளுக்கும், முதலாளிகளுக்குமிடையே, சமமாக பொருளாதார சக்தியைப் பங்கிடுவது எல்லாவற்றையும் விட முக்கியமான நோக்கம்.

இந்த நான்கு நோக்கங்களிலிருந்து பார்க்கும்பொழுது, எந்த அளவுக்கு இந்த உற்பத்தி உயர்வு பலனைக் கொடுத்திருக்கிறது என்பதை கவனிக்க வேண்டும். தொழிலாளிகளுக்கும், விவசாயிகளுக்கும், மற்றும் ரொக்க சம்பளம் பெறக்கூடிய மற்ற ஊழியர்களுக்கும் எந்த அளவு பலன் கிடைத்திருக்கிறது என்பதைப் பார்த்தால் நாம் பெரும் அளவுக்கு ஏமாற்றம் அடைய வேண்டியிருக்கிறது. இந்த விஷயத்தில் சர்க்கார் கொள்கையில் பெரும் குறைபாடுயிருக்கிறது. உற்பத்தி பெருகினாலும் சரி, வருமானம் அதிகரித்தாலும் சரி, தேசபக்தி பெருக்கெடுத்தாலும் சரி, தேசம் முன்னேறுவது சாத்தியமல்ல. உற்பத்திப் பெருக்கினால் ஏற்படக் கூடிய பலன் மக்களுக்குப் போய்ச் சேர முடியாது என்ற உண்மையைப் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. விளைச்சல் அதிகமாகயிருந்தும், 1957-ல் உணவுப் பொருள்களின் விலை ஏறுமுகமாகயிருந்தது என்று கவலையோடு சொல்லுகிறார்கள். 1956 ஜூலையில் மொத்த விலைவாசிப் புள்ளி 377 ஆக யிருந்தது. படிப்படியாக உயர்ந்து சென்ற டிசம்பர் மாதத்தில் 512 ஆக இருந்தது. இப்பொழுது 4 புள்ளி குறைந்திருக்கிறது என்று விவசாய அமைச்சரவர்கள் சொன்னார்கள். எனக்குக் கிடைத்த தகவல் மூன்று புள்ளி குறைந்திருக்கிறது என்று. இரண்டுக்கும் அதிக வித்தியாசமில்லை 512-லிருந்து 4 புள்ளி குறைந்திருக்கிறதென்றால் இப்பொழுது 508 ஆக யிருக்க வேண்டும். ஐந்நூறு என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். 1956 ஜூலை மாதத்தில் இருந்ததற்கும், 1958 பிப்ரவரியில் இருப்பதற்கும் எவ்வளவு வித்தியாசமிருக்கிறது ? இந்த $1\frac{1}{2}$ வருஷ காலத்தில் இந்த உயர்வினால் பலன் அடைந்தவர்கள் யார், பாதிக்கப்பட்டவர்கள் யார் ? உற்பத்தி பெருகியதன் பலன் என்னவென்றால் பிழைக்கக்கூடிய மக்களிடத்தில் பட்டினி அதிகமாயிற்று. இந்த மாதிரி ஒரு கொள்கையை நமது சர்க்கார் கடைப்பிடிக்கலாமா என்பதை சிந்தித்துப் பார்க்கும்படி நிதி அமைச்சரவர்களை கேட்டுக் கொள்கிறேன். "நான் ஒருவன் மட்டும் என்ன செய்கிறது" என்று சொன்னால் பிரயோஜனமில்லை. எல்லா ராஜ்ய நிதி அமைச்சர்களும் சேர்ந்து மத்திய சர்க்காரின் கொள்கையை மாற்றாத வரையில், இந்த ஐந்தாண்டுத் திட்டத்தின் லட்சியங்கள் நிறைவேறுவதற்கு மற்ற வசதிகளைச் செய்யாத வரையில், இந்த உற்பத்திப் பெருக்கினால் ஏற்படக் கூடிய பலனை நாம் அனுபவிக்க முடியாது. விலைவாசி உயர்வு இந்த நிலையிலிருக்கும்போது ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகளின் சம்பளம் போதவே போதாது. போன வருஷம் ரூ. 12 கொடுத்தாலும் கூட, அந்த ரூபாய் எந்த மூலைக்கு ? "புள்ளி விவரம் கிட்டத்தட்ட 135 பாயிண்டு உயர்ந்திருக்கிறதே, அதற்கு என்ன செய்திருக்கிறீர்கள்" என்று அவர்கள் கேட்கிறார்கள். இது மிக

வும் நியாயமான கோரிக்கை. இப்படியிருக்கும்போது, மத்திய சர்க்கார் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் போட்டாலும் சரி, இரண்டாவது **Pay Commission**-ஐ ஏற்படுத்தினாலும் சரி, அதனால் பலன் ஏற்படுமென்று நான் நினைக்கவில்லை. சர்க்கார் போடும் திட்டங்களை நிறைவேற்றுவது யார் ? இப்பேர்ப்பட்ட சர்க்கார் சிப்பந்திகள் மூலமாகத்தான் திட்டங்கள் நிறைவேற வேண்டும். அவர்களிடத்தில் இம்மாதிரி உற்சாகக் குறைவு இருக்குமேயானால், இப்பேற்பட்ட மனக்கசப்பு இருக்குமேயானால், என்ன நிலைமை ஏற்படுமென்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும். விலைவாசி உயர்வுப் புள்ளியை சர்க்கார் தயாரிக்கிறது. **Cost of living index** புள்ளி விவரத்தையும் சர்க்கார் தயாரிக்கிறது. இதில் பல குறை பாடுகள் இருக்கின்றன என்று புகார் சொல்லப்படுகிறது. அந்தக் கணக் கைப் பார்த்தாலும் கூட, சென்னையைப் பொறுத்த வரையில் வாழ்க்கைச் செலவு உயர்ந்து கொண்டே வந்திருக்கிறது. பட்டணம் படிக்கு 1 ரூபாய் கொடுத்தால் தான் அரிசி கிடைக்கிறது. இன்னும் விறகு விலையை எடுத்துக் கொண்டால், சென்ற ஒரு வருஷ காலமாக டன் ஒன்றுக்கு ரூ. 55-லிருந்து 60 ரூபாய் வரை ஒட்டு மொத்தமாக விற்கப்படுகிறது. சாதாரண தொழிலாளர்களும், சர்க்கார் சிப்பந்திகளும் 1 குண்டு விறகுக்கு ரூ. 2-0-0, அல்லது ரூ. 2-2-0 கொடுத்தால் தான் நல்ல விறகு கிடைக்கிறது. மோசமான விறகு ரூ. 1-12-0 அல்லது ரூ. 1-14-0-க்குக் கிடைக்கிறது. இப்படி ஜனங்கள் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். (உதவி சபாநாயகர் தலைமை வகித்தார்) 90 லக்ஷம் பேருக்கு வேலை கொடுக் கிறோம் என்ற லக்ஷியத்தைப் படிக்கும்போது இனிமையாகத்தான் இருக்கி றது.

கைத்தறியைப்பற்றி, சட்ட சபையில் பல முறை, பல அங்கத்தினர்கள், கட்சி வேறுபாடு இன்றி நிலைமையை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். 5–50 p.m. அப்படி யிருந்தும் 2½ லக்ஷம் ரூபாய்க்கு துணி தேங்கி இருக்கிறது. கைத் தறி துணிக்கு கொடுக்கும் ரிபேட்டை குறைத்ததினால் மட்டும் துணி தேங்க வில்லை. ரிபேட் குறைப்பதற்கு முன்பிருந்தே தேக்கம் அப்படியேதான் இருந்து கொண்டிருக்கிறது. பொங்கலின் போது தாற்காலிகமாக இரண் டணா ரிபேட் கொடுத்தார்கள். அப்பொழுது செலவழிந்ததற்கு பிறகும் தேக்கம் இருக்கிறது. இன்று காலையில் சொஸைட்டி அதிகாரிகளைக் கண்டு இதைப்பற்றி பேசிக்கொண்டிருந்தேன். புள்ளி விவரப்படி 2½ கோடி ரூபாய் பெறுமான கைத்தறி தேங்கியிருப்பதாக கூறினார்கள். கோயம் புத்தூரில் 3,000 தொழிலாளருக்கு "**Lay off**" அதாவது வாரத்திற்கு 2 அல்லது 3 நாட்களுக்கு மட்டும் வேலை, மற்ற நாட்களில் வேலை இல்லாமல் இருக்கிறார்கள். ஏழு மில்களில் ராத்திரி ஷிப்டை குறைக்க வேண்டும் என்று நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். அகமதாபாத் மில் களிலும் நைட் ஷிப்ட் (**Night shift**)-ஐ குறைக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். இப்படி இருக்கும்போது 90 லக்ஷம் பேர்களுக்கு எப்படி வேலை கொடுப்பது. பொதுவாக சில கிராம சேவக்குகளையும், மற்றவர்களையும் கம்யூனிட்டி டெவலப்மென்ட் பகுதிகளில் வேலைக்கு அமர்த்தியிருக்கலாம். ஏற்கனவே வேலையில் இருப்பவர்களை நிரந்தர மாகச் செய்வதற்கு பதிலாக, சில ஆட்களுக்கு புதிய வேலைகள் கொடுப்ப தால் உற்பத்திப் பெருக்கம் ஏற்பட முடியுமா என்பதை அமைச்சர் அவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். விலைவாசிகளின் உயர்வைப் பற்றி நிதி மந்திரி அவர்கள் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்.

"உணவுப் பொருள்களில் குறிப்பிடத் தக்க பற்றாக் குறையின் காரண மாக இந்தத் திடீர் உயர்வு ஏற்படவில்லை என்பது நிலைமையை ஆராயும் போது இப்பொழுது தெளிவாகிறது".

மூன்று வருஷங்களுக்குப் பின் இப்பொழுதுதான் அவருக்குத் தெரிந் தது போலும். உணவு பற்றாக்குறை காரணமாக உயர்வு ஏற்படவில்லை என்பதை நானும் ஒப்புக் கொள்கிறேன். பின் இதற்குக் காரணம் என்ன ? விவசாய உற்பத்தி பெருகத்தான் வேண்டும். நம்முடையத் தேவையை பூர்த்தி செய்த பிறகு, வெளி நாட்டு செலாவணி பெரும் வகையிலும் உற்பத்தி செய்ய வேண்டும். சர்க்கரை, கடலை முதலிய

பொருள்களை வெளி நாட்டுக்கு ஏற்றுமதி செய்து நமக்குத் தேவையான யந்திரங்களைப் பெறவேண்டும். உணவு பற்றுக்குறைக்கு கேரளாவுக்கு அரிசி போவது காரணம் அல்ல, நான் திருச்சிருப்பள்ளியில் இருக்கக்கூடிய வன். தஞ்சாவூரிலிருந்து குருவை நெல்லை தருவித்து, இரண்டு தரம் வேகவைத்து, மணச்சநல்லூர் மார்க்கமாக அனுப்புவது வழக்கம். இந்த அரிசியை கேரள மக்கள் அதிகமாக விரும்புகிறார்கள். நம் தமிழ் நாட்டில் இதை யாரும் சாப்பிடக்கூட மாட்டார்கள். இந்தக் குருவை நெல் 90 நாள் பயிர். இது 70 அல்லது 75 நாட்களிலேயே அறுவடை செய்யக்கூடியதாக இருக்கும். இந்த அரிசி, மாமிச ஆகாரத்திற்கு மிகவும் பொருத்தமாய் இருப்பதால் கேரள மக்கள் விரும்புகிறார்கள் என்று சொல்லுகிறார்கள்.

கேரளாவில் இன்று கம்யூனிஸ்டுகள் ஆட்சியை நடத்தினாலும், காங்கிரஸ் ஆட்சியை நடத்திய காலத்திலும் கூட, ஆந்திரா பிரிவினைக்கு முன்பும், ஆந்திரா, தமிழ், கேரள மக்கள் ஒற்றுமையாக இருக்க வேண்டும் என்ற கொள்கையை வைத்துத்தான் சட்ட சபையில் நாங்கள் வேலை செய்து கொண்டு வந்து இருக்கிறோம். தமிழ் நாட்டுக்கு தண்ணீர் கிடைக்கக் கூடாது, பரம்பிக்குளம் திட்டம் வெற்றி அடையக் கூடாது என்று பிரசாரம் செய்யக் கூடிய சக்திகள் அங்கு இருக்கலாம். தமிழ் நாட்டுக்கும், கேரள சர்க்காருக்கும் இடையே நல்லுறவு ஏற்பட இரு ராஜ்ய மக்களுக்கும், நல்ல முறையில், முன்னேற்றம் ஏற்படக் கூடிய வகையில், பரம்பிக்குளம் திட்டமும், மேல் பெரியாறு திட்டமும் வெற்றி அடைய வேண்டும். கேரளாவில் இருக்கும் கம்யூனிஸ்டு மந்திரி சபை அங்கு இருக்கக்கூடிய பல அரசியல் நெருக்கடிகளுக்கு மத்தியில், கட்சி வேறுபாடு இன்றி, பரம்பிக்குளத் திட்டத்தில் சீக்கிரமாக உடன்பாடு ஏற்பட்டு, வெற்றிகரமாக முடியவேண்டும் என்ற ஆவலைப்பார்த்து நான் பெருமைப்படுகின்றேன். விரைவிலேயே நல்லுறவு வளர்ந்து, இந்தப்பிரச்சினை தீர்க்கப்படவேண்டும் என்பதே என்னுடைய அபிப்பிராயம்.

**DEPUTY SPEAKER** : The hon. Member has got two minutes more.

**Sri M. KALYANASUNDARAM** : May I take some more time.

**DEPUTY SPEAKER** : Yes.

**Sri M. KALYANASUNDARAM** : உணவு உற்பத்தி இருந்தும் பற்றுக் குறைக்கு காரணம் என்ன. கேரளாவிற்கு அரிசி அனுப்புவதால் அல்ல என்று சொல்லி இருக்கிறார்கள். பின் அதற்கு காரணம் என்ன. ஏன் அதை ரகசியமாக வைத்துக் கொள்ள வேண்டும். இதைப்பற்றி நிதி அமைச்சருக்கு நிச்சயமாக தெரிந்திருக்கும். விவசாய அமைச்சருக்குக் கூட இதைப்பற்றி தெரிந்து கொள்ளக் கூடிய சக்தி இருக்கிறது. அவரிடம் Special Branch Police இருக்கிறது. இன்று கொடுத்த அறிக்கையில் கூட மலிவு தான்யம் கொடுக்க அவசியம் இல்லை என்றார். மலிவு தான்யம் கொடுக்க வேண்டும் என்ற கிளர்ச்சி எங்கேயும் காணோம் ; ஆனால் சட்ட சபையில் மட்டும் சில அங்கத்தினர்கள், அரசியல் காரணங்களுக்காக, இவைகளை நீடிக்க வேண்டும் என்று சொல்வதாகக் குறிப்பிட்டார். மலிவு தான்யங்களை நிறுத்திவிட்டால் நிலைமை என்ன ஆகும் என்று நாம் நன்றாக சிந்தித்துப் பார்க்க வேண்டும். பிரசாரத்திற்காக இதை சொல்வதாக நாம் நினைக்கக்கூடாது. மலிவு தான்ய கடைகள் கிடையாது என்று சொன்னால் உணவுப் பொருள்களை கடன் வாங்கியாவது சேமித்து கொண்டு விடுவார்கள். அதனால் விலைவாசிகள் ஏறிவிடும். இப்பொழுது மொத்தக்குறியீட்டில் 4 புள்ளிகள் குறைந்திருப்பதாகவும் இன்னும் அறுவடையானால் மேலும் குறையும் என்று சொல்லியிருக்கிறார். இந்தச் சமயத்தில் மலிவு தான்யக் கடைகளை மூடிவிட்டால் உணவு தான்யங்களின் நிலைமை என்ன ஆகும்.

7th March 1958] [Sri M. Kalyanasundaram]

நமது ராஜ்யத்தில் உணவு தானியங்களின் விலைவாசி அதிகமாக இல்லை என்று கனம் அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார். அப்படி அதிகமாக இல்லை என்பதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது. உணவு தானியம் அதிகப்படியாக விளைந்திருக்கிறது என்று சொல்லுகிறார்கள். அப்படி இருந்தும் விலைவாசி அதிகமாக இருப்பதற்குக் காரணம் என்ன ? அந்த தானியங்கள் எல்லாம் எங்கே போச்சு ? அதற்கு வேண்டிய புள்ளி விவரங்களைக் கொடுக்க வேண்டாமா ? அதிலுள்ள ரகசியம் என்ன ? அதிகப்படி உற்பத்தியான பொருள் எங்கே போச்சு என்று கேட்கிறேன். இதை முக்கியமாக நிதி அமைச்சர் அவர்கள் கவனிக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அவர் நாஷனல் டெவலப்மெண்ட் கவுன்சிலுக்குப் போகக் கூடிய சமயத்தில் இதைப்பற்றி அவர் அங்கு வலியுறுத்த வேண்டும். நாம் இப்பொழுது திட்டங்களைப் போட்டு விட்டோம். மக்களுக்கு ஆசையைக் காண்பித்து விட்டோம். பணம் கொடுக்க மாட்டேன் என்று சொல்லுகிறார்களாம். நாமே போட்ட திட்டங்களை நிறைவேற்ற வேண்டும் என்று ப்ளானிங் கமிஷனிடம் சொல்லி அதற்குத் தக்க நடவடிக்கையை எடுத்துக் கொள்ள வேண்டும். நம்முடைய நிதி நிலைமை என்ன, அதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்று சொல்ல வேண்டும். 6-00 p.m.

கடந்த ஐந்தாண்டு திட்ட காலத்தில் நாம் நோட்டு அச்சடிக்கக் கூடிய திட்டம் இருந்தது. இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் அப்படிப் பட்ட திட்டம் இல்லை. முதல் ஐந்தாண்டு திட்ட காலத்தில் பண நெருக்கடியை சமாளிக்க **deficit financing** என்று சொல்லுவார்கள், அதற்கு சரியான தமிழ் எனக்கு தெரியாது, நோட்டு அச்சடிப்பது என்று தான் சொல்லலாம், அப்படிச் சொன்னால் தப்பு அர்த்தம் செய்து கொள்ளக்கூடாது, அதற்குக் கேவலமான அர்த்தம் எடுத்துக் கொள்ளக்கூடாது, நோட்டு அச்சடித்து அதன் மூலம் அந்த **deficit financing**-கை சமாளித்துக்கொள்ளலாம் என்று திட்டம் போட்டிருந்தார்கள். அப்படி நோட்டு அச்சடிப்பதில் தவறு ஒன்றும் இல்லை. அதனால் பண வீக்கம் ஏற்பட்டு விடுமோ என்றும் நினைக்க வேண்டியதில்லை. நான் படித்த பொருளாதார சாஸ்திரத்தில் அப்படி நோட் அச்சடிப்பது தவறு இல்லை என்று சொல்லப் பட்டிருக்கிறது. அதனால் நாம் எவ்வளவு நோட் அச்சடித்தாலும் அதனால் பண வீக்கம் ஏற்பட்டு விடாது. உற்பத்தி பெருகிக் கொண்டிருக்கும் இந்த நாளில் நோட்டை அச்சடித்தால் எந்த விதமான ஆபத்தும் வந்துவிடப் போவதில்லை. அப்படி நோட்டு அச்சடித்து ஐந்து கோடி ரூபாய் அதிகமாகக் கொண்டு வந்து அதன் மூலமாக நாம் திட்டங்களை நிறைவேற்றிக்கொள்ளலாம். இதைப்பற்றி கூட கமிஷனிடம் சுட்டிக்காட்டப்பட்டிருக்கிறது.

மற்றும் இந்த திட்டங்களை நிறைவேற்ற இரண்டு அம்சங்களைப்பற்றி வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். இன்றைய நிலைமையில் விலைவாசிகள் உயர்ந்துகொண்டிருக்கின்றன. விலைவாசி உயர்ந்து கொண்டு வருவதை நாம் தடுக்க வேண்டும். இதே நிலைமையில் வியாபாரிகளுடைய நிலைமையையும் நாம் கவனிக்க வேண்டும். மற்றொன்று பண வீக்கத்தை நாம் " செக் " பண்ண வேண்டும். அதனால் எந்த விதமான ஆபத்தும் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். நாம் 1,200 கோடி ரூபாய் நோட் அச்சடிக்கலாம் என்ற யோசனையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அதிகப்படியாக அச்சடிக்கப்பட்ட பணம் எங்கே போகிறது, அவைகள் எல்லாம் ஷெட்யூல்ட் பாங்குகளுக்குப் போகின்றன. அந்த பாங்குகள் அந்தப் பணத்தை வைத்துக்கொண்டு உணவு சூதாட்டம் ஆடுகிறார்கள். அவர்கள்தான் தனிப்பட்டவர்களுக்கு பண உதவி செய்கிறார்கள். ஆனால் அவர்கள் அரசாங்கத்திற்கு அந்த உதவியைச் செய்வதில்லை. நமது தொழில் மந்திரி அவர்கள் என்ன சொல்லுகிறார் என்றால் பஸ்களை அதிகமாக விடவேண்டும் என்றும், அப்படி அதிகப்படியான பஸ்களை வாங்குவதாக இருந்தால் பணம் இல்லை என்றும், பணத்திற்கு எங்கே போவது என்றும் கேட்கிறார். ஆனால் ஒரு தனிப்பட்ட முதலாளி ஏதாகிலும் ஒரு தொழில் ஆரம்பிக்க வேண்டும் என்று சொன்னால் அவனுக்கு எப்படியோ பணம் கிடைத்து விடுகிறது. இந்த ஷெட்யூல்ட் பாங்குகள்

[Sri M. Kalyanasundaram] [7th March 1958

அவனுக்கு தாராளமாக பணம் கடனைக் கொத்து உதவுகிறது. அதனால் நான் என்ன சொல்லுகிறேன் என்றால் எப்பொழுது தனிப்பட்டவர்களுக்கு பணம் கொடுக்க முடிகிறதோ அதேபோல் ஏன் அந்த பாங்குகள் சர்க்காருக்கும் கொடுக்கக்கூடாது என்பதைப் பார்க்க வேண்டும். ஆகவே அந்த பாங்குகளையெல்லாம் தேசீய மயமாக்கி விட்டால் நமக்கு வேண்டிய அளவு பணம் கிடைக்கும் அல்லவா ? ஆகவே பாங்குகளை நாம் தேசீய மயமாக்கினால் நாம் எவ்வளவு நோட்டுகள் அச்சடித்துக்கொண்டு போனாலும் எந்த விதமான ஆபத்தும் வரப் போவதில்லை. நாம் அச்சடிக்கும் பணத்தை அவர்கள் எடுத்துக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக நமக்குக் கிடைக்க வசதி ஏற்படும். இப்படி தேசீய மயமாக்கினால் நாம் விலைவாசியைக் கட்டுப்படுத்தலாம், அதன் மூலம் விவசாயிகளுக்கு கொஞ்சம் நஞ்சம் வருமானம் கிடைக்கும்படியாகச் செய்யலாம். பாங்குகளை தேசீய மயமாக்காமல் நாம் நோட்டுகளை அச்சடித்துக்கொண்டே போனால் ஆபத்து தான் ஏற்படும். நாம் இப்பொழுது சோஷலிஸத்தை அமைக்கப் போகிறோம் என்று சொல்லிக் கொண்டும் மற்றும் பல அபிவிருத்தி வேலைகளை நடத்தப் போகிறோம் என்று சொல்லிக்கொண்டிருக்கும் இந்த நேரத்தில் பாங்குகளை தேசீயமயமாக்குவதுதான் நல்லது. அதே ரீதியில் நான் இரண்டொரு விஷயங்களை மட்டில் தெரிவித்துக் கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன். இன்னும் இரண்டொரு நிமிஷங்கள் பேசுவதற்கு அனுமதி கொடுத்தால் அந்த யோசனைகளைக் கூறிக்கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

உணவு தானியங்களின் விஷயமாக ஒரு திட்டத்தை வகுக்க வேண்டும். அப்படிச் சொல்லும்போது நான் உணவு தானியங்களை கன்ட்ரோல் செய்ய வேண்டும் என்று சொல்லவில்லை. நான் சொல்வதெல்லாம் சர்க்கார் கொள்முதல் நடவடிக்கையில் ஈடுபட வேண்டும். அதிகப்படியாக விவசாயிகள் உணவு பொருள்களை வைத்துக் கொண்டிருந்தால் அவர்களுடைய தேவைக்கு வைத்து விட்டு பாக்கியை சர்க்காரே கொள்முதல் செய்ய வேண்டும். அப்படி கொள்முதல் செய்து விலைவாசிகள் ஒரே நிலையில் இருக்கும்படியாகச் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் விலைவாசிகள் ஒரே நிலையில் இருக்கும். ஆனால் இப்பொழுது எப்படி இருக்கிறது ? விலைவாசிகள் திடீரென்று உயருகிறது, திடீரென்று இறங்குகிறது. இப்படி ஏறுவதும் இறங்குவதுமாக இருந்தால் அது பெரிய ஆபத்து. இப்பொழுது இந்த ஒரு வருஷத்தில் ஆறு மாதங்களுக்குள் விலைவாசிகள் திடீரென்று இறங்கியும் உயர்ந்தும் இருப்பதை நாம் பார்க்கலாம். இது ரொம்பவும் ஆபத்தானது. இது விவசாயிகளை பாதிக்கக்கூடியதாக இருக்கும். இதற்கு உதாரணமாக ஒன்றை கவனிக்கலாம். இப்பொழுது வெல்லத்தின் விலை ஒரேயடியாகக் குறைந்து போயிருக்கிறது. ஆனால் சர்க்கரையின் விலை குறையவில்லை, உயர்ந்திருக்கிறது. மணங்கு 5 அல்லது $4\frac{1}{2}$ ரூபாய் என்று விற்கப்பட்ட வெல்லம் இப்பொழுது மணங்கு ஒன்றுக்கு 2 அல்லது $2\frac{1}{2}$ என்று விற்கப்படுகிறது. ஆனால் சர்க்கரையின் விலை உயர்ந்தே தான் விற்கப்படுகிறது. வெல்லத்தின் விலை திடீரென்று குறைந்ததற்கு காரணம் என்ன ? வெல்ல ஆலைகளுக்கு கரும்பு கிடைக்க வில்லை. வெல்லம் குறைவாக விற்கப்படுவதால் அந்த ஆலைக்குக் கரும்பைக் கொண்டு வரக்கூடிய செலவுக்குக் கூட அந்த வெல்லத்தின் விலை கட்டுபடியாகவில்லை, அதனால் வெல்ல ஆலைகளுக்கு கரும்பு சப்ளை செய்யாமல் அதிகப்படியாக விற்கப்படும் சர்க்கரை ஆலைகளுக்கு கரும்பை சப்ளை செய்து வருகிறார்கள். கரும்பாலைகளில் நிச்சயமாக கரும்பை எடுத்துக் கொள்வார்கள் என்று அங்கே கொண்டு போய்க் கொடுக்கிறார்கள். ஆகவே இதையெல்லாம் கணக்கில் எடுத்துப் பார்க்கவேண்டும். ஏற்கெனவே நாம் வெல்லத்தை ஏற்றுமதி செய்துகொண்டிருந்தோம். இந்த விலைவாசியின் சூதாட்டத்தின் காரணமாக அந்த ஏற்றுமதி இப்பொழுது நடைபெறவில்லை. ஆகவே சர்க்கார் உணவு தான்யங்களைக் கொள்முதல் செய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டும். சர்க்கார் வியாபாரம் செய்வதால் கெடுதல் இல்லை. ஆனால் சொல்லலாம் அதிகாரிகள் சரியாக நடந்துகொள்ள மாட்டார்கள் என்றும், பல ஊழல்கள் வரும் என்றும். ஆனால் நான் சொல்லுவேன் அதிகாரிகள் எடுத்து

7th March 1958] [Sri M. Kalyanasundaram]

நடத்தும் வேலையில் வரக்கூடிய ஆபத்தை விட இப்பொழுது நடைபெற்று வரும் வேலையில் விவசாயிகளுக்கும், பொது மக்களுக்கும் அதிகப்படியான ஆபத்து வருகிறது என்று. ஆகவே அதிகாரிகளிடம் ஒப்படைத்து அதன் மூலம் வியாபாரம் செய்வதில் எந்த விதமான ஆபத்தும் வந்துவிடப் போவதில்லை. ஆகவே அரசாங்கம் உணவு தானியங்களைக் கொள்முதல் செய்து பொது மக்களுக்கு சப்ளை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதிகாரிகள் லஞ்சம் வாங்கினார்கள் என்றோ அல்லது ஊழல்களில் ஈடுபட்டார்கள் என்றோ புகார்கள் வந்தால் அதைப்பற்றி நாம் கண்காணித்துக் கொள்ளலாம். ஆகவே அதிகாரிகளை நம்பி இந்தக் காரியத்தில் சர்க்கார் ஈடுபடலாம். சர்க்கார் எடுத்து நடத்தும் வேலைகளில் ஊழல்களே இருக்காது என்று சொல்ல முடியாது. ஆகவே அதிகாரி களை நம்பித்தானாக வேண்டும்.

இப்பொழுது போலீஸ் விசாரணை நடந்து கொண்டு வருகிறது. அது சம்பந்தப்பட்ட போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரை ஏன் சஸ்பெண்ட் செய்திருக் கக்கூடாது ? அவரை சஸ்பெண்ட் செய்து வைத்திருக்க வேண்டியதவசியம் இல்லையா ? அவர் பேரில் முக்கியமான பயங்கரமான குற்றம் சாட்டப்பட்டு விசாரணை நடத்தி வருகிறார்கள். அந்த நேரத்தில் அவர்களை உத்தி யோகத்தில் வைத்துக் கொண்டிருந்தால் மந்திரி சபையின் மீதும், மந்திரி கள் மீதும் என்ன நம்பிக்கை பொது ஜனங்களுக்கு ஏற்படும் என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும். அந்த விஷயம் கோர்ட்டு விசாரணையில் இருப்பதால் அதைப்பற்றி அதிகமாக பேசப்போவதில்லை. போலீஸ் மானி யம் வரப்போகிறது, அப்பொழுது அதைப்பற்றி அதிகமாக பேசலாம் என்றிருக்கிறேன். அதற்குள் அந்த விசாரணையும் முடிந்துவிடும்.

அடுத்தபடியாக நிலச் சீர்திருத்தத்தை சீக்கிரம் பார்த்துச் செய்ய வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். ஏற்கெனவே செய்த இரண்டு சட்டங்களின் பயனை விவசாயிகள் அனுபவிக்க முடியாமல் இருக் கிறார்கள். இன்னும் மிராசுதாரர்கள் விவசாயிகளிடமிருந்து முச்சலிக்கா எழுதி வாங்கிக்கொண்டுதான் வருகிறார்கள். இப்படிப்பட்ட நிலைமை திருச்சியில் மட்டும் இல்லை, மதுரை, திருநெல்வேலி, சேலம் முதலிய இடங் களிலிருந்தும் புகார்கள் நிறைய வந்து கொண்டிருக்கின்றன. நில வெளி யேற்றம் நடந்து கொண்டுதானிருக்கிறது. ஆகவே மிராசுதாரர்களுக்கு போலீஸ் உதவி செய்யாமல் இருக்கும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த சட்டங்களை அமுல் நடத்தும்போது அவர்களுக்கு போலீஸ் உதவி கொடுக்காமல் இருக்கும்படியாக மந்திரிகளை கேட்டுக் கொள்ளுகிறேன்.

உணவு உற்பத்தி பெருக வேண்டுமானால் ராஜ்ய சர்க்கார் நிலச் சொந்தக்காரர்களுக்கு போலீஸ் உதவி அளிக்காமல் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் விவசாயிகளுக்குக் கிடைக்க வேண்டிய தானியம் கிடைக் கும். அவர்களும் ஊக்கத்துடன் விவசாயம் செய்வார்கள். இப்படி பல யோசனைகளைச் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. அதற்கு வேண்டிய காலம் இல்லாததால் இரண்டொன்றை மட்டும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

நாம் கன ரகத் தொழில்களுக்குப் போக வேண்டியதில்லை. நாம் இப்பொழுது நெய்வேலி திட்டத்தைப் போட்டிருக்கிறோம். அதற்குச் செலவு செய்யப்பட்ட பணத்திற்கு வட்டி வருமோ வராதோ ? மின்சாரம் நம்மிடம் இருந்தது. அதையும் நாம் இப்பொழுது ஒரு போர்டினிடம் கொடுத்து விட்டோம். அதற்கு நாம் போட்ட பணத்திற்காவது வட்டி வருமோ வராதோ என்று தோன்றுகிறது. அதன் மூலமாக நமக்கு ரெவினியூ வந்ததும் நம்முடைய கையிலிருந்து போய் விட்டது. அதற்கு வரவேண்டிய வட்டிக் கணக்கை எழுதி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அது வருமோ வராதோ தெரியவில்லை. ஆகவே நமக்கு வருவாய் வரக் கூடிய அநேகம் தொழில்கள் எல்லாம் நம்மை விட்டு போய்க் கொண் டிருக்கின்றன. அலுமினியம் ப்ளாண்ட் வைக்க முடியாது என்று சொல்லு கிறார்கள் அதிலிருக்கக்கூடிய கஷ்டம் தெரியும். உருக்குத் தொழில் இருக்கிறது. அதில் இருக்கும் கஷ்டத்தையும் ஒப்புக் கொள்கிறோம். ஆகவே திட்டங்கள் போடுவதற்கு முன் அவைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்ய

[Sri M. Kalyanasundaram] [7th March 1958

வேண்டும். ஆகவே சிறு தொழில்களை சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும். பஸ் தொழிலை எடுத்து நடத்துகிறார்கள். அதில் பல குறைபாடுகள் இருந்தாலும் அதன் மூலம் சர்க்காருக்கு வருஷத்திற்கு 23 லட்சம் ரூபாய் வருமானம் வருகிறது. நமக்கு வருமானம் வரக்கூடிய சிறு தொழில்களை சர்க்காரே என் எடுத்து நடத்தக்கூடாது என்று கேட்கிறேன். இரண்டு மூன்று வருஷங்களாக பேப்பர் தொழிலைப்பற்றிச் சொல்லிக் கொண்டு வந்தோம். அதையும் காணோம். நம் ராஜ்யத்தில் எண்ணெ சுத்திகரிப்பு தொழிற்சாலை இல்லை. நாம் பெட்ரோலை அப்படியேதான் வரவழைத்துக்கொண்டிருக்கிறோம். நமது ராஜ்யத்திற்கு ஒரு எண்ணெய் சுத்திகரிப்பு தொழிற்சாலை அவசியம். அதைப்பற்றியும் மூன்று வருஷங்களாக வற்புறுத்திக்கொண்டு வருகிறோம். அங்கிருந்து பெட்ரோலாக ரயிலில் வருவதை விட சென்னை வந்து, இங்கே சுத்திகரிப்பு செய்வது
6-10 p.m. பல தொழிலாளிகளுக்கு வேலை கிடைப்பது மட்டும் அல்ல. சர்க்காருடைய வருவாயை உயர்த்துவதற்கு வழியாக இருக்கும் என்று சென்ற ஐந்தாறு வருஷங்களாகச் சொல்லியிருக்கிறோம். அவற்றையெல்லாம் மூன்றாவது வருஷத்திலாவது பார்க்கலாமென்றால், பார்க்க முடியாத நிலையில்தான் இருக்கிறோம் என்று தெரிவித்து, இந்த பட்ஜெட்டின் விளைவு அவ்வளவு திருப்திகரமாக இல்லையென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

நம்முடைய ராஜ்யம் சம்பந்தப்பட்ட மட்டில் உணவு நிலைமையும், வேலையில்லாத் திண்டாட்ட நிலைமையும், தொழிலாளி, விவசாயிகள் நிலைமையும் இன்னும் நெருக்கடியாகத்தான் போய்க்கொண்டிருக்கிறது என்ற உண்மையை நாம் ஆராயாமல், நல்ல கவர்ச்சிகரமான முறையிலே சித்தரித்துக் கொண்டு போவது நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வதாகும் என்று தெரிவித்து, இவ்வளவு நேரம் எனக்குப் பேச அனுமதித்த தலைவர் அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்து, என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகின்றேன். வணக்கம்.

6-11 p.m. DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again tomorrow at 1 p.m.

The House then adjourned.

### V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

#### A. Statutory rules, orders and notifications.

69. *Notification issued with G.O. Ms. No.* 183, *Home, dated* 24th *January,* 1958 *reducing the Court Fees payable under Article* 10 *(j) of Schedule II to the Madras Court Fees and Suits Valuation Act,* 1955 *on applications and petitions presented to the Board of Revenue, Madras by Harijans.* [*Laid on the Table of the House under Section* 82 (2) *of the Madras Court Fees and Suits Valuation Act,* 1955.]